


இதற்குமுன் கிடைத்ததில்லை

# இவ்வளவு அதிக பலன்

## இந்த குறைந்த கிரயத்தில்

இந்த சோப்பினால் சுக க்ஷவரத்தை தினந்தோறும் பல மாதங்கள் வரையில் பெறலாம். எந்த சோப்புடனும் ஒப்பிடுவதை இது ஆக்ஷேபிக்கிறது. மிக்க சுத்தமானதும், இதமளிக்கக்கூடிய தாவர எண்ணெய்களிலிருந்து தயாரிக்கப் பட்ட இந்த சோப் நீடித்து நிற்கும் க்ரீம் நுரையை தெளிவான பரிமள வாசனையுள்ளது—வெளியிடுகிறது. நீங்கள் க்ஷவரம் செய்து கொள்ள கோத்ரெஜ் சோப்பை உபயோகித்து திருப்தியடையுங்கள். தாவர எண்ணெய் சோப்புகளை முதல் முதலில் தயாரித்தவர்கள் கோத்ரெஜ் கம்பெனிக்காரர்கள்.

## துரிதமானதும், வழவழவென்ற க்ஷவரங்களுக்கு





மற்ற கோத்ரெஜ் பொருள்கள்: டாய்லெட் சோப்புகள் - க்ளிஸரின் ஹேர் ஆயில்.

100 சத விகிதம் பரிசுத்தத்திற்கு உத்தரவாதம். மிருகக் கொழுப்பு இல்லாதது.

இந்தியாவிலும் அயல் நாடுகளிலும் கணக்கற்ற ஊர்களில் பெரிதும் விரும்பப்படும் இந்த "ரவுண்டுகள்" லக்ஷக்கணக்கான வாடிக்கைக்காரர்களின் நன்மதிப்பை உறுதிப்படுத்துகின்றன.

ஒரு டஜன் ரூ. 3

கோத்ரெஜ் சோப்ஸ், லிட்.—மதராஸ்: 164, பிராட்வே; கொச்சி: 6/36, கல்வத்தி

# நிலத்தில் இறங்கி உழையுங்கள்



உங்களுக்கும் உங்கள் நாட்டுக்கும்

நீங்கள் செய்யவேண்டிய கடமை இது

**உணவு நெருக்கடியை எதிர்த்துப் போரிடுக**

**உணவு உற்பத்தியைப் பெருக்குக**
**மேலும் கூடியமட்டில்**
**தானியத்தைச் சேமியுங்கள்**

AC135 TM

# சரியான நேரம் காட்ட

## ஜேகர் - லீ கோல்சர்



2543 9'' ஜேகர்-லீ கோல்ச்ர் நன்னீர் இறங்காத ஸ்டீல் கேஸ் ரேடியம் டயல், படத்தில் உள்ளது போல. ரூ. 200



2393 மேலே உள்ளது போலவே சென்டர் செகண்டு முள்ளுடன். ரூ. 220



2233 9'' ஜேகர்-லீ கோல்ச்ர், சென்டர் செகண்டு முள், ஸ்டீல் கேஸ், படத்திலுள்ளது போல, டயல் நெ. 2683 மாதிரி. ரூ. 210

2237 மேலே கூறியது போலவே 18 காரட் தங்க கேஸ். ரூ. 540

2783 நெ. 2233 மாதிரி நேர் இணைப்புகளுடன். ரூ. 210



2787 நெ. 2783 மாதிரி 18 காரட் தங்க கேஸ். ரூ. 550

2483 நெ. 2233 மாதிரி சிறிய செகண்டு முள்ளுடன். ரூ. 195

2303 நெ. 2783 மாதிரி சிறிய செகண்டு முள்ளுடன். ரூ. 195



2683 9'' ஜேகர்-லீ கோல்ச்ர்—மிக தட்டை வடிவம் ஸ்டீல்கேஸ், படத்திலுள்ளதுபோல். ரூ. 210



2687 மேலே கூறியது போலவே 18 காரட் தங்க கேஸ். ரூ. 550

**பேவர்-லூபா**

பம்பாய் • கல்கத்தா

FAVRE-LEUBA

இதர பல ரகங்களுக்கு குறிப்புத்தாள் பெட்டி 27-க்கு எழுதிக் கேளுங்கள்.

Stronachs



அவனைவிட வேறொரு மாணவனும் அவ்வளவு அக்கறையாகப் பரீக்ஷையில் தேறுதலேயோ, அல்லது அதிகம் உழைக்கவோ இல்லை. அடிக்கடி பரீக்ஷையில் தோல்வி மேலும் அதிக நேரம் புத்தகங்களுடன் கழிக்கவே தூண்டிற்று. அதில் யாதொரு பிரயோசனமும் இல்லை. படிப்பில் கவனம் செலுத்தவோ அல்லது விஷயங்களை மனதில் வைக்கவோ முடியவில்லை. இவ்வாறு மனமுடையும் தருணத்தில்தான் ஒரு நண்பன் "க்ருஷனை"ச் சிபார்சு செய்தனன்......

மாணுக்கர்கள் மிகவும் தீவிரவாதிகள். ஆனால் கல்வியிலும் பெறும் மதிப்பிற்காக தேக நலத்தை இழப்பதென்னும் கல்வியின் நலங்கள் பயனற்றதே. நீண்ட நேரப் படிப்பு, சுத்தமான காற்றும் தேகாப்பியாசமுமின்மை, இவை சால், மூத்திரக்காய், குடல்கள் இவற்றை மந்திக்கச் செய்கின்றன. அதனால் தேங்கியுள்ள அசுத்தங்கள் ரத்த ஓட்டத்தையும் அசுத்தப்படுத்துகின்றன. ஒவ்வொரு அறிவும் பாதிக்கப் படுகின்றது. அநேகமாக முதன்மையாகத் தேறக் கூடியவர்களும் தோற்கு மாறு ஏற்படலாம்.

தேக உழைப்பின்மையும், நீண்ட நேரம் உட்கார்ந்திருப்பதினாலும் ஏற்படக்கூடிய விஷங்களினால் பாதிக்கப்பட்டால் இன்றே "க்ருஷனை"க் கொண்டு தாக்குங்கள். க்ருஷனிலுள்ள லோக தாதுக்கள் உபாதைகளின் மூல காரணத்தை ஆழுமிடங்களில் தாக்குகின்றன. மூத்திரக் காய்கள், சால் குடல்களும் இயற்கையாகவே இயக்கப்படுகின்றன. பரபரப்பு, உற்சாகமின்மை அசௌகரியம், இவை ஒழிந்து ஊக்கமும், உற்சாகமும் திரும்பக் கிடைக்கின்றன. ஒவ்வொரு மனோக்கிரியிலும் சரியானபடி ஞாயம் வழங்கப்படுகிறீர்கள். கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் "க்ருஷன்" ரூ. 1-10-0க்குக் கிடைக்கின்றது.

"க்ருஷன்" ஈ க்ரிபித்ஸ் ஹ்யூஸ், லோ., லிட். (மான்செஸ்டர், இங்கிலாந்து) அவர்களால் தயாரிக்கப் பட்டது. விநியோகஸ்தர்கள்: கார் அண்டு கம்பெனி, லிமிடெட் பம்பாய், கல்கத்தா, மதராஸ்.




## நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியைப் பெறலாம்




தி கடாவ் மில்ஸ், பைகுளா, பம்பாய் 27. ஆபீஸ்: லக்ஷ்மி பில்டிங், பல்லார்டு பியர், பம்பாய். துணிக்கடை: மூல்ஜி ஜேதா மார்க்கெட், கோவிந்த் சேனக், பம்பாய் 2.

# குழந்தை ஓயாமல் அழுதது—

## —அம்மா விளக்கித்தான் எனக்கு காரணம் புரிந்தது!

"ஏனம்மா குழந்தை இப்படி அழுகிறது? என்னால் தாளமுடி யவில்லையே!"

"சிக்கலே என்ன வென்பதை நான் அறிவேன்—சரிப் படுத்தும் வழி இதோ, பார்!"

5 நிமிஷத்திற்குப் பிறகு

"என்ன ஆச்சரியம்—அழுகை சட்டென நின்று விட்டதே!"

"குழந்தை அசௌகரியத்தினால் தான் அழுதது. ஆனால் ஜான்ஸன்ஸ் பேபி பவுடர் அதன் மென்மையான சருமத்திலுள்ள எரிச்சலைத் தணித்து இதமூட்டியது. துணி மாற்றிய பிறகு தவறாமல் இதை உபயோகிப்பது சுலபம்."

அதற்குப் பிறகு தாயாரின் யோசனைப் படியே நடந்து வந்தேன்—



## இப்பொழுது குழந்தை எச்சமயமும் குஷியாக இருக்கிறான்—

காரணம், ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்!




ஜான்ஸன்ஸ் பேபி பவுடர் உலகிலேயே மிக மென்மையான சருமத்திற்கும் இதமும் சுகமும் அளிப்பதற்கென்று பிரத்தியேகமாக தயாரிக்கப்பட்டது. புத்திசாலிகளான அநேக இளம் தாய்மார்கள் தமது குழந்தைகளுக்கும், தமக்கும் கூட இப் பவுடரை உபயோகித்து வருவதில் ஆச்சரியமொன்றும் இல்லை!

உலகில் மிக அதிகமாக விற்பனையாகும் பேபி பவுடர்!

## ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்

**Johnson's** Reg. Trade Mark BABY POWDER

ஜான்ஸன் & ஜான்ஸன் தயாரிப்பு

ஏகபோக விநியோகஸ்தர்கள்: ஐ. ஸி. ஐ. (இந்தியா) லிமிடெட்

## சுதந்திர தின விழா விசேஷ விற்பனை !

ஆகஸ்டு 15 தேசிய சுதந்திர விழா கொண்டாட, புதிதாக வந்துள்ள ஸ்விஸ் லீவர் கடிகாரங்களை வாடிக்கைக்காரர்களுக்கு செப்டம்பர் 15 வரை, குறைந்த விலையில் விற்பனை செய்கிறோம். 15,17 ஜூவல் கடிகாரங்கள் 5ம், மற்றவை 3 வருஷ உத்தரவாதம் உள்ளவை. கடிகாரத்துடன் உத்தரவாதப் பத்திரம், அழகிய ஸ்ட்ராப், வெல்வெட் பெட்டி இவை இலவசமாக அளிக்கப்படும். பாக்கிங், தபால் செலவு, விற்பனை வரி இன்றி வி. பி. பி. யில் பெற்றுக் கொள்ளலாம்.



### இலவசப் பரிசுகள்

இரண்டு கடிகார ஆர்டருக்கு ஒரு அமெரிக்கன் ப்ளாஸ்டிக் டார்ச் லைட்டோ, தங்க மூடி போட்ட அமெரிக்கன் பவுண்டன் பேனாவோ அளிக்கப்படும். மூன்று கடிகாரங்களுக்கு ஒரு பாக்கெட் வாட்சும், நான்கு கடிகாரங்களுக்கு ஒரு ஆபீஸ் டேபிள் க்ளாக்கும் அளிக்கப்படும்.



சென்டர் செகண்டு சைஸ் - 10½

| | | ஜூவல்ஸ் | ரூ. |
|---|---|---|---|
| 513 | க்ரோம் ஸ்டீல்பேக் | 5 | 22 |
| 514 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 5 | 25 |
| 515 | முழு ரோல்டு கோல்டு | 5 | 28 |
| 516 | க்ரோம் ஸ்டீல்பேக் | 7 | 35 |
| 517 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 7 | 38 |
| 518 | முழு ரோல்டு கோல்டு | 7 | 41 |
| 576 | க்ரோம் ஸ்டீல்பேக் | 15 | 43 |
| 577 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 15 | 48 |
| 578 | 20 மைக்ரோன் தங்கம் | 15 | 58 |
| 579 | க்ரோம் ஸ்டீல்பேக் | 17 | 65 |
| 580 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 17 | 70 |
| 581 | 20 மைக்ரோன் தங்கம் | 17 | 80 |



சிறிய வட்ட வடிவம் - சைஸ் 8¾

| | | | |
|---|---|---|---|
| 525 | க்ரோம் ஸ்டீல்பேக் | 5 | 26 |
| 526 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 5 | 29 |
| 527 | முழு ரோல்டு கோல்டு | 5 | 32 |
| 528 | க்ரோம் ஸ்டீல்பேக் | 7 | 31 |
| 529 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 7 | 34 |
| 530 | முழு ரோல்டு கோல்டு | 7 | 37 |
| 582 | க்ரோம் ஸ்டீல்பேக் | 15 | 55 |
| 583 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 15 | 60 |
| 584 | 20 மைக்ரோன் தங்கம் | 15 | 70 |



லேடீஸ் - சைஸ் 5¼

| | | | |
|---|---|---|---|
| 654 | க்ரோம் ஸ்டீல்பேக் | 5 | 40 |
| 655 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 5 | 43 |
| 656 | முழு ரோல்டு கோல்டு | 5 | 46 |
| 657 | க்ரோம் ஸ்டீல்பேக் | 7 | 45 |
| 658 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 7 | 48 |
| 659 | முழு ரோல்டு கோல்டு | 7 | 51 |
| 672 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 15 | 63 |
| 674 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 15 | 70 |
| 676 | முழு 9 காரட் தங்க கேஸ் | 17 | 120 |
| 677 | முழு 18 காரட் தங்க கேஸ் | 17 | 140 |
| [illegible] | [illegible] | | |



கர்வெக்ஸ் - சைஸ் 7¾

| | | ஜூவல்ஸ் | ரூ. |
|---|---|---|---|
| 549 | க்ரோம் ஸ்டீல்பேக் | 5 | 33 |
| 550 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 5 | 36 |
| 551 | முழு ரோல்டு கோல்டு | 5 | 39 |
| 552 | க்ரோம் ஸ்டீல்பேக் | 7 | 39 |
| 553 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 7 | 42 |
| 554 | முழு ரோல்டு கோல்டு | 7 | 45 |
| 600 | க்ரோம் ஸ்டீல்பேக் | 15 | 50 |
| 601 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 15 | 55 |
| 602 | முழு ரோல்டு கோல்டு | 15 | 60 |
| 605 | 20 மைக்ரோன் தங்கம் | 16 | 65 |
| 606 | க்ரோம் ஸ்டீல்பேக் | 17 | 60 |
| 607 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 17 | 67 |



டான்னோ ரவுண்டு க்ளாஸ் - சைஸ் 10½

| | | | |
|---|---|---|---|
| 543 | க்ரோம் ஸ்டீல்பேக் | 5 | 37 |
| 544 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 5 | 40 |
| 545 | முழு ரோல்டு கோல்டு | 5 | 43 |
| 546 | க்ரோம் ஸ்டீல்பேக் | 7 | 41 |
| 547 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 7 | 44 |
| 548 | முழு ரோல்டு கோல்டு | 7 | 47 |
| 591 | க்ரோம் ஸ்டீல்பேக் | 15 | 58 |
| 592 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக் | 15 | 63 |
| 593 | 20 மைக்ரோன் தங்கம் | 15 | 68 |



அலாரம் டேபிள் கடிகாரம் (நெ. 683)

| | | |
|---|---|---|
| 681 | ஆபீஸ் டேபிள் க்ளாக், சதுர வடிவம், தனி முழு க்ரோம் டயல் 3½ | 20 |
| 682 | அலாரம் டேபிள் க்ளாக், டயல் 4'' | 19 |
| 683 | அலாரம் டேபிள் க்ளாக் முழு க்ரோம் கேஸ், ரேடியம் டயல், சைஸ் 4'' | 21 |
| 684 | மெடாலை அலாரம் டேபிள் க்ளாக் | |

விரைவில் வெளிவருகிறது!



ஸ்ரீ கிருஷ்ணா ப்ரொடக்ஷன்ஸ்

# சந்திரிகா

தமிழ் — மலையாளம்

டைரக்ஷன் V. S. ராகவன்
ஸ்டுடியோ வாஹினி

ஸ்ரீ கிருஷ்ணா ப்ரொடக்ஷன்ஸ்

# விலையில் குறைவு!






**வெலாக்ஸ் 6 - 18 H.P.**

# வாக்ஸால் கார்கள்

**வைவர்ன் 4 - 12 H.P.**






## ஜெனரல் மோட்டார்ஸ் தயாரிப்பு

அதிகாரம் பெற்ற டீலர்கள்

| டி. வி. சுந்தரம் ஐயங்கார் அண்ட் ஸன்ஸ் லிமிடெட் | சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட் |
| --- | --- |
| மதுரை - திருச்சிராப்பள்ளி<br>திருநெல்வேலி - புதுக்கோட்டை | மௌண்ட் ரோடு<br>சென்னை |

TVSZ - 13

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 10 } ஆகஸ்டு 20 { விக்ருதி
இதழ் 3 } { ஆவணி 4



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் வரும் பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற  தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மலர் 10 கல்கி இதழ் 3

# என்ன சேதி ?

## கல்லைப் போட்டார் !

வருகிற வாரத்தில் காங்கிரஸ் அக்கிராசன பதவிக்குத் தேர்தல் நடக்கப் போகிறது. இதற்கு முன்னால் என்றும் இல்லாதபடி அதிகமான பெயர்கள் இந்த வருஷத்தில் மேற்படி பதவிக்குப் பிரேரணை ஆயின. பண்டித ஜவாஹர்லால் நேருவின் பெயரும் பிரேரேபிக்கப்பட்டதாக அறிந்ததும் நம்மில் பலர் குதூகலம் அடைந்தோம். ஜவாஹர்லால்ஜி காங்கிரஸ் தலைவர் ஆகிவிட்டால் அந்த மகத்தான ஸ்தாபனத்துக்குச் சமீப காலத்தில் ஏற்பட்டிருக்கும் மாசு மறுக்கள் எல்லாம் நீங்கிப் பழையபடி புனிதமும் மகிமையும் அடையும் என்று எதிர்பார்த்தோம். ஆனால் ஜவாஹர்லால்ஜி அத்தகைய ஆசையில் கல்லைத் தூக்கிப் போட்டு விட்டார். அக்கிராசன பதவித் தேர்தலுக்குத் தாம் நிற்க முடியாது என்று சொல்லிவிட்டார். பிரதம மந்திரி வேலை பார்ப்பதற்கே தமக்கு நேரம் போதவில்லை யென்றும் காங்கிரஸ் அக்கிராசனப் பொறுப்பையும் சேர்த்து வகிக்க முடியாது என்றும் சொல்லி விட்டார். ஜவாஹர்லால்ஜி சொன்னால் சொன்னது தான் ! அவருடைய முடிவை மாற்ற யாரால் முடியப் போகிறது ?

## காங்கிரஸின் வியாதி

ஜவாஹர்லால்ஜி காங்கிரஸ் தலைமைப் பதவி வேண்டாம் என்று விடுத்த அதே அறிக்கையில் இன்னும் சில விஷயங்களையும் சொல்லி யிருக்கிறார். "காங்கிரஸின் உள்ளும் புறமும் (ஆத்மாவிலும் உடம்பிலும்) நோய் பிடித்திருக்கிறது. இதை நினைத்தால் மிகவும் வருத்தமா யிருக்கிறது!" என்று வேதனைப்பட்டுச் சொல்லியிருக்கிறார். காங்கிரஸின் ஆத்மா நோய்ப்பட்டிருக்கிறது என்று ஜவாஹர்லால்ஜி சொல்லி யிருப்பது காங்கிரஸ் வாதிகள் அந்த ஸ்தாபனத்தின் உயர்ந்த இலட்சியங்களை மறந்து விட்டதைக் குறிப்பிடுகிறது. காங்கிரஸின் உடம்பின் வியாதி என்று சொல்வது காங்கிரஸ் ஸ்தாபன அமைப்பில் ஏற்பட்டிருக்கும் அருவருப்பான ஊழல்களைக் குறிப்பிடுகிறது. இந்த இரண்டு வகை வியாதிகளையும் போக்கிக் காங்கிரஸுக்குப் பூரண ஆரோக்கியத்தை அளிக்கும் மார்க்கங்களை நாஸிக் நகரில் கூடப்போகும் மகா சபையில் ஆலோசித்து முடிவு செய்யவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் இன்று காங்கிரஸைப் பிடித்திருக்கும் வியாதி நாளை தேசத்தையும் பிடித்துவிடக் கூடும்.

## பஞ்சாயத்து ஊழல்

காங்கிரஸ் ஸ்தாபனம் சம்பந்தமான ஊழல்களில் மிகப் பெரிய ஊழல் மாகாணக் கமிட்டி அங்கத்தினரைத் தேர்ந்தெடுக்கும் புதிய முறையாகும். முன்னேயெல்லாம் நாலு அணாச் சந்தா கொடுத்துக் காங்கிரஸ் இலட்சியத்தில் கையெழுத்திட்ட அங்கத்தினரெல்லாருக்கும் மாகாணக் கமிட்டி அங்கத்தினரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை இருந்தது. இப்போது ஆங்காங்கே காங்கிரஸ் பஞ்சாயத்துக்கள் அமைக்கப்பட்டு அந்தப் பஞ்சாயத்து அங்கத்தினர் மாகாணக் கமிட்டி அங்கத்தினரைத் தேர்ந்தெடுக்கிறார்கள். பஞ்சாயத்து அங்கத்தினர் ஒன்பது முதல் எண்பது வரை இருக்கிறார்கள். முப்பது முதல் அறுபது வரை அங்கத்தினரைக்கொண்ட பஞ்சாயத்துக்கள் அதிகம். "முப்பது அங்கத்தினரில் பதினைந்து பேரை விலைக்கு 'வாங்கி' விட்டால் மாகாணக் கமிட்டி அங்கத்தினர் ஆகிவிடலாம்" என்ற ஆசை சில பழைய காங்கிரஸ் வாதிகளுக்கும் புதிய காங்கிரஸ்வாதிகளுக்கும் ஏற்பட்டு விடுகிறது. எனவே, காங்கிரஸ் ஸ்தாபனத்தின் அடிப்படையில் லஞ்சப் பேய் குடிகொண்டு விடுகிறது. அப்புறம் அந்தப் பேய் வைத்ததுதானே சட்டம் ! மாகாணக் . கமிட்டி அபேட்சகர்கள் சிலர் கையாண்ட முறைகளைப் பற்றி அறிந்தால் தாதாபாய் நௌரோஜி முதல் காந்தி மகாத்மா வரையில் காங்கிரஸை வளர்த்த மாபெரும் தலைவர்கள்

திடுக்கிட்டு வேதனைப்படுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. சில அபேட்சகர்கள் இருபதினாயிரம் முப்பதினாயிரம் வரையில் பணம் செலவழித்ததாக அறிகிறோம். வேறு சில அபேட்சகர்கள் பஞ்சாயத்து அங்கத்தினரைக் கொண்டுவந்து சிறைப் படுத்தி வைப்பதுபோல் சொந்தப் பாதுகாப்பில் வைத்திருந்தார்கள் என்று கேள்விப் படுகிறோம். ஒரு அபேட்சகர் நாற்பத்தைந்து பஞ்சாயத்து அங்கத்தினர் உள்ள தொகுதியில் நாற்பத்தெட்டு டாக்ஸி கார்களை அமர்த்தி யிருந்தாராம்! "மாகாணக் கமிட்டித் தேர்தல்தானே? எப்படியேனும் போகட்டும்! மேலே எல்லாம் சரியாயிருக்குமல்லவா?" என்று ஆறுதல் கொள்ள இடமில்லை. ஏனென்றால், மாகாணக் கமிட்டியின் அங்கத்தினர்தான் காங்கிரஸ் பிரதிநிதிகளுமாவார்கள். இவர்கள் தான் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் அங்கத்தினர்களையும் தேர்ந்தெடுப்பவர்கள். ஆகவே கீழே தொற்றும் வியாதி மேலேயும் போவதற்கு இடமிருக்கிறது. காங்கிரஸ் அமைப்பின் தூய்மையைக் காப்பாற்ற வேண்டுமானால் பஞ்சாயத்து மூலம் மாகாணக் கமிட்டி அங்கத்தினர் தேர்ந்தெடுக்கும் முறையை மாற்றவேண்டும்.

# அங்கப் போர்

*சென்னைச் சட்டசபையின் சென்ற வாரத்து நடவடிக்கைகள் ஒரே சோக நாடகமாயிருந்தன. பாத்திரங்கள் அனைவரும் ஏகமனதாக ஒரே ராகத்தை ஆலாபனம் செய்தார்கள்; ஒரே பாட்டைப் பாடினார்கள். ராகம்: முகாரி; பாட்டு: பஞ்சப்பாட்டு.*

*பெரும்பாலான அங்கத்தினர்கள் கண்ணில் ஒரு சொட்டுத் தண்ணீர் வராமல் அழுது தீர்த்தார்கள். ஆனால் மதுரை ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர் அவர்கள் மட்டும் இதற்கு மாறாக நடந்து கொண்டார். ஒரு இராமாயணத்திலிருந்து அவருக்கு வந்த ஒரு சோகமான கடிதத்தைப் படிக்கும்போது ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர் கண்ணீர் பெருக்கி அழுதுவிட்டார்.*

*ஸ்ரீ வைத்தியநாதய்யர் அழுதபோது சட்டசபையில் இரண்டு நிமிஷ நேரம் நிச்சப்தம் குடிகொண்டிருந்ததாகப் பத்திரிகைகளில் செய்தி வெளியாகியிருக்கிறது. ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர் அவர்களை இதற்காகவாவது அவசியம் பாராட்ட வேண்டும். இரண்டு நிமிஷ நேரம் யாரும் வெறும் பேச்சுப் பேசாமல் நிறுத்தி வைத்திருந்தார் அல்லவா!*

★

*சென்னைச் சட்டசபையில் அங்கத்தினர் ஒருவர் கண்ணீர் விட்ட சம்பவம் இது இரண்டாவது. முதல் சம்பவம் இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் நடந்தது. ஆலயங்களில் பெண்களுக்குப் பொட்டுக் கட்டும் வழக்கத்தை நிறுத்துவதற்காக டாக்டர் முத்துலட்சுமி அம்மாள் ஒரு மசோதாவைக் கொண்டுவந்தார். அப்போதிருந்த சட்டசபை அங்கத்தினர் சிலர் அதை எதிர்த்தார்கள். எதிர்ப்புக்கு விநோதமான காரணமும் சொன்னார்கள். "பொட்டுக் கட்டும் வழக்கத்தை நிறுத்தினால் பரத நாட்டியம் என்னும் அபூர்வமான கலை போய்விடும்" என்று சொன்னார்கள். இதைக் கேட்ட டாக்டர் முத்துலட்சுமி அம்மாள் துயரக் கடலில் ஆழ்ந்தார். "பாவிகளே! உங்கள் கலை நாசமாய்ப் போகட்டும்! அதற்காகப் பொட்டுக் கட்டும் வழக்கத்தை வைத்திருக்க வேண்டுமா! இது முறையா! இது தருமமா! இது தர்மந்தானா!" என்று சொல்லிக் கண்ணீர் விட்டு அழுது விட்டார்.*

*ஒரு பெண்மணியின் கண்ணீருக்கு முன்னால் ஆண் பிள்ளைகளின் எதிர்ப்பு நிற்க முடியுமா! டாக்டர் முத்துலட்சுமி அம்மாள் கொண்டு வந்த மசோதா நிறைவேறிச் சட்டமாகியது.*

*அதனால் பரதநாட்டியக் கலை நாசமாகி விடவில்லை யென்பதையும் நாம் காண்கிறோம். முன்னம் கோயில்களில் மட்டும் இருந்த பரத நாட்டியக் கலை இப்போது வீட்டுக்கு வீடு புகுந்து கீர்த்தனம் செய்து வருகிறது!!*

★

*கட்டாய ஹிந்தியை சர்க்கார் ரத்து செய்து விட்டதைப்பற்றிக் கல்வி மந்திரி ஸ்ரீ மாதவ மேனன் சென்னைச் சட்டசபையில் பேசினார். "தேன் குடிக்கச் சொல்லி வண்டைக் கட்டாயப்படுத்த வேண்டிய அவசியம் உண்டா! ஹிந்தி தேனைப் போன்றது. அதைப் படிக்கச் சொல்லி மாணவர்களைக் கட்டாயப் படுத்த வேண்டிய அவசியம் இல்லை" என்றார்.*

*மந்திரி மேனன் தேனொழுகப் பேசி யிருக்கிறார் என்பதில் சந்தேகம் இல்லை.*

★

*"பண்டைக் காலத்தில் நம் பாரத நாட்டில் செங்கோல் பிடித்துச் செம்மையாக ஆட்சி செலுத்திய பெண்மணிகளும், வாள் பிடித்து வீரப் போர்புரிந்த வீராங்கனைகளும் வாழ்ந்து வந்திருக்கிறார்கள்."* —**பவநகர் மகாராஜா.**

*பெண்கள் செங்கோல் பிடிப்பதையும் வாள் பிடிப்பதையும் இப்பொழுது காண முடியாவிட்டாலும் அவர்கள் அகப்பை பிடிப்பதை வீட்டுக்கு வீடு காண முடிகிறது.*

★

*"இல்லாத வாகின்களை நான் ஓட வைக்க வேண்டுமென்கிறார்கள். விளையாத நெல்லை விளையவைக்க வேண்டுமென்கிறார்கள். 20 வருஷத்துக்கு முன் செத்துப் போனவர்களைக் கூட நான் காப்பாற்ற வேண்டுமென்கிறார்கள். இந்த அசாத்தியமான காரியங்களைச் செய்ய எந்த மந்திரியால்தான் முடியும்!"*

—**உணவு மந்திரி முன்ஷி.**

*இவ்வளவு அசாத்தியமான காரியங்களைச் செய்வதுடன் ஸ்ரீ முன்ஷி வாயைமூடிக் கொண்டிருக்க வேண்டு மென்ற அசாத்தியத்தையும் பொது ஜனங்கள் எதிர்பார்க்கிறார்கள்!*

# கொள்ளை மலிவு!




*திருநெல்வேலியில் உணவுப் பஞ்சம் காரணமாகப் பல ஏழைகள் தங்களுடைய குழந்தைகளை இரண்டு ரூபாய்க்கு ஒரு குழந்தை வீதம் விற்கும்படியான பரிதாப நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்று சென்னை அசெம்பிளியில் ஓர் அங்கத்தினர் கூறினார்.*

---

"டில்லியில் சுமார் பத்தாயிரம் டோங்கா ஓட்டிகள் தங்கள் குதிரைகளுக்கு அளிக்கப்பட்டு வந்த கொள்ளு ரேஷன் நிறுத்தப்பட்டதை ஆட்சேபித்து இன்று அடையாள ஸ்டிரைக் நடத்தினர்." —டில்லிச் செய்தி.

இந்த அடையாள ஸ்டிரைக் அவசியமானது என்பதை டில்லிக் குதிரைகள் ஒப்புக் கொள்ளுமென்று நம்புகிறோம்.

★

சென்ற வாரத்து அக்கப்போரில், சென்னைத் துறைமுகத்தில் துருப்பிடித்துக் கிடந்த மோட்டார் லாரிகளைப் பற்றிப் பிரஸ்தாபிக்கப்பட்டிருந்தது. இந்த அசிரத்தைக்குக் காரணமான குற்றவாளிகளைக் கண்டு பிடிப்பதற்காக சர்க்கார் ஒரு கமிட்டி நியமிப்பதற்குள், குற்றவாளிகள் இல்லாமற் போய் விடுவார்கள் என்று எழுதப்பட்டிருந்ததல்லவா! இது வேடிக்கையில்லை, நிஜமாகவே நடக்கக் கூடியதுதான் என்பதற்கு இப்பொழுது ஒரு ருஜு கிடைத்திருக்கிறது! டெல்லியில் ஸ்ரீ ரிசி என்ற ஒரு உணவு இலாகா அதிகாரிமீது லஞ்சம் வாங்கியதாக ஒரு வழக்கு நடந்து வருகிறது. அந்த வழக்கில் சர்க்கார் சாட்சியாக ராம் ரதிராம் என்பவரைப் போட்டிருந்தார்கள். மேற்படியார் சாட்சி சொல்லவேண்டிய சமயம் வந்தபோது, கோர்ட் பியூன் "ராம் ரதிராம்" "ராம் ரதிராம்" "ராம் ரதிராம்" என்று மூன்று தடவை அலறினான். சாட்சி ஆஜராகவில்லை. சாட்சி ஏன் ஆஜராகவில்லை என்று விசாரித்துப் பார்த்தபோது மேற்படி ராம் ரதிராம் இறந்து 13 வருஷங்கள் ஆகிவிட்டன என்று தெரியவந்ததாம்! சர்க்கார் யார் மீதாவது நடவடிக்கை எடுத்துக் கொண்டாலோ, அல்லது சாட்சியாகக் கூப்பிட்டாலோ, கட்டாயம் அவர்கள் உயிரோடிருந்து தீரவேண்டுமா, என்ன!

★

"இலங்கையில் ஒரே பிரசவத்தில் மூன்று மந்திரிகள்." —பத்திரிகைத் தலைப்பு

இம்மாதிரி விபத்தைத் தடுப்பதற்குக் கர்ப்பத் தடை முறை மிக மிக அவசியமானது என்பதில் சந்தேகமில்லை!

★

"பெல்ஜிய மன்னர் லியோபோல்டு மன்னர் சிம்மாசனத்துக்குத் திரும்பி வருவதை ஆட்சேபித்து பிரெஸ்ஸெல்ஸ் மக்கள் டிராம் வண்டிகள் மீது கற்களை வீசினர்." —ஒரு செய்தி

குறி தவறாமல் வீசினார்களா என்று சென்னை டிராம் பிரயாணி ஒருவர் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறார்!

★

"திருநெல்வேலி ஜில்லாவில் சில கிராமங்களில், தாய்மார்கள் கைக்குழந்தைகளை இரண்டு ரூபாய்க்கும், பெரிய குழந்தைகளை ஐந்து ரூபாய்க்கும் விற்கிறார்கள்."
—சட்டசபையில் ஒரு எம். எல். ஏ.

கறுப்பு மார்க்கெட்காரர்கள் கண்களில் இன்னும் இந்த வியாபாரம் படவில்லை போலும்!

# நிறை போட முடியுமா?

பாரத புண்ணிய பூமி சுதந்திரம் பெற்று மூன்று வருஷங்கள் ஆகிவிட்டன. சென்ற பதினைந்தாம் தேதி சுதந்திர இந்தியாவின் நாலாவது ஆண்டு ஆரம்பமாகியிருக்கிறது.

இந்த மூன்று வயதுக் குழந்தையை எத்தனையோ பாலாரிஷ்டங்கள் கவிந்து கொண்டு கஷ்டப்படுத்தி வருகின்றன.

சுதந்திரம் பெற்றதும் பெருததுமாக இந்தியா புதிது புதிதாகக் கிளம்பிய எத்தனையோ பிரச்னைகளைச் சமாளிக்க நேர்ந்தது; எத்தனையோ கஷ்ட நஷ்டங்களையும் ஏற்க நேர்ந்தது.

குழந்தைப் பருவத்திலுள்ள சுதந்திர இந்தியாவின் கழுத்தை ஈவு இரக்கமின்றி நெரித்துக் கொல்ல எத்தனையோ பேய் பிசாசு பூதங்கள் கோரப் பற்களுடன் பாய்ந்து வந்தன.

இருநூறு ஆண்டுகளுக்கு மேல் அன்னியர் ஆதிக்கத்தின் கீழ் அல்லலுற்றதால் சிருஷ்டிக்கப்பட்ட பிரச்னைகள் ஒரு புறம் நெருக்கின.

இரண்டாவது மகாயுத்தம் காரணமாக ஏற்பட்ட பற்றுக்குறையும் பஞ்சமும் பாதகமான விலைவாசிகளும் மற்றொரு புறம் நெருக்கின, இன்றும் நெருக்கிக் கொண்டிருக்கின்றன.

மேற்படி யுத்தம் காரணமாக ஏற்பட்ட பிரச்னைகளினால் பல நூற்றாண்டுகளாகச் சுதந்திரத்துடன் இருந்து வரும் வல்லரசுகளே தத்தளித்து வரும் போது, நேற்றுச் சுதந்திரம் பெற்ற இந்தியா அவற்றை உடனே சமாளித்து விடுவது சாத்தியமா?

இந்தப் பிரச்னைகளைத் தவிர பிரிவினையால் ஏற்பட்ட மதவெறி அநாகரிகமான காட்டு மிராண்டிகள் வாழ்ந்த பண்டைய உலகத்துக்கு இந்தியாவை சரசர வென்று இழுத்துக் கொண்டு போய்த் தள்ள முயற்சித்தது.

இவ்வாறு நாலாபுறத்திலிருந்தும் நெருக்கிய சோதனைகளைக் கண்டு நிலைகுலையாமல் அவற்றைச் சமாளிக்கும் பேராற்றல் படைத்த தலைவர்கள் இந்தியாவுக்குக் கிடைத்தது பாரத மக்களின் பாக்கியம் என்றே சொல்ல வேண்டும்.

அத்தகைய அருமைத் தலைவர்கள் நம்மிடையே இருக்கும் வரையில், நாம் தற்காலிகமான அரிஷ்டங்களையும் ஆபத்துக்களையும் கண்டு ஏன் கலங்க வேண்டும்? நாற்பது வருஷங்களுக்கு மேலாகப் பாடுபட்டுப் பாரத நாட்டுக்குச் சுதந்திரத்தை ஈட்டித் தருவதில் வெற்றி பெற்ற தலைவர்கள் நாலு வருஷங்களில் சுபிட்சம் ஏற்படும்படி செய்வதில் வெற்றி பெறுவார்கள் என்று திட நம்பிக்கை கொள்வோம்.

* * *

கவிச் சக்கரவர்த்தி பாரதியாரின் கனவு நனவாகிப் பாரத நாடு ஆனந்த சுதந்திரம் அடைந்தது. ஆனால்,

வயிற்றுக்குச் சோறுண்டு
கண்டீர்—இங்கு
வாழும் மனிதர் எல்லோர்க்கும்

என்ற மகாகவியின் திருவாக்கு நிறைவேறும் காலம் இன்னும் வரவில்லை.

அன்ன விசாரமும் ஆடை விசாரமும் பன்மடங்கு அதிகமாகித் தலைவர்களைத் திக்கு முக்காடச் செய்திருக்கின்றன; தேச மக்களைக் கண் கலங்கும்படி செய்திருக்கின்றன. கஷ்டம் தாங்க முடியாமல் அவர்கள் காங்கிரசையும் காங்கிரஸ் சர்க்கார்களையும் கண்டிக்க முற்பட்டிருப்பதில் ஆச்சரியமில்லை.

எனினும், இத்தனை கஷ்டங்களுக்கு இடையிலும் இந்தியா சுதந்திர நாடு என்ற குதூகலம் எல்லோருக்கும் இருக்கத்தான் செய்கிறது.

இமயம் முதல் குமரி வரையிலும், பம்பாயிலிருந்து கல்கத்தா வரையிலும் சுதந்திர விழா குதூகலமாகக் கொண்டாடப் பட்டதே அதற்குச் சான்றாகும்.

உயிரினும் இனிய சுதந்திரத்தைக் கொண்டாடும் விஷயத்தில் எந்தப் பிரச்னைதான் குறுக்கிட முடியும்?

எனினும் வருஷா வருஷம் மக்களின் குதூகலம் குறைந்து வருவதைத் தலைவர்கள் நன்கு உணரவேண்டும். மற்றெல்லாவற்றையும் விட உணவுப் பிரச்னை முக்கியமானதால் சிறிதும் தாமதமின்றி அதற்குப் பரிகாரம் தேட வேண்டும். "எந்தக் கஷ்டங்களையும் தாங்குவதற்கு உங்களுக்குச் சக்தி இருக்கவேண்டும்" என்று ஜனங்களைப் பார்த்துக் கூறுவதில் அர்த்தம் உண்டு. ஆனால் "பட்டினி கிடந்து சாகவும் உங்களுக்குச் சக்தி இருக்கவேண்டும்" என்று யாராவது கூறினால் ஜனங்களால் அதைச் சகிக்க முடியுமா? அந்தக் கூற்றைக் கேட்டு உலகம் சிரிக்கும்.

நமது மாபெரும் தலைவர்களின் அருமுயற்சியினால் சென்ற மூன்று வருஷங்களில் பாரத நாடு எவ்வளவோ சீரும் சிறப்பும் பெற்று முன்னேற்றம் அடைந்திருக்கிறது. இந்த உண்மையை உலக நாடுகள் ஒத்துக் கொள்கின்றன.

நமது தலைவர்கள் அரசாங்க நிர்வாகத்தில் பல வருஷம் அனுபவம் பெற்றவர்களைக் காட்டிலும் தாங்கள் அதிகத் திறமை வாய்ந்தவர்கள் என்பதை நிருபித்திருக்கிறார்கள்.

ஆயுத வலிமையிலும் கைத் தொழில் துறையிலும் மிகப் பிற்போக்கான நிலையில் இருந்து வரும் இந்தியா, நேர்மையிலும் நெறி தவறாமையிலும் ஆத்ம பலத்திலும் வல்லரசுகளுக்குச் சமமான மதிப்பையும் செல்வாக்கையும் அடைந்திருக்கிறது.

ஆசியாவில் மாத்திரமல்ல, அகில உலகிலும் சுதந்திரத்துக்காகப் பாடுபடும் மக்களுக்குப் பூரண ஆதரவு அளித்து, உலகத்திலேயே உண்மையான ஜனநாயக தர்மம் தழைத்து ஓங்கும்படி செய்யும் மகத்தான பொறுப்பைத் திறம்பட வகித்து வருகிறது.

காந்தி மகான் காட்டிய அன்பு வழியை அடிப்படையாகக் கொண்டு சுதந்திரம் பெற்றதைப் போல, நமது தாய்த் திருநாடு அதே வழியைப் பின்பற்றிச் சர்வதேசப் பிரச்னைகளையும் தீர்க்கப் பெருமுயற்சி செய்து வருகிறது.

இவ்விதம் மிகக் குறைந்த கால அளவில், மூன்றே வருஷங்களில் பாரத நாடு நிறைவேற்றி யுள்ள அற்புத சாதனைகளைக் கணக்குப் போட்டுப் பார்த்து அளவிட முடியுமா? அவற்றின் மதிப்பை பவுன்களாலும் ரூபாய்களாலும் நிறைபோடத்தான் முடியுமா?

உலகத்தில் சுதந்திரம் அடைந்த சகல நாடுகளும் எத்தனையோ மகத்தான சோதனைகளைச் சமாளித்துத்தான் தீர வேண்டி யிருந்தது என்பதைச் சரித்திரங்கள் அத்தியாயம் அத்தியாயமாகக் கூறுகின்றன.

புதிதாகச் சுதந்திரம் பெற்ற பர்மா, இந்தோனேஷ்யா முதலிய நாடுகளைக் கலகமாகிற பூதங்கள் விழுங்கிவிட முயற்சித்து வருவதைப் பிரத்தியட்சமாகக் காண்கிறோம். சுதந்திரம் பெற்ற கொரியா இன்று கொடிய யுத்தத் தீயினால் அழிந்து வருகிறது.

அப்படியிருக்க, தற்காலிகமாகக் கொக்கரித்து வரும் கோரப் பிரச்னைகளைக் கண்டு நாம் ஏன் கலங்கவேண்டும்?

## முரட்டுக் காளை!




விலைவாசிகளின் அநியாய உயர்வைத் தடுக்க இந்திய சர்க்காருக்கு அதிகாரம் அளித்துப் பார்லிமெண்டில் தீர்மானம் நிறைவேறி யிருக்கிறது.

# பொய்மான் கரடு

## கல்கி

சந்திரா

'கொப்பனம்பட்டி கொலைக் கேஸ்' என்னும் மர்மமான வழக்கு சேலம் ஜில்லாவில் சில காலம் பிரசித்தமாயிருந்தது. சேலம் - நாமக்கல் சாலையில் உள்ள 'பொய்மான் கரடு' என்னும் குன்றின் அக்கம் பக்கத்தில் அந்த மர்ம வழக்கின் சம்பவங்கள் நிகழ்ந்தன. மேற்படி வழக்கில் மர்மம் என்ன என்பது கதையின் இந்தக் கடைசிப் பகுதியில் வெளியாகிறது.

### 19

கதை சொல்லிக் கொண்டே வந்த மோட்டார் டிரைவர் வண்டியை நிறுத்தியதும், மறுபடியும் 'பொய்மான் கரடு'க்குச் சமீபம் வந்திருக்கிறோம் என்று தெரிந்து கொண்டேன். இடது பக்கத்தில் செங்குத்தாகக் கரிய குன்று நின்றது. மழைக்கால் இருட்டுச் சூழ்ந்திருந்த படியால் குகையும் மானும் கண்ணுக்குத் தெரியவில்லை. கார் செல்லும் சத்தமும் கதை சொன்ன குரலும் நின்ற உடனே மழைத் தூற்றலின் சளசள சத்தமும் பூமியில் மழை விழுந்ததும் எங்கிருந்தோ கிளம்பும் ஆயிரக்கணக்கான சிறிய ஜீவராசிகளின் கதம்பக் குரலும் சேர்ந்து கேட்டன.

"இப்போது இங்கே நின்று என்ன உபயோகம்? இருட்டில் ஒன்றும் தெரியவில்லையே?" என்றேன்.

இப்படிச் சொல்லி வாய் மூடுவதற்குள்ளே பளிச் சென்று ஒரு பெரிய மின் வெட்டுத் தோன்றிச் சுற்றிலும் சூழ்ந்திருந்த காரிருளை அகற்றிக் குன்றுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டியது. அவ்விதம் மின்னிய நேரத்தில் பொய் மான் குகைக்குள்ளே நெளிந்து நெளிந்து ஒரு பளபளப்பான கயிறு சென்றதையும், குகைக் குள்ளிருந்து கிரீச் என்று சத்தமிட்டுக் கொண்டு ஒரு சிறிய பிராணி வெளிப்பட்டு ஓடி வந்ததையும் பார்த்தோம். பாம்புக்குப் பயந்து அந்தக் குகைக் குள்ளிருந்த மான் வெளியே ஓடி வந்ததாகவே தோன்றியது. அடுத்த நிமிஷம் மறுபடியும் நாலாபுறமும் அந்தகாரம் சூழ்ந்து கொண்டது. கரிய பாறை மட்டும் பயங்கரமாக நின்றது.

மின்னலில் கண்ட காட்சி என்னைச் சிறிது அரட்டி விட்டது என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். "சரி, போகலாமே? இருட்டில் இங்கே என்னத்தைப் பார்க்கிறது?" என்றேன்.

வண்டி நகரத் தொடங்கியது. சாலையின் வலப்புறத்தில் இருந்த குடிசைகளில் இருட்டும் நிச்சப்தமும் குடி கொண்டிருப்பதைக் கவனித்தேன். "இந்தக் குடிசைகளையே பார்க்க முடியவில்லையே! அரை மைல் தூரத்திலுள்ள செங்கோடக் கவுண்டரின் குடிசை எங்கே தெரியப் போகிறது? மழை இல்லாமல் நிலவு நாளாக இருந்தால் குன்றின் மேல் ஏறிப் பார்த்திருக்கலாம்!" என்று நான் சொல்லிக்கொண்டேயிருக்கையில், மோட்டார் திடீரென்று ஒரு திரும்புத் திரும்பி வளைந்து சாலையோரத்து மரத்தில் மோதிக் கொள்ளப் போய் மறுபடியும் வேகமாக வளைந்து திரும்பி நடுச் சாலைக்கு வந்தது.

அந்த மழையிலும் குளிரிலுங்கூட எனக்கு உடம்பு வியர்த்து விட்டது. "என்ன? என்ன?" என்று பக்கத்திலுள்ள மோட்டார் சாரதியின் காது செவிடுபடும்படி கத்தினேன்.

"ஒன்றுமில்லே, ஸார்! பதறுதீங்க! ஒரு நாய் குறுக்கே ஓடிற்று. அதன் மேலே வண்டி ஏறுமலிருப்பதற்காக வளைத்துத் திருப்பினேன்!" என்ருர் மோட்டார் டிரைவர்.

இதைக் கேட்டதும் எனக்கு வந்த கோபத்துக்கு அளவில்லே.

"என்ன, அப்பா, நீ! ஒரு நாயைக் காப்பாற்றுவதற்காக மனிதர்களைக் கொன்று விடுவதற்குப் பார்த்தாயே? அழகாயிருக்கிறது!" என்றேன்.

"அது எப்படி, ஸார்! நாயும் உயிருள்ள ஜீவன்தானே? மனிதனுடைய உயிரைக் காட்டிலும் நாயின் உயிர் எந்த விதத்தில் மட்டம்?" என்ருர் டிரைவர்.

இதற்கு என்னல் பதில் சொல்ல முடியவில்லே.

கார் போய்க்கொண்டேயிருந்தது.

மழைத் தூற்றல் போட்டுக் கொண்டேயிருந்தது.

சேலம் ஜங்ஷன் நெருங்கிக் கொண்டேயிருந்தது.

கதையின் முடிவைத் தெரிந்து கொள்ள என் ஆவல் வளர்ந்து கொண்டேயிருந்தது.

"கொஞ்சம் நான் அஜாக்கிரதையாயிருந்திருந்தால் அந்த நாய் செத்துப் போயிருக்கும்! ஒரு மயிரிழையில் அது தப்பியது" என்ருர் டிரைவர்.

"இன்னும் கொஞ்சம் மோட்டாரை வளைத்திருந்தால் நாமே பைஸலாகியிருப்போம்!" என்று சொன்னேன்.

"அதெல்லாம் இல்லே, ஸார்! மனித உயிர் ரொம்ப கெட்டி! அவ்வளவு இலகுவாகச் சாவு வந்து விடாது!"

"அப்படியே சாவு வந்தாலும் கதையின் முடிவைத் தெரிந்து கொண்ட பிறகு வந்தால் எனக்குக் கவலேயில்லே!" என்றேன்.

"அதற்கென்ன, சொல்லுகிறேன். கதை கொஞ்சம்தான் பாக்கியிருக்கிறது!" என்ருர் டிரைவர்.

* * *

பணத்தைக் காணுமே என்று கவலேப்பட்ட செம்பவள வல்லிக்குப் போலீஸ்காரர் சின்னமுத்துக் கவுண்டர் ஆறுதல் கூற முயற்சித்தார்.

"செங்கோடன் இப்படிப்பட்ட இக்கட்டான நிலேமையில் இருக்கும்போது கேவலம் பணத்தைப் பற்றி நீ கவலேப்படுகிருயே? பணம் கிடக்கட்டும், தள்ளு!" என்று சொன்னர்.

இது செம்பவளவல்லியின் காதில் கொஞ்சமும் ஏறவில்லே.

"நீங்கள்தான் போலீஸ்காரர் ஆச்சே! பணத்தைக் கண்டு பிடித்துக் கொடுங்கள். இல்லாவிட்டால், கோர்ட்டில் வந்து நடந்தது நடந்தபடியே சொல்லி விடுவேன்!" என்ருள்.

"சொன்னல், செங்கோடனுக்குப் பதில் நீ கொலேக் கேஸில் அகப்பட்டுக் கொள்வாய். அவ்வளவுதானே? அதில் என்ன பிரயோஜனம்?"

"நான் ஏன் மாட்டிக்கொள்கிறேன்? கதவிடுக்கில் மறைந்து நின்று கடப்பாரையினுல் மண்டையில் ஓங்கிப் போட்டவர் அல்லவா அகப்பட்டுக் கொள்ளவேண்டும்? உங்களே நான் பார்க்கவில்லே என்று நினைத்தீர்களா?" என்ருள் செம்பா.

போலீஸ்காரர் திடுக்கிட்டுப் போனர். ஏனெனில், செம்பா சொன்னது உண்மையேயாகும். போலீஸ்காரர் அன்று மாலே பங்காருவுக்கும் எஸ்ராஜுக்கும் முன்னதாகவே கேணிக்கரைக்கு வந்து விட்டார். அந்தப் போக்கிரிகள் குடிசைக்குள் என்ன செய்கிருர்கள் என்பதைக் கவனித்துக் கொண்டிருந்தார். அரை குறையாக அச்சடித்த கள்ள நோட்டுகளேப் பிளிம்களுடன் சேர்த்துக் கொளுத்தியதைப் பார்த்தார். உள்ளே அச்சமயம் நுழையலாமா, வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருந்த போது செங்கோடன்—பங்கஜா இவர்களின் பேச்சுக் குரல் கேட்டது. பிறகு எஸ்ராஜ் விளக்கை அணைத்துவிட்டு வெளியேறினன். அதுதான் குடிசைக்குள்ளே நுழைந்து பங்காருவைக் கையும் களவும் கள்ள நோட்டுமாகப் பிடிக்கத் தக்க சமயம் என்று நினைத்து உள்ளே பிரவேசித்தார். ஆனல் தன் பின்னேடு இன்னும் யாரோ ஒருவர் வரும் சத்தம் கேட்டுக் கதவின் இடுக்கில் ஒளிந்து கொண்டார்.

வருவது ஒரு பெண் என்று அறிந்ததும் அவருக்கு ஒரே வியப்பாகி விட்டது. இவள் யார், எதற்காக அங்கே வருகிருள் என்று தெரிந்து கொள்ளும் ஆவல் ஏற்பட்டது.

வந்தவள் உள்ளே வந்து அவசரமாகச் செப்புத் தவலேயை எடுத்தாள்.

பங்காரு திரும்பிப் பார்த்து அவனுடைய சேலைத் தலைப்பைப் பற்றினான். கத்தியை எடுத்துக் குத்துவதற்கு ஓங்கினான்.—இதெல்லாம் கண்மூடித் திறக்கும் நேரத்தில் நடந்து விட்டது. போலீஸ்காரருடைய புத்தி பிரமாதமான அவசரத்தில் வேலை செய்தது. பங்காருவுக்குப் பின்னால் கிடந்த கடப்பாரையைச் சட்டென்று எடுத்து அவன் பின் தலையில் ஓங்கிப் போட்டார். பங்காரு "ஐயோ!" என்று கத்திக்கொண்டு தரையில் விழுந்தான். அவன் இருட்டில் பார்த்தது ஒரு பெண் பிள்ளையைத்தான். அந்தப் பெண் குமாரி பங்கஜாவாக இருக்கவேண்டும் என்று தவறாகத் தீர்மானித்துக் கொண்டான். அவளே தன் தலையில் அடித்தவள் என்று எண்ணிக் கொண்டு தரையில் விழுந்தான். ஆகையினாலேயே பின்னால் அவன் குமாரி பங்கஜாவின்மேல் குற்றம் சாட்டினான்.

செம்பா கையில் தவலையை எடுத்துக் கொண்டு, பங்காருவின் பிடியை உதறிக்கொண்டு கிளம்பியபோது, கதவின் இடுக்கில் ஓர் உருவம் கடப்பாரையை ஓங்கிக்கொண்டு நிற்பதைப் பார்த்து விட்டாள். அப்படி நின்றவர் யார் என்று தெரியவில்லை. ஆனால் அவருடைய போலீஸ் உடை மட்டும் அவளுடைய மனதில் பதிந்திருந்தது. அவசரத்திலும் பீதியிலும் அப்போது அதைப் பற்றி யோசிக்க முடியவில்லை. பின்னால் யோசித்துப் பார்த்துப் பார்த்து, இப்படி இப்படி நடந்திருக்க வேண்டும் என்பதை ஒருவாறு ஊகித்துக் கொண்டாள்.

தாம் கதவருகில் நின்றதைச் செம்பா பார்த்தாளா இல்லையா என்பதைப் பற்றிப் போலீஸ்காரருக்குக் கொஞ்சம் சந்தேகம் இருந்தது. அது இப்போது தெளிந்து விட்டது.

"ஐயா! பணத்தைக் கொண்டு வந்து கொடுத்து விடுங்கள்" என்றாள் மறுபடியும் செம்பா.

"பணமா? நான் எங்கே போக?"

"நீங்கள்தான் பணத்தை எடுத்திருக்க வேண்டும்!"

"என்னைத் திருடன் என்று சொல்லுகிறாய்?"

"நான் சொல்லவில்லை. நீங்களே தான் ஒப்புக்கொண்டீர்களே?"

"அது எப்போது?"

"அன்றைக்கு அவரிடம் நீங்கள் 'போலீஸ்காரன் வேஷத்திலேகூடத் திருடன் வருவான்' என்று சொல்லவில்லையா? அதை நான் ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்தேன்."

"செம்பா! நீ பலே கெட்டிக்காரி. இவ்வளவு சாமர்த்தியசாலியாயிருந்து கொண்டு அந்த அசட்டுச் செங்கோடனைப் போய்க் கலியாணம் செய்து கொள்ளப் போகிறாயே! அதை நினைத்தால்தான் வருத்தமாயிருக்கிறது!"

"சிலரைப்போலப் புத்திசாலிகளாயிருப்பதைக் காட்டிலும் அவரைப் போல் அசடாயிருப்பதே மேல்!"

"அது உன் தலையில் எழுத்து. எப்படியாவது போ! செங்கோடன் சீக்கிரம் திரும்பி வருவான். உன் கலியாணத்தன்று பணமும் சீதனமாகக் கிடைக்கும்!" என்றார் போலீஸ்காரர்.

## 20

செங்கோடன்மீது குற்றம் ஒன்றுமில்லையென்று போலீஸ் அதிகாரிகளே அவனை விடுதலை செய்து விட்டார்கள். கள்ள நோட்டு வழக்கில் அவனைச் சாட்சியாகவும் உபயோகித்துக் கொண்டார்கள். எல்லாம் முடிந்த பிறகு ஒரு நல்ல முகூர்த்தத் தேதியில் செங்கோடனுக்கும் செம்பவளவல்லிக்கும் திருமணம் நடந்தது.

புதிய தம்பதிகள் கேணிக்கரைக் குடிசையில் தனிக் குடித்தனம் நடத்த ஆரம்பித்த அன்று மாலை செங்கோடன் தன் அருமை மனைவியைப் பார்த்து, "செம்பா! நான் இனிமேல் அடிக்கடி சினிமாவுக்குப் போகிறதென்று உத்தேசித்திருக்கிறேன். உன்னையும் அழைத்துப் போவேன்!" என்றான்.

"நன்றாயிருக்கிறது! உங்களுக்குப் பைத்தியமா, என்ன? நாளைக்கு நமக்கு இரண்டு குஞ்சு குழந்தைகளைப் பழனி ஆண்டவன் கொடுக்க மாட்டானா? அவர்களுக்கு ஏதாவது தேடி வைக்க வேண்டாமா? சினிமாவிலும் சினிமாவிலும் பணத்தைத் தொலைத்து விடலாம் என்று பார்க்கிறீர்களா?" என்று செம்பா கேட்டாள்.

"பணம் கிடக்கிறது, பணம்! சின்னம நாயக்கன்பட்டியில் கூடாரசினிமா நடந்தால் அதற்கு நான் கட்டாயம் போவேன். இல்லாவிட்டால்

சேலத்துக்காவது போய் ஸினிமா பார்த்துவிட்டு வருவேன்......"

"அதெல்லாம் உதவாது. நான் உன்னைப் போகவிட மாட்டேன். சினிமாவிலே பார்க்கிற ராஜா — ராணியாக நாமே இருந்தால் போகிறது. நீங்கள் ராஜா செங்கோடக் கவுண்டர்; நான் ராணி செம்பவளவல்லி......!"

"சேச்சே! என்னையும் உன்னையும் எதற்காக அவ்வளவு கேவலப்படுத்திக் கொள்கிறாய்? ஸினிமாவிலே வருகிற ராணிகள் உன் கால்தூசி பெறுவார்களா, செம்பா! ஒரு நாளும் இல்லை. அதற்காக நான் சொல்லவில்லை. நீ அன்றைக்கு ஒரு நாள் என்னை ஸினிமாப் பார்த்துவிட்டு வா என்று சொன்னாயல்லவா? நானும் உன் ஏச்சுக்குப் பயந்து போனேன் அல்லவா? அங்கே, பொய்மான் கரடுக்குச் சமீபமாகக் குமாரி பங்கஜா என்பவளைப் பார்த்தேன் அல்லவா? அவளைப் பார்த்துப் பேசி, அவளுடன் பழகிய பிறகுதான் உன்னுடைய மகிமை எனக்கு நன்றாய்த் தெரிய வந்தது. செம்பா! உன்னைப் பெறுவதற்கு நான் எவ்வளவோ தவம் செய்திருக்க வேண்டும். பழனி யாண்டவனுடைய கிருபையினால்தான் உன்னை நான் மனைவியாக அடைந்தேன். ஆனாலும் உன்னை அடைந்தது எவ்வளவு பெரிய அதிர்ஷ்டம் என்று அந்தக் கூடார ஸினிமாவுக்குப் போகாமலிருந்தால்,—குமாரி பங்கஜாவைப் பார்க்காமலிருந்தால், — எனக்குத் தெரிந்திராது. என்னுடைய பணத்தைப் பாதுகாப்பதற்காக நீ எவ்வளவு பெரிய அபாயமான காரியத்தில் தலையிட்டாய்!" என்று செங்கோடன் மனமுருகிக் கூறினான்.

"நானும் உங்களை அதனால்தான் நன்கு அறிந்துகொண்டேன். என்னைக் காப்பாற்றுவதற்காக நீங்கள் கொலைக் குற்றத்தைக்கூட ஒப்புக் கொண்டீர்களே? என்பேரில் உங்களுக்கு எவ்வளவு அந்தரங்க அபிமானம் இருக்க வேண்டும்?" என்றாள் செம்பா.

"அது ஒன்றும் உனக்காக இல்லை. அந்தப் போலீஸ்காரர் திடீரென்று என் முன்னால் தோன்றவே மிரண்டு போய் அப்படி உளறிவிட்டேன்!" என்றான் செங்கோடன்.

"உடைந்து கிடந்த என் வளையல்களை அவ்வளவு ஜாக்கிரதையாய்க் கொண்டு போய்க் கிணற்றில் போட்டீர்களே? நான் கொலைகாரி என்று எண்ணியபோதும் என்பேரில் பிரியமாயிருந்தீர்களே? இதற்கு நான் எத்தனை ஜன்மம் எடுத்து உங்களுக்கு உழைத்தாலும் போதாது; என் கடன் தீராது!" என்றாள் செம்பா.

"தீராமல் என்ன? ஒரு பிள்ளைக் குழந்தையைப் பெற்றுக் கொடு; கடன் அவ்வளவும் தீர்ந்துவிடும்."

"அப்படியானால் பெண் குழந்தையையே தரும்படி அம்மனைப் பிரார்த்திப்பேன். பெண் என்றால் மட்டமா? நானும் பெண்தானே!"

"நீ பெண்தான். அதனால் எல்லாப் பெண்களும் உன்னைப்போல் ஆகி விடுவார்களா? அந்தக் குமாரி பங்கஜாவையே எடுத்துக் கொள்ளேன். அவளைப் பெண் பேய் என்று பங்காரு சொன்னது சரிதான். நான்கூட முதலில் கொஞ்சம் ஏமாந்து விட்டேன். பொய்மானை நிஜமான் என்று எண்ணி விட்டேன். ஆனால் அந்தப் போலீஸ்காரர் அவளிடம் என்னத்தைக் கண்டாரோ, தெரியவில்லை! மூன்று மாதம் ஜெயிலில் இருந்து விட்டு வந்தவனைக் கலியாணம் செய்து கொண்டிருக்கிறார். அந்தப் போலீஸ்காரருக்கு வேலை போய் விட்டது என்று உனக்குத் தெரியுமோ, இல்லையோ!"

இவ்விதம் செங்கோடக் கவுண்டரும் செம்பாவும் பேசிக் கொண்டிருந்த அதே சமயத்தில் மாஜி போலீஸ் கான்ஸ்டேபிள் சின்னமுத்துக் கவுண்டரும் குமாரி பங்கஜாவும் ஆனந்தமாக உரையாடிக் கொண்டிருந்தார்கள்.

"அந்தப் பங்காரு, எஸ் ராஜ் இவர்களுடன் சில நாள் பழகியதும் நல்லதாய்ப் போயிற்று. அப்படிப் பழகியிராவிட்டால் உலகில் எவ்வளவு பொல்லாத தூர்த்தர்கள் இருக்கிறார்கள் என்று எனக்குத் தெரிந்திராது. உங்களுடைய பெருமையையும் அறிந்திருக்க மாட்டேன். மலாய் நாட்டில் எங்களுடைய சொத்து சுதந்திரமெல்லாம் போனது பற்றி நான் கவலைப்படவில்லை. அதன் பயனாகத்தான் உங்களை அடைய நான் கொடுத்து வைத்திருந்தேன்!" என்றாள் பங்கஜா.

"கொடுத்து வைத்திருந்தவன் நான். ஜப்பான்காரன் மலாய் நாட்டுக்குப் படையெடுத்து வந்ததே உன்னை என்னிடம் கொண்டு சேர்ப்பதற்காகத்தான். இல்லாவிட்டால், அந்தப் பட்டிக்காட்டுப் பெண் செம்பவள வல்லியைப்போல் யாராவது ஒருத்தியைக் கட்டிக்கொண்டு கஷ்டப்படுவேன்" என்றார் சின்னமுத்துக் கவுண்டர்.

"இன்றைக்கு இப்படிச் சொல்கிறீர்கள்! அன்றைக்கு அந்தப் பட்டிக்காட்டுப் பெண்ணைத்தான் ஆகாசத்திலே தூக்கி வைத்துப் பேசினீர்கள். பிரமாத கெட்டிக்காரி என்று..."

"அவள் ஒன்றும் கெட்டிக்காரி இல்லை. செங்கோடனிடம் அவள் வைத்திருந்த ஆசை அப்படி அவளைக் கெட்டிக்காரியாகச் செய்திருந்தது."

"அவள் பேரில் நீங்கள் வைத்திருந்த ஆசை உங்களை அவ்வளவு பலசாலியாகச் செய்து விட்டது! அதனால் தானே பங்காருவின் தலையில் அந்தக் கடப்பாரையைப் போட்டீர்கள்? அவள் உயிரைக் காப்பாற்றினீர்கள்?"

"அவள் பேரில் ஆசையால் அவளை நான் காப்பாற்றவில்லை. உன்பேரில் வைத்த ஆசையினால்தான் காப்பாற்றினேன். என் கண்மணி! இதைக் கேள். கேட்டு நன்றாய் மனதில் பதிய வைத்துக்கொள். பங்காரு செய்த தவறையே நானும் செய்தேன். குடிசைக்குள் இருள் சூழ்ந்திருந்தது. அந்த இருட்டில் ஒரு பெண் உள்ளே வந்தாள். அவள் செம்பா என்று நான் நினைக்கவேயில்லை. நீ என்றுதான் நினைத்தேன். அதனால்தான் என் கைகளுக்கு அவ்வளவு பலம் ஏற்பட்டது. பங்காருவின் மண்டையில் கடப்பாரையைப் போட்டேன்......"

இதைக் கேட்டதும் பங்கஜாவுக்கு உடம்பு புல்லரித்தது. சினிமா கதாநாயகிகளைப் போல் பேசினாள்; காரியத்திலும் நடந்துகொண்டாள்.

"நாதா! இத்தனை நாளும் இதைச் சொல்லவில்லையே? எனக்காக எப்பேர்ப்பட்ட காரியத்தைச் செய்தீர்கள்? என் உடல் பொருள் ஆவியெல்லாம் ஏழேழு ஜன்மத்துக்கும் உங்களுடைய உடைமை" என்றாள் பங்கஜா.

அந்த நிமிஷத்தில் மாஜி போலீஸ்காரர் சின்னமுத்துக் கவுண்டர் ஏழாவது சொர்க்கத்தை அடைந்தார்.

சேலம் ஜங்ஷனின் தீப வரிசைகள் சற்றுத் தூரத்தில் தெரிந்தன. நகருக்குள் புகுந்து சுற்றி வளைத்துக் கார் போகவேண்டியிருந்தது. ரயில் வண்டி ஒன்று குப் குப் என்ற சத்தத்துடன் வரும் சத்தம் கேட்டது. 'விஸில்' ஊதும் சத்தமும் கேட்டது.

"மெட்ராஸ் வண்டி வந்து விட்டது. ஆனால் கொஞ்ச நேரம் நிற்கும். அவசரமில்லை" என்றார் டிரைவர்.

"அப்படியானால் பாக்கிக் கதையையும் சொல்லி முடித்துவிடு!" என்றேன்.

"கதைதான் முடிந்து விட்டதே! செங்கோடக் கவுண்டரும் செம்பவள வல்லியும் ஆனந்தமாக இல் வாழ்க்கை நடத்திவருகிறார்கள். இரண்டு பெண் குழந்தைகளும் ஒரு ஆண் குழந்தையும் அவர்களுக்கு இருக்கின்றன. செங்கோடக் கவுண்டர் மேலும் கொஞ்சம் நிலம் வாங்கிச் சேர்த்திருக்கிறார். நாலு வருஷமாக மழை பெய்யாமலிருந்தும் அவருடைய கேணியில் நிறையத் தண்ணீர் இருக்கிறது. அவருடைய நிலங்கள் பச்சென்று இருக்கின்றன. சோளம் நன்றாகப் பயிராகிக் கொண்டை விட்டிருக்கிறது. அவருடைய குழந்தைகள் சோளக் கொண்டையைப் பறித்துத் தின்றால் இப்போது செங்கோடக் கவுண்டர் திட்டுவதும் ஆட்சேபிப்பதும் இல்லை. செம்பா சில சமயம் குழந்தைகளைத் தடுக்கிறாள். ஆனால் செங்கோடக் கவுண்டர் அவளுடன் சண்டை பிடிக்கிறார். 'குழந்தைகள் தின்றால் தின்றுவிட்டுப் போகட்டும். அவர்களுக்கில்லாத சோளக் கொண்டை வேறு யாருக்கு? அப்படியே அறுவடை செய்து வைத்திருந்தால் யாராவது சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் வந்து கொண்டு போகப் போகிறார்கள்! குழந்தைகள் தான் தின்றுவிட்டுப் போகட்டுமே!' என்று சொல்லுகிறார்."

"இதைக் கேட்பதற்கு மிகவும் சந்தோஷமாயிருக்கிறது. ஆனால் கேஸ் என்ன ஆயிற்று? குற்றவாளி யார் என்று ஏற்பட்டது?"

"ஏன்? குற்றவாளிகள் எஸ் ராஜ¬ம் பங்காருசாமியுந்தான். கள்ள நோட்டுப் போட முயற்சித்ததற்காக அவர்களுக்குத் தலைக்கு மூன்று வருஷம் கடுங்காவல் தண்டனை கிடைத்தது. கள்ள நோட்டுப் போடுவதில்

அவர்கள் வெற்றி பெறவும் இல்லை. நோட்டுகள் சரியாகவே வரவில்லை. ஒரு நோட்டையாவது அவர்களால் செலாவணி செய்ய முடியவில்லை. ஆகையால் தலைக்கு மூன்று வருஷத் தண்டனையோடு போயிற்று."

"பங்காருவுக்குக் கூடவா தண்டனை கிடைத்தது?"

"ஆமாம்; அவன்தான் கேஸில் முதல் குற்றவாளி."

"குற்றவாளியை யமலோகத்திலிருந்து யார் விசாரணைக்குக் கொண்டு வந்தார்கள்? செத்துப் போனவன் மீது கேஸ் போடுவது உண்டா?"

"பங்காரு செத்துப்போனான் என்று யார் சொன்னது? கொட்டாருப்புள்ளி மாதிரி இருக்கிறானே! அவனுடைய தலைக் காயம் சில நாளைக்குள் ஆறி விட்டது. சிறையில் நன்றாய்க் கொழுத்து வெளியே வந்தான்."

"பின்னே, 'கொலைக் கேஸ்' 'கொலைக் கேஸ்' என்று சொன்னாயே? 'கொப்பனும்பட்டி கொலை' என்றும், மிக மர்மமான கொலை என்றும் சொன்னாயே!"

"சாதாரண கொலைக் கேஸ்களில் கொன்ற குற்றவாளி யார் என்பது மர்மமாயிருக்கும். அதைக் கண்டு பிடிக்கப் போலீஸாரும் துப்பறிவோரும் பாடுபடுவார்கள். ஆனால் இந்தக் கொப்பனும்பட்டி கொலைக் கேஸில் கொலை செய்தவன் யார் என்பதும் மர்மம்; கொலையுண்டவன் யார் என்பதும் மர்மம். உண்மையில் யாரும் சாகவில்லை; ஆகையால் கொலை செய்யப் படவும் இல்லை. செங்கோடக் கவுண்டன் அன்றிரவு 'நான்தான் கொன்றேன்' 'நான்தான் கொன்றேன்' என்று கத்தியதால் கொப்பனும்பட்டி கொலைக் கேஸ் என்று பெயர் வந்து விட்டது. கொல்லப்பட்டவன் யார் என்பது தெரியாமலேயே ஜனங்கள் 'கொப்பனும்பட்டி கொலைக் கேஸ்' என்று பேசிக் கொண்டிருந்தார்கள். அதைத்தான் நானும் சொன்னேன்!" என்றார் மோட்டார் டிரைவர்.

"கதை இப்படி முடிந்ததில் எனக்கு மிகவும் சந்தோஷம். ஆனால் போலீஸ்காரர் விஷயம் என்னவாயிற்று? அவர் ஏன் போலீஸ் இலாகாவை விட்டு விலகினார்?" என்று கேட்டேன்.

"ராஜீநாமாத்தான். கள்ள நோட்டுக் கேஸில் அவர் சரியான தடையம் கண்டு பிடித்துக் கொடுக்கவில்லை யென்று அவர் பேரில் புகார் ஏற்பட்டது. கள்ள நோட்டுக்கள் என்று அவர் குடிசையிலிருந்து திரட்டி மூட்டை கட்டிக் கொண்டு வந்தது உண்மையில் உண்மையான நோட்டுக்கள் என்றும் செங்கோடன் தவலையில் இருந்தவை என்றும் தெரிய வந்தன. இதனால் போலீஸ்காரருக்குப் 'பிளாக் மார்க்' கிடைத்தது. எதிர் பார்த்தபடி பிரமோஷன் கிடைக்கவில்லை. ஆகவே கோபங் கொண்டு ராஜீநாமா செய்து விட்டார்."

"செங்கோடனுக்கு அவனுடைய பணம் கிடைத்து விட்டதாக்கும்!"

"திவ்யமாகக் கிடைத்து விட்டது. ஆனால் செங்கோடன் இப்போதெல்லாம் பணத்தைப் புதைத்து வைப்பதில்லை. மிச்சமாகும் பணத்தைப் பாங்கியிலோ, சர்க்கார் கடன் பத்திரங்களிலோ போட்டு வட்டியும் வட்டிக்கு வட்டியும் வாங்குகிறான்."

"ரொம்ப சந்தோஷம்" என்றேன்.

கடைசியாகக் கேட்க எண்ணியிருந்த கேள்வியையும் கேட்டு விட்டேன்.

"போலீஸ்காரர் இப்போது என்ன செய்கிறார்!" என்றேன்.

"மாஜி கான்ஸ்டேபிள் 374-ம் நம்பர் இப்போது மோட்டார் டிரைவர் வேலை பார்க்கிறார்! கார் ஓட்டும் சமயம் தவிர மற்ற வேளையெல்லாம் கால் மேல் கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்து பெண்சாதியை அதிகாரம் பண்ணிக் கொண்டிருக்கிறார்!"

இன்னும் ஒரே ஒரு கேள்வி பாக்கியிருந்தது. "அந்த மோட்டார் டிரைவர் நீர்தானா?" என்பது.

ஆனால் நான் அதைக் கேட்கவில்லை. எதற்காகக் கேட்பது? நாயின் உயிரைக் காப்பதற்காக மோட்டாரையும் என்னையும் அவர் வேலை தீர்த்துவிடப் பார்த்ததை நினைத்தாலே தெரியவில்லையா? இந்தக் கேள்வியை அவரிடம் கேட்கப் போவானேன்? (முற்றும்)

[மேற்படி கதையில் வரும் ஊர்ப் பெயர்கள், பாத்திரங்களின் பெயர்கள் எல்லாம் எந்த உண்மையான ஊரையோ, மனிதர்களையோ குறிப்பிடவில்லை. 'பொய் மான் கரடு' ஒன்றைத் தவிர மற்றவை யெல்லாம் கற்பனையேயாகும். — ஆசிரியர்]

# பழைய ருசி பார்த்த பூனை

★

1. உலகயுத்தம் வரணுமின்னு உருகுருரு பாரு — மக்கள்
உருக்குலைந்தால் அவருக்கப்போ உண்டாகிடும் ஜோரு!
பலசரக்குக் கடையிலுள்ள கழுவடைந்த பொருளை — நல்ல
பவுனாக விற்றுடத்தான் கனவு காணுறாரு!

2. பழையருசி பார்த்தபூனை உரியைச்சுற்றி வந்து—கும்மாப்
பதுங்கிக்கண்ணை மூடிக்கிட்டு பாய்ந்துபிடிக்கும் கதையாய்
குழையப்பேசி அழைக்குமந்த கோடிக்கடை ஆளு—அவர்
குடலுக்குள்ளே மறைந்திருக்கு பெரிய கொடுவாளு!

3. நேற்றுவரை தீப்பெட்டியை நிறுத்திஅடுக்கி வைச்சார்—இன்று
நிலைச்சுக்கிட்டு எல்லாத்தையும் பதுக்கிப்பிட்டார் பாரு!
காத்துவாக்கில் விலைஉசந்து போச்சுயின்னு சொல்லி—தன்
கள்ளக்கறுப்புக் கடைதிறந்து மெள்ளவிற்பார் பாரு!

4. கொரியாவிலே யுத்தமின்னு கொட்டைபூரில் என்ன? — தேளு
கொட்ட எங்கோ வந்துநெறி கட்டிக்கிச்சாம் முன்னே!
அறிவிலாத மனுசர்இல்லே அந்தக் கடைக்காரர்
ஆறுபங்கு லாபம்வைக்கும் சூதுவினைக் காரர்!

5. ரத்தவெறி கொண்டுஎங்கோ யுத்தம்நடந் தாக்கே — நம்மைச்
சுற்றிவந்து பேய்களாடும் சோதனையைப் பாரு!
கத்திரிக்காய் விற்கும்நம்ம கந்தசாமி கூட — தன்
கண்ணைமூடி விலையைச்சொல்லிக் கதையளக்கிறான் கேளு!

6. ஏழவுன்சும் ஆறவுன்சாய் இப்போமாறிப் போச்சு! — ஏதோ
இருக்கிறதைத் தின்றுநாளைக் கடத்தும்வழி யாச்சு!
பாரும்கொரிய யுத்தம்வரப் பதுக்கல்கொள்ளைக் காரப்—பெரும்
பாவிஎல்லாம் கூறும்விலை தாறுமாறாய்ப் போச்சு!

7. நீதிநெறி தப்பிடாத நேருஅர சாங்கம் — இந்த
நிலைமைமிஞ்சிப் போயிடாமல் துணிஞ்சுகாக்க வேணும்
ஊரில்மக்கள் வருந்தவிலை உயர்த்திவிற்ப வரை — நல்ல
உளவுவைச்சுப் பிடிச்சுச்சிறை உள்ளேதள்ள வேணும்.

— காட்டூர் கண்ணன்

# ஆரோக்கிய ரகசியம்




யோகாசன நிபுணர்

ஸ்ரீ வி. என். குமாரஸ்வாமி


2

உலகத்தில் வியாதிகளைப் போக்க என்னென்ன ஆராய்ச்சிகள் நடக்கின்றன! விதம் விதமான மருந்துகள், ஆப்பரேஷன்கள், விஞ்ஞான ஆராய்ச்சிகள், மின்சார ஆராய்ச்சிகள் முதலியன எல்லாம் நடக்கின்றன. இவ்வளவுக்கும் நோய்கள் வராமல் இருக்கின்றனவா? புதிய புதிய நாமகரணங்களுடன் ஜனித்துக் கொண்டே இருக்கின்றன.

அவைகள் எல்லாம் வராமல் இருக்கவும், வந்தால் போக்கவும் மிகப் பழமையானதும், நமது முன்னோர்கள் அனுசரித்து வந்ததுமான ஒரு முறை இருக்கிறது. அதுதான் யோக ஆசனம். அதை எந்தக் காரணத்தினாலோ நாம் மறந்தே விட்டோம். பல தலைமுறைகளாகவே நமக்கு அதைப் பற்றி ஒன்றும் தெரியாது. பழமையில் நம்பிக்கையுள்ள சில யோகிகள், சந்நியாசிகள் மட்டுமே ஆசனம் செய்து வந்தார்கள். அப்படி சந்நியாசிகளும் யோகிகளும் ஆசனம் செய்து வந்ததாலேயே குடும்பத்தில் இருப்பவர்கள் ஆசனம் செய்வது தவறு என்ற எண்ணம் நம் மனதில் உண்டாகி விட்டது.

அதற்குத் தகுந்தாற் போல் யோக ஆசனத்தைப் பற்றி இருக்கும் புத்தகங்களில் பெரும்பாலானவை யோகிகளாலும் சந்நியாசிகளாலும் எழுதப்பட்டவை. ஆகவே அதைத் தொடுவதற்குக் கூடப் பயம். அதில் மிகக் கடுமையான ஆசனங்களை யெல்லாம் போட்டு இதை இப்படி மூச்சைப்பிடித்து செய்தால் இந்த யோகம் சித்தியாகும். அதை அப்படி மூச்சைப் பிடித்துச் செய்தால் அந்த யோகம் சித்தியாகும் என்று வரிசையாகப் போட்டிருக்கிறது. யோகம், மூச்சைப் பிடித்தல் என்றாலே, அது நாம் செய்யத் தகாதது என்று நினைத்து விடுகிறோம். அப்படி நினைப்பது மிகவும் தவறானது. அந்தப் புத்தகங்களில் சொல்லுவது முற்றிலும் உண்மை. அப்படிச் செய்தால் அந்தச் சித்திகள் கட்டாயம் கிட்டும். இருந்தாலும் அதன் அருகில் நெருங்கப் பயப்படுகிறோம். அதற்குக் காரணம் யோக ஆசனம் என்ற பெயர்தான். அந்தப் பெயரை மாற்றி, ஆங்கிலத்தில் ஒரு புதுப் பெயரை வைத்து ஆசனத்தைப் பழகச் சொன்னால் நமக்கு அதில் கட்டாயம் நம்பிக்கை ஏற்பட்டு விடும்.

நமக்குத்தான் நம்முடைய முன்னோர்களிடமும் அறிஞர்களிடமும் நம்பிக்கை கிடையாதே. மற்ற நாட்டவர்கள் எதையாவது ஒப்புக் கொண்டால் அவர்கள் அம்மாதிரி நடக்கிறார்கள் என்றால் நமக்கு விழிப்பு ஏற்படுகிறது. பிறகு "அதுவா! நமது சரக்குதான் ஸார்! நம்மைப் பார்த்துக் காப்பி அடித்ததுதான்" என்று சொல்லிக்கொண்டு அவர்களைப் பார்த்துக் காப்பி அடிக்க ஆரம்பித்து விடுகிறோம்.

அப்படிப் பார்க்கப் போனால் இன்று மேல் நாடுகளில், முக்கியமாக அமெரிக்காவில் யோக ஆசனச் சிகிச்சைச் சாலைகளை வைத்துத் தேகப் பிணி, மனப் பிணி முதலியவைகளைக் குணப்படுத்தி வருகிறார்கள். நடிக நக்ஷத்திரங்கள் நிறைந்த ஹாலிவுட்டில் யோக ஆசன சாலை ஏற்படுத்தியிருக்கின்றனர். நடிகர்களின் உடலமைப்பு, இளமை, அழகு, பொலிவு எல்லாம் யோக ஆசனத்தால் பாதுகாக்கப்படுகிறது. அவர்களுடைய நாட்டியக் கலை விபரீதமானது. யந்திரம் போலச் சுழலுவதும், கைகளை வீசுவதும், கால்களைத் தலைக்கு மேலே தூக்குவதும் எல்லாம் பார்க்கும்போது ஒரே பிரமிப்பாக இருக்கும். அப்படி அவர்கள் செய்யும்போது, வயிற்றில் இருக்கும் குடல் தன் இடம் விட்டுப் பெயருவதும், சில உறுப்புகள் கெட்டு விடுவதும் உண்டு. அம்மாதிரி உண்டாகாமலிருக்க அமெரிக்க நடிக-நாட்டிய நக்ஷத்திரங்கள் எல்லாம் தற்பொழுது ஆசனங்களைப் பழகிக் கொள்ளுகிறார்கள். நமது நடிக நக்ஷத்திரங்கள் இதைக் கவனிக்க வேண்டும்.

நமது நாட்டுக் கலையை மற்ற தேசத்தவர்கள் பயன்படுத்திக் கொள்ளுவதைப் பார்த்த பிறகு நாம் இனி பயப்படத் தேவையில்லை. ஆண், பெண், சிறுவர் எல்லோரும் செய்யலாம். அதனால் நோய் எனும் நரகத்திலிருந்து மீளலாம். காலையில் கிழக்கில் சூரியன் உதிப்பது

எவ்வளவு நிச்சயமோ, அவ்வளவு நிச்சயம் யோகாசனம் செய்பவர்களுக்கு நோய் வராமல் இருக்கும் என்பது.

ஏதோ சிலர் ஆசனம் பழகியும், கெட்ட பழக்க வழக்கங்களை விடாமல் நாக்கை மிளகாய்க்கும், மூக்கைப் பெருங்காயத்துக்கும் வயிற்றை எல்லா வஸ்துக்களையும் புதைக்கும் மயானமாக மதித்து விடுகிறார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு நோய்தான் உண்டாகும். அவர்கள் அரைகுறையாக ஆசனம் செய்து விட்டு இயற்கைக்கு மாறுபட்ட காரியங்களைச் செய்து கொண்டு பழியை ஆசனத்தின் தலையில் போட்டு விடுகிறார்கள்.

“தலை கீழாக நிற்பதாவது! இது இயற்கைக்கு விரோதம்” என்று புகையிலையை வாயில் அடக்கிக் கொண்டு வேதாந்தம் பேசுவார்கள். மிளகாய் சாப்பிடுவது, பொடி போடுவது, புகையிலை போடுவது, புகைப்பது எல்லாம் இயற்கையா? எந்தக் காரியத்தையும் முறைப்படி பழகுபவர்களுக்குப் பயமே வேண்டாம். ஆசனம் செய்வதற்கு நம் தினசரி வாழ்க்கையைக் கொஞ்சம் திருத்திக் கொண்டாலே போதும். அதற்கென்று நேரமோ, பணமோ, செலவோ ஒன்றும் கிடையாது. ஏழைகள், பணக்காரர்கள் எல்லோரும் செய்யலாம்.

யோக ஆசனமாவது அஷ்டாங்க யோகத்தின் மூன்றாவது படியாகும். அதில் இமயம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்ற எட்டுப் படிகள் உண்டு. முக்தியை நாடுவோர் இதனைப் படிப்படியாக அப்பியசிக்க வேண்டும்.

இமயம், நியமம் முதலியவைகளெல்லாம் ஒழுக்கத்துடன் இருக்கச் சொல்லுகிறது. இது யோகத்தின் அங்கமாகவும் ஆரோக்கியமாகவும் இருக்கச் சொல்லுகிறது. இது யோகத்தின் அங்கமாக இருப்பதால் இதற்கு யோக ஆசனம் என்ற பெயர் வந்தது. ஆகையால் பெயரைப் பார்த்து யாரும் மிரள வேண்டாம்.

முதலில் நமது ஆகாரத்தைக் கொஞ்சம் சீர்படுத்திக் கொள்ள வேண்டும். ஆசனம் போடுவதற்கென்று ஸ்பெஷல் ஆகாரம் தேவையில்லை. மிக மிக எளிய உணவுகளை உட்கொண்டே செய்யலாம். சாதாரண ஆகாரத்தைச் சத்துகளைக் குறைக்காமல் சாப்பிடத் தெரிந்து கொண்டால் போதும். கண்ட வேளைகளில் சாப்பிடும் வழக்கத்தை விட்டுவிட வேண்டும். மூன்று வேளை ஆகாரம் மிதமாய்ச் சாப்பிட்டால் போதும். அதில் ஒரு வேளை பலமான ஆகாரமாகவும், மற்ற இரு வேளைகளில் இலேசான ஆகாரமாகவும் இருந்தால் நல்லது.

காலையில் இட்டிலி, தோசை, பொங்கல், உப்புமா முதலியவைகள் சாப்பிடலாம். இதையும் சாப்பிட முடியாதவர்கள் பழையமுது சாப்பிடுவது மிகவும் நல்லது. நம்முடைய நாடு உஷ்ணமானது. அதற்கேற்றாற் போல் ஆகாரம் சாப்பிட வேண்டும்.

முன்பெல்லாம் நண்பர்கள் வீட்டுக்குப் போனால் மோர், இளநீர், எலுமிச்சை ரசம் முதலியவைகளில் ஏதாவது ஒன்றைக் கொடுத்து அதைச் சாப்பிடுகிறீர்களா என்று கேட்பார்கள். இப்பொழுது அவை அநாகரிக பானமாகக் கருதப்படுகின்றன. கொளுத்தும் வெய்யிலில் போனாலும் காப்பியைச் சுடச்சுடக் கொடுக்கிறார்கள். நாமும் நாகரிகம் என்று நினைத்து வியர்க்க விருவிருக்கக் காப்பியைச் சாப்பிடுகிறோம்.

இம்மாதிரியெல்லாம் நாம் செய்யாமல் எந்தக் காலத்தில் எதைச் சாப்பிட வேண்டும். எப்பொழுது எதைச் சாப்பிடக் கூடாது என்று யோசித்துச் சாப்பிடப் பழகிக் கொள்ள வேண்டும்.

மத்தியானச் சாப்பாடு பலமான சாப்பாடாக இருக்கலாம். அதில் முக்கியமானது சாதம்தான். மற்றவையெல்லாம் அதைச் சாப்பிட உபகரணங்கள். இந்தக் காலத்தில் சாதத்தின் கவனிப்பு குறைந்து விட்டது. வெள்ளை வெளேரென்று நைசாய் இருக்க வேண்டும் என்று நினைக்கிறோம். அதில் சத்து இருக்கிறதா அப்படிச் சாப்பிடுவது நல்லதா என்று நினைப்பதில்லை. காய்கறிகள், சாம்பார் முதலியவைகளால்தான் சாதத்துக்கு ருசி ஏற்படுகிறது. அந்தக் காய்கறி சாம்பார் முதலியவைகளும் சத்துடன் சமைக்கப்படுகிறதா என்று கவனிப்பார் இல்லை. அப்படியெல்லாம் கவனக் குறைவாகச் சாப்பிடாமல் நமது சாப்பாடு சத்துள்ளதாக இருக்கிறதா என்று சிந்தித்துப் பார்த்துச் சாப்பிட வேண்டும். (தொடரும்)



“இதென்ன, நீங்கள் இவ்வளவு இளைத்துப் போய்விட்டீர்களே? ‘காட்லிவர் ஆயில்’ சாப்பிட்டால்தான் உடம்பு தேறும்!”

# நான் கற்ற கணிதம்

ரா. ஸ்ரீ.

நான் பள்ளியில் படிக்கும் காலத்தில், கணக்கு வகுப்பு வந்தால் இரண்டு பிள்ளைகளுக்கு மிகவும் சந்தோஷம் — கிருஷ்ணனுக்கும் எனக்கும். கிருஷ்ணன் கணக்கில் மிகவும் கெட்டிக்காரன். எந்தக் கணக்காகவிருந்தாலும் எல்லோருக்கும் முன் போட்டுவிட்டு மற்றவர்களை ஓர் புன் சிரிப்புடன் பார்த்துக் கொண்டிருப்பான். நானோவெனில் கணக்கில் ஓர் மக்குப் பிளாஸ்திரி. இருப்பினும் கணக்குகளில் ஏற்படும் ஹாஸ்யத்தை ரஸித்து ஆனந்தித்துக் கொண்டிருப்பேன்.

கணக்குப் புத்தகங்களில் "காலமும் வேலையும்" என்று ஓர் அத்தியாயம் உண்டு. அதில் வரும் கணக்குகளில் A, B, C. என்ற மூவர் தான் முக்கிய பாத்திரங்கள். எந்த வேலையாயிருந்தாலும் சரி, இந்த A. B. C. தான் செய்தாக வேண்டும். கிணறு வெட்ட வேண்டுமா, A B.C. யைக் கூப்பிடு! நிலத்தை உழ வேண்டுமா, A.B.C. யிடம் சொன்னால் நடந்து விடும். வீட்டுக்குச் சுண்ணாம்பு அடிக்க வேண்டுமா, அதற்கும் A.B.C. யே. நீங்கள் நினைக்கலாம் அந்த ஊரில் தொழிலாளருக்குப் பஞ்சமா அல்லது மற்றவர்களெல்லோரும் முழுச் சோம்பேறிகளா வென்று. எனக்கும் அதே சந்தேகம் தான்!

இந்த மூன்று பேர்களுக்கும் ஓய்ச்சல் ஒழிவு ஒன்றும் கிடையாது. முதல் கணக்கில் ஓர் சதுரமான தோட்டத்தைச் சரிப்படுத்துவார்கள். அந்த வேலை முடிந்ததும், அடுத்த கணக்கில் ஓர் வீட்டுக்குத் தளவரிசை போடுவார்கள். அடுத்த கணமே ஓர் வயலை உழச் செல்லுவார்கள்.

ஆனால் அவர்கள் மூவரும் ஒரே சாமர்த்திய முள்ளவர்களல்ல. A ஒரு வேலையை ஐந்து நாட்களில் செய்தால், B அதே வேலையை எட்டு நாட்களில் செய்வான். C நான்கே நாட்களில் செய்து முடித்து விடுவான். சில சமயங்களில் B மிகவும் சுறுசுறுப்பாயிருப்பான். C பின் தங்கி விடுவான். எல்லாம் அவர்களுடைய ஊக்கத்தையும் தேக வலுவையும் பொருத்தது.

சில சமயங்களில் A யும் B யும் ஒரு வேலையை ஆரம்பிப்பார்கள். நான்கு நாட்கள் வேலை செய்ததும் B திடீரென்று வேலையிலிருந்து நின்று விடுவான். (B ஒரு வேளை 'ஸ்ட்ரைக்' செய்து விட்டானோ என்று நான் யோசனை செய்து கொண்டிருக்கும் போது, B யும் C யும் சேர்ந்து A யைப் பார்த்துக் "கருங்காலி" என்று கூப்பிடுவது என் காதில் விழும்.) A மாத்திரம் தனியாகப் பத்து நாட்கள் வேலை செய்வான். பிறகு B யும் C யும் வந்து சேர்ந்து, மூன்று பேரும் துரிதமாக வேலை செய்து, இரண்டு நாட்களில் முடித்து விடுவார்கள். (B வேலைக்கு வராத பத்து நாட்களுக்கு அவனுக்கு "ஸ்ட்ரைக் சம்பளம்" கொடுப்பதா கூடாதா என்று என்னைக் கேட்காதீர்கள்.)

இரண்டு நாளைக்கு முன் எஸ். எஸ். எல். ஸி. படிக்கும் என் பிள்ளை என்னிடம் வந்து "அப்பா, இந்தக் கணக்கைக் கற்றுக் கொடு" என்றான். நான் கணக்கில் பூஜ்யம் என்று சொல்லாமல், தைரியமாக "என்னடா கணக்கு?" என்றேன். அவன் "A ஒரு வேலையைப் பத்து நாட்களிலும், B அதே வேலையை எட்டு நாட்களிலும்" என்று ஆரம்பித்தான். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. "அட, பாவிகளா! நான் வாசிக்கும்போது வேலை செய்து கொண்டிருந்தவர்களா இன்னும் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். எனக்கு என்னடா வென்றால் ஐம்பது வயதிற்குள் இவ்வளவு தள்ளாமை. இவர்கள் என்ன காயகல்பம் முதலிய சிகிச்சைகள் செய்து கொண்டார்களா அல்லது சிரஞ்சீவிகளா?" என்று ஆச்சரியப்பட்டேன்.

சில தீவிர தேசிய வாதிகள் "இந்த A.B.C. மூவரும் ஆங்கிலேயர்கள் ஆகஸ்ட் 15, 1947க்குப் பிறகு இவர்கள் இங்கு இருக்கக் கூடாது. இந்தியாவை விட்டு வெளியேற வேண்டும்" என்று கர்ஜிக்கலாம். ஆனால் நான் சொல்லுவது "இவ்வளவு நல்ல உழைப்பாளிகளை நாம் ஏன் நிராகரிக்க வேண்டும்?"

"காலமும் வேலையும்" என்ற அத்தியாயத்தில் தொட்டிக் கணக்குகள் ஒரு பகுதி. உதாரணமாக: "ஒரு தொட்டிக்கு இரண்டு குழாய்கள் ஒன்று தொட்டியை இருபது மணி நேரத்தில் நிரப்பும். மற்றொன்று முப்பது மணி நேரத்தில் காலி செய்யும். தொட்டியைக் காலி செய்து விட்டு, இன்று காலை ஆறு மணிக்கு இரு குழாய்களையும் திறந்து வைத்து, மறுநாட் காலை ஆறு மணிக்கு வந்து பார்த்தால் தொட்டியில் எவ்வளவு ஜலம் இருக்கும்?"

இந்தக் கணக்கை ஓர் பட்டணவாசியிடம் கொடுத்தால், ஒரு க்ஷணம் கூட யோசிக்காமல் "ஒரு சொட்டு ஜலம்கூடத் தொட்டியில் இருக்காது" என்று பதில் சொல்லிவிடுவார். காரணம் விசாரிக்கப் போனால், "எந்த ஊரில், ஸார், இருபத்தினாலு மணி நேரமும் குழாயில் ஜலம் வருகிறது? கணக்குக் கொடுத்தவனுக்குத் தண்ணீர் வேண்டுமானால் இரண்டாவது

குழாயை மூடி வைக்கச் சொல்லுங்கள்'' என்று காரசாரமாகப் பதில் சொல்லுவார்.

கணக்குப் புத்தகங்களில் ''விஸ்தீரணம்'' என்று ஓர் அத்தியாயம் இருக்கும். அதில் சுவற்றிற்கு வெள்ளையடிப்பது, தளவரிசை போடுவது, தோட்டத்தில் பாத்திகள் ஏற்படுத்தி வேலி போடுவது, ஆடு மேய்ப்பது முதலிய காரியங்களில் ஈடுபட வேண்டியிருக்கும்.

''ஆடு மேய்ப்பதா?'' என்று நீங்கள் ஆச்சரியத்துடன் கேட்கலாம். அது என்னவென்று சொல்லுகிறேன் கேளுங்கள்.

''ஒரு வயலின் நடுவில் ஓர் ஆடு ஐம்பது அடி நீளமுள்ள கயிற்றில் கட்டப்பட்டிருக்கிறது. அந்த ஆடு வயலில் எவ்வளவு விஸ்தீரணத்தை மேய முடியும்?''

''இந்தக் கணக்குக்கு விடை கொடுக்கு முன் வயலில் புல் இருக்கிறதா அல்லது அது கட்டாந்தரையா என்று தெரிய வேண்டும். ஆட்டுக்கு மூளையில்லையென்று சாதாரணமாகச் சொன்னாலும், வயலில் புல் இல்லையென்று பார்த்ததும், கட்டின இடத்தை விட்டு ஒரு அடி கூட நகராது'' என்று ஓர் பதில் கிளம்பக்கூடும்.

சில சமயங்களில் இந்த ஆட்டைப் பிடித்துச் சுவற்றின் ஓரமாகக் கட்டி விடுவார்கள். அப்பொழுது அதற்கு மேய்வதற்குக் கட்டாந்தரையில் அரைவட்டம் தான் கிடைக்கும். அப்பொழுது ஆடு என்ன செய்யும், பாவம்?

பணத்தை வட்டிக்கு விட்டு, லாபம் சம்பாதிப்பது ஒரு ரஸமான கட்டம்.

''ஒருவர் நூற்றுக்கு காலுவீதம் இருபதினாயிரம் ரூபாய் கடன் வாங்கி, அதில் ஐயாயிரத்தைக் கொண்டு வீடு கட்டினார். (எந்தத் தெருவில்; ஸார்? என்று ஓர் குரல் கேட்கிறது.) அதை மாதத்திற்கு முப்பது ரூபாய்க்கு வாடகைக்கு விட்டார். (''ஐய்யோ! அதுக்குள்ளே வாடகைக்கு விட்டுட்டானா? முன்னாலேயே தெரிந்திருந்தால் அதை நாமே எடுத்துக் கொண்டிருக்கலாமே.) பாக்கிப் பணத்தை நூற்றுக்கு எட்டுவீதம் வட்டிக்கு விடுகிறார். அவருக்கு ஒரு வருஷத்தில் எவ்வளவு லாபம் அல்லது நஷ்டம் கிடைக்கும்?''

இப்படிப் பல பேர்கள் கடன் வாங்கி லாபம் சம்பாதிப்பார்கள். கையில் ஒரு காசு இல்லாத இவர்களை நம்பி எவன் தான் கடன் கொடுக்கிறானோ தெரியவில்லை! வாக்குச் சாதுர்யத்தால் மயக்கி விடுகிறார்கள் போலிருக்கிறது.

தன் பெண்ணின் கலியாணத்துக்காகப் பத்தாயிரம் ரூபாய் கடன் வாங்கி, அதை அடைக்க முடியாமல் ஒருவன் திண்டாடினான் என்று ஒரு தரமாவது நான் கணக்குப் புத்தகங்களில் கண்டதில்லை. வாழ்க்கைக்கு மாறாக இருக்கும் கணக்குகள் எதற்கு உபயோகம்?



''ஸார்! நல்ல கேஸ் ஒன்னு எடுத்துக்கறேளா?''

''ஓ, எஸ்! எடுத்துக்கறேன்; கிரிமினலா? சிவில் கேஸா?''

''அதைச் சொல்லவில்லை, ஸார்! நான் சொல்றது இந்த ஆஜர் கேஸ்! அந்தனை தஸ்தாவேஜிகளையும் இதில் போட்டு எடுத்துப்போகலாம்.''

---

கணித நூல்களில் கலியாணத்தைப் பற்றி விவரிக்காவிட்டாலும், அவைகளில் மரண சம்பவங்களுக்குக் குறைவு இல்லை.

''மரணத் தருவாயிலிருக்கும் ஒருவன் தன் இளைய மனைவியைக் கூப்பிட்டு 'இந்தப் பையில் பத்தாயிரம் ரூபாய் இருக்கிறது. இதில் பதினேழில் இரண்டு பங்கை உன் மூத்தாள் பிள்ளைக்குக் கொடு. பதினேழில் ஒரு பங்கை உன் மூத்தாள் பெண்ணுக்குக் கொடு. பாக்கியை நீயும் உன் இரு குழந்தைகளும் சமமாக எடுத்துக் கொள்ளுங்கள்' என்று சொன்னான். அப்படியானால் ஒவ்வொருவருக்கும் எவ்வளவு ரூபாய் கிடைக்கும்?''

இதற்கு விடை, இளையாளுக்கும் மூத்தாள் குழந்தைகளுக்கும் எப்படிப்பட்ட உறவு என்பதைப் பொருத்திருக்கிறது என்று ஏன் அந்தக் கணித நூலாசிரியருக்குத் தெரியக் கூடாது?

இப்படி ஒவ்வொரு கணக்கையும் குயுக்தியாக அர்த்தம் செய்து கொண்டு போனால் எனக்கு எப்படி கணக்கு வந்திருக்க முடியும் என்று நீங்களே சொல்லுங்கள்.

# குடி உரிமை அளிக்கக் குறுக்கு வழி!

கொழும்பு, ஆகஸ்டு 12உ

இலங்கை இந்தியர்களுக்குக் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ கே. ராஜலிங்கம் ஒரு முக்கியமான யோசனைசொல்லியிருக்கிறார். "எல்லா தொழில்துறையும் இலங்கையர் மயமாக்க வேண்டுமென்று கிளர்ச்சி நடந்துவரும் இச் சமயத்தில் இலங்கை வாழ் இந்தியர்களின் எதிர்கால வாழ்வு அவர்கள் இலங்கையர்களாவதையே பொருத்திருக்கிறது. இதை உத்தேசித்தே பிரஜா உரிமைச் சட்ட பகிஷ்காரத்தை வாபஸ் பெறவேண்டுமென்று காங்கிரஸ் ஸ்தாபனம் தீர்மானித்தது. போதிய யோக்கியதாம்சங்கள் உடைய இந்தியர்கள் தயங்காமல் உடனே தங்களை இலங்கையர்களாகப் பதிவு செய்துகொள்ள வேண்டும்" என்று ஸ்ரீ ராஜலிங்கம் புத்திமதி கூறுகிறார். இலங்கையர் மயமாக்கும் கொள்கையில் அரசாங்கம் தீவிர கவனம் செலுத்துவதோடு இதற்கென்று பிரத்தியேகமாக ஒரு மந்திரியையும் நியமித்திருக்கிறது.

இந்திய வியாபாரிகள் இலங்கையர்களை அதிகமாக வேலைக்கு அமர்த்திக்கொள்ள வேண்டுமென்று மந்திரி ஸ்ரீ ஏ. இ. குணசிங்கா பல கூட்டங்களிலும் சொல்லி வருகிறார். அதே சமயம் இந்திய வர்த்தகச் சங்க உபதலைவர் ஸ்ரீ கே. ஜி. ராவ், "இந்தியர்களை இந்தியர்களென்ற ஒரே காரணத்துக்காக அவர்களை வேலைகளிலிருந்து நீக்குவது ஆசியாவின் பண்பாட்டுக்கே முரண்பட்டது" என்று கூறுகிறார்.

"இலங்கையர்களுக்கு வர்த்தகத் துறையில் ஊக்கமூட்டுவதற்காக இந்தியர்களின் வியாபார லைசென்சுகள் வெகுவாகக் கட்டுப்படுத்தப்பட்டு விட்டன. எனவே இந்தியர்களின் தொழில் குறைந்து அதிகச் சிப்பந்திகளுக்கு வேலை தரும் சந்தர்ப்பமும் குறைந்து விட்டது. இந்த நிலைமையில் இலங்கையர்களை இந்திய வியாபாரிகள் அதிகமாக வேலைக்கு அமர்த்திக் கொள்ளுவது அசாத்தியம். ஆயினும் சந்தர்ப்பம் ஏற்படும் பொழுதெல்லாம் இலங்கையர்களை அமர்த்திக் கொள்ள இந்திய வியாபாரிகள் தயங்கமாட்டார்கள்" என்று ஸ்ரீ ராவ் மேலும் கூறியிருப்பதை இலங்கை அரசாங்கமும் முக்கியமாக மந்திரி ஸ்ரீ ஏ. இ. குணசிங்காவும் நிதானமாக ஆராய்ந்து பார்க்கவேண்டும்.



"என்னா! இன்னிக்குச் சினிமாவுக்கு வருகிறீர்களா?"

"இப்போது தொந்தரவு செய்யாதே. ஆபீஸில் வேலை ஜாஸ்தி; பிராணன் போகிறது!"

"போனால் போகிறது. இந்தத் தடவை மாத்திரம் வந்து விடுங்கள்!"

## பெயர்களினால் கஷ்டம்

இலங்கை அரசாங்கம் இயற்றியுள்ள இந்தியர் பாகிஸ்தானிகள் பிரஜா உரிமைச் சட்டமும் குடியேற்ற வெளியேற்றக் கட்டுப்பாட்டுச் சட்டமும் ஏற்றுமதி இறக்குமதி சம்பந்தமான கட்டுப்பாடுகளும் பல்லாயிரக் கணக்கான இலங்கையர்களையே பாதிப்பதாகக் கடுமையான புகார்கள் எழுந்துள்ளன. இதை ஜனாப் எம். வி. எம். கலீல் சமீபத்தில் எடுத்துக் காட்டியிருக்கிறார். யாழ்ப்பாணத் தமிழர்களில் அநேகருடைய பெயர்களும் இந்தியப் பெயர்களாயிருப்பதினால் அவர்கள் உண்மையில் இந்தியர்களல்ல என்பதை ருசுப்படுத்தினால்தான் இலங்கையர் என்ற பாஸ்போர்ட்டுகளும் இதரச் சலுகைகளும் அளிக்கப்படுகின்றனவாம். இவ்வித நிபந்தனை சிங்களவர்களிடம் கேட்கப்படுவதில்லை. சிங்களவர்களின் பெயர்களே அவர்கள் இலங்கையர்களென்பதை ருசுப்படுத்தும் அத்தாட்சியாக ஒப்புக் கொள்ளப் படுகின்றது. இலங்கைத் தமிழர்களிடமும் முஸ்லீம்களிடமும் இலங்கையர்களென்பதை ருசுப்படுத்தப் போதிய தஸ்தாவேஜுகள் இல்லாதபடியினால் பல நூற்றாண்டுகளாக, தலைமுறை தலைமுறையாக இலங்கைவாசிகளாயிருந்தும்

அவர்கள் மிகுந்த கஷ்ட நஷ்டங்களுக்கு உட்படுத்தப் பட்டு வருகிறார்கள். இலங்கையர்களுடைய பாடே இப்படியிருப்பின் இந்தியர்கள் தங்களை இலங்கையர்களாகப் பதிவு செய்து கொள்ளத் தஸ்தாவேஜு பூர்வமாக யோக்கியதாம்சங்களை ருசப்படுத்துவது எவ்வளவு கடினமானது என்பதை யாரும் சுலபமாக ஊகித்துக் கொள்ளலாம்.

## குறுக்கு வழி

ஐரோப்பியர்களில் சிலருக்கு இலங்கைப் பிரஜா உரிமை அளிப்பதற்காக ஒரு புதிய குடியுரிமைச் சட்டம் இயற்ற அரசாங்கம் உத்தேசித்திருப்பதாகத் தெரிகிறது. சமீபத்தில் நிறைவேற்றப்பட்ட தேர்தல் சட்டத் திருத்தத்தின் பிரகாரம் இலங்கைப் பிரஜைகள் மட்டுமே பார்லிமெண்டு மெம்பர்களாக இருக்கலாம். இதன்படி ஐரோப்பியத் தோட்ட முதலாளிமார்களுக்கும் பார்லிமெண்டில் பிரதிநிதித்துவம் இல்லாமற் போய் விடுமாகையினால் இவ்வித நிலைமையைத் தவிர்க்க சர்க்கார் அரசியல் திட்டத்துக்கு ஒரு திருத்தம் கொண்டுவந்தார்கள். இந்தியர்களின் பிரஜா உரிமையை மட்டும் பறித்து அந்த உரிமைகள் ஐரோப்பியர்களுக்கு அளிக்கப்படுவதை ஏற்க எதிர்க் கட்சியினர் தயாராயில்லை. அவர்களுடைய எதிர்ப்பினால் மசோதா தோல்வியடைந்து விட்டது. இதன் காரணமாக ஐரோப்பியர்களுக்குக் குறுக்கு வழியில் பிரதிநிதித்துவம் அளிக்க குடி உரிமைச் சட்ட மசோதா என்று ஒரு புது மசோதாவைக் கொண்டு வந்து சட்டமாக்க இலங்கை சர்க்கார் உத்தேசித்திருக்கிறார்களாம்.

## மதிப்பு உயர்கிறது

செப்டம்பர் மாதம் இந்தியாவின் சுகாதார மந்திரி ராஜகுமாரி அமிர்தகௌரி இலங்கைக்கு விஜயம் செய்யப் போவதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. உலக சுகாதார ஸ்தாபனத்தின் தென்கிழக்கு ஆசியாப் பகுதிக் கமிட்டியின் மூன்றாவது வருடக் கூட்டம் இந்தியாவுக்கு வெளியில் முதன் முறையாக இவ் வருடம் இலங்கையில் கூடுகிறது. அதற்கு ராஜகுமாரி அமிர்த கௌரியும் பர்மியக் குடியரசு ஸ்தாபகரின் மனைவி ஸ்ரீமதி அவுங்ஸானும் வருவார்களென்று எதிர்பார்க்கப் படுகிறது. சர்வதேச மகாநாடுகள் இலங்கையில் அடிக்கடி கூடுவதனால் உலக அரசியல் மேடையில் இலங்கையின் மதிப்பு அதிகரித்து வருகிறது. —ஜவி.














# கௌதாரி

மா. கிருஷ்ணன்

நான் சிறுவனாயிருந்தபோது எனக்கு ஒரு மகமதிய சிநேகிதனுண்டு. அவனிடம் பச்சை வர்ணப் பூச்சுடைய மூங்கில் கூண்டில் ஒரு சேவல் கௌதாரி இருந்தது. அநேகமாய் அது கூண்டிலுள் அடைந்திராது. என் நண்பனைப் பின் தொடர்ந்து அவன் போகுமிடமெல்லாம் அதுவும் செல்லும். அவனும் அதன் சுகத்தை உத்தேசித்துக் கறையான் புற்று இருக்குமிடங்களைத் தேடிச் சென்று, ஒரு கோலால் புற்றுக்களைத் தகர்த்து, வெளியே பெருகி வரும் சிதலைத் தன் கௌதாரிக்கு இரையாக்க உதவுவான். இறக்கை வெட்டாதிருந்தும் அந்தச் சேவல் அவனை விட்டு எங்கும் பறந்து போகாது. அவன் அதை மெல்லச் சீட்டியடித்துக் கூப்பிடுவான். உடனே அது ஆவலுடன் அவனருகில் ஓடி வரும். கூடி நடந்து செல்லுகையிலும் அவ்வப்பொழுது அதைச் சீட்டியடித்து அழைப்பான்; அது தன் முழங்கும் குரலில் பதிலளித்துத் தான் பின் தொடர்ந்து வருவதற்கு உறுதி கூறும். எனக்கும் அந்த மகமதியப் பையனுக்கு முன்ன சிநேகத்திற்கு அவனுடைய கௌதாரிதான் முக்கிய காரணமென்று இப்போது எனக்குப் புலப்படுகிறது. நான் அடிக்கடி அவன் வீட்டுக்குப் போய் அவனுடன் பேசி அதைக் கண்டு வருவேன். அதன் சிவந்த கால்களில் பட்டு நூலில் நுட்பமான பசுமணி கோத்த காப்புகள் போட்டிருப்பான். தனக்கு அந்தப் பறவையின் பாஷை தெரியுமென்றும் அதனுடன் தனக்கு அந்நியோன்ய நட்பு உண்டென்றும் அவன் என்னிடம் எத்தனையோ முறை சொல்லியிருக்கிறான். இது நிஜந்தானென்று அவ் வயதில் நான் நம்பினேன். பிறகு, பல வருஷங்களாகப் பிராணிகளின் இயல்பைப் பற்றிப் படித்தும், அவைகளைக் கவனித்தும், இயல்பூக்கம் என்பது நாம் அறிவு என்று சொல்லும் புத்தியில்லையென்றும், பறவைகள் போன்ற பிராணிகளுள் இந்தச் சுபாவ ஊக்கமே மிகுந்து அறிவின் தூண்டுதல் அபூர்வமாக விருப்பது உண்மைதானென்றும் தெரிந்து கொண்டேன். பறவைகளைப் பழக்குவோர் அவற்றின் சுபாவத்தை உணர்ந்து அதற்கு இணங்க பழக்கியே, அறிவாதார நட்பிருப்பதுபோல் தம் வசம் அவைகள் நடந்து கொள்ளும்படி செய்கின்றனர் என்று அறிந்தேன். ஆனால் இன்னமும் நான் ஒரு மனிதனுக்கும் ஒரு அற்பப் பிராணிக்கும் நிஜ நட்பிருக்க முடியாதென்று ஒப்புக்கொள்ள மாட்டேன்.

கௌதாரி வளர்ப்பவர் சேவலையே வளர்ப்பார்கள். ஏனென்றால் சண்டை விடுவதற்காகவே அதை அவர்கள் வைத்திருப்பார்கள். பேடைக் கௌதாரி சண்டைக்குதவாது. அதன் குதிக் கால்களின் மேல் வெட்டும் நகங்கள் கிடையாது. தவிரவும் தன் பெண் தன்மைக்கேற்பச் சத்துருவை நேரில் எதிர்த்துச் சண்டையிடாது. ஆண் கௌதாரி தன் அருகாமையில் மற்றொரு சேவலிருக்கப் பொறுக்காது. இறக்கைகளால் தாக்கியும், ஆணி போன்ற குதிக்கால் நகங்களால் குத்தி வெட்டியும் போரிடும்.

கிராமாந்தரங்களிலும் புதர்க் காடுகளிலும் கௌதாரிகளைச் சாதாரணமாகக் காணலாம். சேவலும் பேடையும் ஜதையாகவே இருக்கும். சில வேளைகளில் ஜதைகளுடன் குஞ்சுகளும் சேர்ந்திருக்கும். கௌதாரி மற்ற பட்சிகளைப் போல் அதிகமாகப் பறக்காது. வேண்டுமென்றால் நெடுந்தூரம் பறக்கும் சக்தியிருந்தும், அபாயம் வந்தபொழுது தன் கால்களையும், புதர்க் காட்டுடனும் உழு நிலத்துடனும் ஒத்து மறையும் வர்ணத்தையும் நம்பி ஓடி ஒளியும். காலையிலும், மாலையிலும் மேகங்கள் சூரியனை மறைத்து மந்தாரமாகவுள்ள வேளைகளிலும், கௌதாரிகள் இரை தேடி மேயும். பூமியைக் குத்திக் கிளறித் தானியங்களையும், தத்துக் கிளி, சிதல் முதலியவைகளையும் தேடிப் புசிக்கும். கம்பு, சோளம் பயிரிட்ட பூமியில் அறுப்புக் காலத்துக் கப்பால் நித்தியமாய்க் கௌதாரிகளைப் பார்க்கலாம். நான் எட்டு வருஷ காலமாகக் குடியிருந்த ஓர் ஊரில் என் வீட்டைச் சுற்றி, சுமார் நூறு கஜ தூரத்துள் சோள வயல்கள் இருந்தன. சங்கராந்தியின் பின் தினமும் கௌதாரிகளின் களி முழங்கும் குரல் சூரியனை வரவேற்று விடையளிக்கும். புதர்க் காட்டையும் புல் வெளிகளையும் வயற்காடுகளையும் குறிக்கும் அந்தச் சப்தம் என் செவிகளுக்கு இனிமையாகவும் ஒரு விதக் கிளர்ச்சி கொண்டதுபோலும் படும்.






## 23. பொன்னாசாரியின் மனைவி

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

**ஸ்ரீ** ராமகிருஷ்ணரிடம் இருந்து வந்த சீடர் ஒருவருக்கு சர்க்கார் உத்தியோகம் ஆயிற்று. சம்பளம் பெற்றுக் கொண்டு வேலை செய்வது சரியா, என்கிற கேள்வி பிறந்தது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்னதாவது:

"அப்பனே, உன் தாயாரைச் சம்ரக்ஷிப்பதற்காக நீ உத்தியோகம் ஒப்புக் கொண்டாய். நீ செய்தது சரியே ஆகும். இந்த அவசியம் இல்லாதிருந்தால் இது பெரும் தவறாயிருக்கும். வேலை ஒப்புக் கொண்டு பகவானுடைய பணி செய்து வா" என்றார்.

பணமும் அதிகாரமும் சம்பாதித்தவர்கள் அவற்றைப் பற்றி அகம்பாவம் அடைந்து விடுகிறார்கள். சமுதாயத்தில் எல்லோரும் அவர்களை மிக மதிக்கிறார்கள். ஆனால் இவையெல்லாம் எத்தனை நாள்? உலகத்தை விட்டுப் போகும்போது இவற்றில் எதுவும் கூட வராது. பணத்தைப் பற்றி ஒருவன் பெருமைப் படுவதற்கு என்ன இருக்கிறது? நான் பணக்காரன் என்று ஒருவன் எண்ணுகிறான். எத்தனையோ பேர் அவனை விட அதிகப் பணக்காரர்கள் இருக்கிறார்கள் என்பதை அவன் மறந்து விடுகிறான். அவர்கள் முன் இவன் ஒரு பிச்சைக்காரன்தான்.

இருட்டினதும் மின்மினிப் பூச்சிகள் கிளம்புகின்றன. அந்தப் பூச்சிகள் நினைக்கலாம்: 'ஆகா, நாம் உலகத்துக்கெல்லாம் ஒளி வீசுகிறோம். நமக்குச் சமானம் யார்?' என்று. பிறகு கொஞ்ச நேரம் கழிந்ததும் ஆகாயத்தில் நட்சத்திரங்கள் பிரகாசிக்க ஆரம்பிக்கின்றன. அதைக் கண்டதும் மின்மினிப் பூச்சிக்குக் கொஞ்சம் அடக்கம் ஏற்படுகிறது.

'ஓகோ! எங்களைவிட அதோ ஆகாயத்திலிருக்கும் அந்த விண்மீன்கள் மிகப் பிரகாசமாக இருக்கின்றனவே? நம்முடைய பெருமையைப் பற்றி இனி அடக்கம் கொள்ள வேண்டும்' என்று எண்ணுகின்றன. பிறகு சந்திரன் பூரண வட்டமாக உதயமாகிறான். அட, அடா! என்று நட்சத்திரங்கள் வாடி ஒளி மங்கிப் போகின்றன. சந்திரன் மிகப் பெருமையோடு பிரகாசிக்கிறான். 'எனக்குச் சமானம் யார்? பூமியெல்லாம் நிலா நிரம்பிப் பிரகாசிக்கச் செய்கிறேன்' என்றெல்லாம் நினைத்து, திங்கள் கர்வம் கொள்கிறது.

திடீர் என்று கிழக்கில் வானம் வெளுக்கிறது; சூரியன் கிளம்புகிறான். சந்திரன் இப்போது எங்கே? "பணக்காரர்களே, இவற்றையெல்லாம் பார்த்து அடக்கம் பெறுங்கள்" என்கிறார் ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

பாலத்தின் கீழே தண்ணீர் ஓடுகிறது; தேங்கித் துர்நாற்றம் அடிப்ப

தில்லை. அதைப் போல் பணத்தைக் கையாளுங்கள். பணத்தைத் தேக்கி அசுத்தமடைந்து நாற்றம் எடுக்க விடாதீர்கள். தாராளமாக ஓட விட்டு நலன் செய்யுங்கள். பணத்தை உங்கள் சேவகனாக அமைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் அதன் அடிமையாகி விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள்.

பொன்னுசாரியின் மனைவியைப் பாருங்கள்! ஒரு கையால் உரலுக்குள் நெல்லைத் தள்ளிக்கொண்டிருக்கிறாள். மற்றொரு கையைக் கொண்டு குழந்தையை மடியில் வைத்துத் தட்டிக் கொண்டிருக்கிறாள். கூடவே அவல் வாங்க வந்தவனிடம் பேரமும் பேசிக் கொண்டிருக்கிறாள். இப்படிப்பல விஷயங்களில் கவனம் செலுத்திக் கொண்டிருந்தும் உரலில் தன் கை விரல்கள் சிக்கிக் கொள்ளாமலும் பார்த்துக் கொள்ளுகிறாள்! அதைப்போல் உலக வாழ்க்கையில் இருந்தாலும் நெறி தவறாமல் ஆண்டவனை எப்போதும் நினைவில் வைத்துக் கொண்டே எல்லாம் செய்யுங்கள்!

கம்பத்தைப் பிடித்துக் கொண்டு பையன் இரு இரு வென்று சுழன்று சுற்றுகிறான். எத்தனை வேகமாகச் சுழன்றாலும் கம்பத்தைப் பத்திரமாகப் பிடித்துக் கொண்டு சுழல்கிறான். அதைப்போல் பகவானைப் பத்திரமாகப் பிடித்துக் கொண்டு உலக வாழ்க்கையில் சுழலுங்கள்.



கிராமத்தில் பெண்கள் தலை மேல் தண்ணீர்க் குடம் வைத்துக் கொண்டு செல்வதைப் பாருங்கள். பெரிய குடத்துக்கு மேல் சின்னக் குடம், அதற்கு மேல் அதை விடச் சிறிய பாத்திரம். எல்லாவற்றிலும் ஜலம் நிறைந்திருந்தாலும் ஒரு சொட்டு நீர் கீழே சிந்தாமல் நடந்து போகிறார்கள். வழியில் குடும்ப யோக க்ஷேமமெல்லாம் பேசிக் கொண்டும் போகிறார்கள். இப்படியே நீங்கள் உலகத்தில் வாழ்க்கை நடத்த வேண்டும். எந்தச் சந்தர்ப்பத்திலும் நெறி தவறிய காரியம் செய்யக்கூடாது.

எல்லாம் ஆண்டவனுக்காகச் செய்கிறேன் என்று மனதை நிலையில் நிறுத்தி எல்லாக் காரியங்களையும் செய்தால் தவறு ஏற்படாது. இதுவே கர்ம யோகம். இதுவே பக்தி யோகமும் ஆகும்.

பலாப் பழம் அறுக்கும் போது கைக்கு எண்ணெய் தடவிக் கொண்டு பிறகு அறுக்கிறோம். அப்படிச் செய்தால் பலாப் பிசின் கையில் ஒட்டாமலிருக்கும். பழம் சரியாக அறுத்துச் சுளை எடுக்க முடியும். அவ்வாறே பகவானிடம் பக்தி செய்து மனதை ஸ்திரப் படுத்திக் கொண்டே உலக வாழ்க்கை நடத்த வேண்டும். அப்படிச் செய்தால் எவ்வளவு பணமும் சுகங்களும் கண்டாலும் உலகப் பற்றிய பிசின் ஒட்டாது. கஷ்டங்கள் ஏற்பட்டாலும் மனம் உடையாது.

**இரண்டு விடுகதைகள்:** 1. மணி அடித்தால் மலைப்பாம்பு நகரும்.
2. விடிய விடியப் பூந்தோட்டம், விடிந்து பார்த்தால் வெறுந் தோட்டம்.

**சென்ற வார விடுகதைகளுக்கு விடை:** 1. மூட்டைப் பூச்சி. 2. கொழுக்கட்டை.



# சலனம்

மாயா

- சந்திரா -

"அடைந்து கிடந்த என்னை ஆசை வார்த்தை காட்டி, அம்பலத்திற் கிழுத்து, இப்பொழுது அலட்சியம் செய்கிறீர்களே, இது நியாயமா! உண்மையாகச் சொல்லுங்கள்; மணவாழ்க்கையை நானாக வலியவந்து உங்களிடம் கோரியது உண்டா! வீடே, எனக்கு வெளியுலகமா யிருந்தது. படிப்பு ஒன்றே என் பாதையாக இருந்தது. அன்று ஏதோ லட்சியப் பித்துப் பிடித்து நீங்கள், 'ஞானு, ஞானு' என்று குழைந்தீர்கள்! இன்று அதே ஞானு உங்களுக்கு வேம்பாகக் கசந்து விட்டாள்! அன்பு என்ற சொல்லுக்கு அர்த்தம் விளங்காமலிருந்த எனக்கு அதன் சக்தியை உணர்த்தியது தாங்கள்தானே! கண் கொடுத்துக் கண் பறிப்பதுபோல் இன்று, 'அதை மறுக்கிறீர்களே! நியாயமா!"

உணர்ச்சி வேகத்தில் வார்த்தைகளைக் கொட்டி விட்டாள் ஞானகி. மேஜைமேல் சாய்ந்தவாறு நின்ற ரகு பெண்மைக்கெதிரே வாய் அடைத்துப் போனான்.

"இதோ, என்னைப் பாருங்கள்! அன்று போல இன்றும் இருக்கும் என்னிடம் என்ன குறையை நீங்கள் புதிதாகக் கண்டுவிட்டீர்கள்! இல்லை, இல்லை! உங்கள் மனதை யாரோ விஷமாக்கி விட்டார்கள். என்னை வெறுத்து ஒதுக்காதீர்கள். அன்புக்காக அலை பாய்கிறது என் நெஞ்சு. நான் வேண்டுவதெல்லாம் உங்கள் அன்பைத்தான்!" இதைச் சொல்லும் பொழுதே ஞானகிக்கு அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. சிறு குழந்தையைப் போலக் கேவிக் கேவி அழத்தொடங்கி விட்டாள்.

அதைக்கேட்ட ரகுவின் உள்ளத்தை என்னவோ செய்தது. அவன் வாய் திறவாமல் 'விடு விடு' என்று வெளியே சென்றான். கால் போன போக்கில் சென்று கொண்டிருந்த அவனைக் கடற்கரையின் குளிர் நிலவும் மென் காற்றும் 'வா' என்று வரவேற்றன. ரகு பரந்த மணல் வெளியில் போய் உட்கார்ந்தான். எதிரே அலைகடல் ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தது. அதன் எதிரொலிபோல் ரகுவின் உள்ளக் கடலும் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

* * *

நண்பன் மூர்த்தி கல்யாணம் செய்து கொள்ளாததற்குக் கற்பித்த காரணங்களையே நம்பி யிருந்தான் ரகு. ஆனால் ஒரு விடுமுறை யின்போது, மூர்த்தியின் வீட்டுக்குச் சென்று, பத்து நாட்கள் தங்கி யிருக்கும் சந்தர்ப்பம் வாய்த்தபொழுது தான், அவனுக்கு உண்மை விளங்கியது. அங்கே அவன் ஞானகியை முதன் முதலாகக் கண்டான். அவள் மூர்த்தியின் தங்கை என்பதும் அங்கே போன பிறகுதான் அவனுக்குத் தெரிய வந்தது.

'இவ்வளவு தூரம் நாம் நெருங்கிப் பழகியும் நீ உனக்கு ஒரு தங்கை இருப்பதாகச் சொல்ல வில்லையே!' என்று கேட்க நினைத்தான் ரகு. ஆனால் அதற்கு முன்பாகவே ரகுவுக்கு மூர்த்தி தன் தங்கையைப்பற்றி 'மௌனம்' சாதித்ததன் காரணம் விளங்கிவிட்டது.

ஞானகி கல்யாண வயதுப் பெண். பள்ளிக் கூடத்தில் படித்துக் கொண்டிருந்தாள். அவள் கண்களில் அழகைவிட அறிவுக்களை வீசியது. ஆனால் அவளுக்கு ஒரு கால் மட்டும் சற்று ஊனம். எனவே விந்தி விந்தி நடந்தாள். தன் குறை தெரிந்த ஞானகி தன் ஆசை அபிலாஷைகளுக்கு வேலி கட்டிவிட்டாள். அது மட்டும் அல்ல; தனக்கு வரன் தேடும் முயற்சியில் வீணாகப் பணத்தையும் நேரத்தையும் செலவிட வேண்டாம் என்றும் சொல்லிவிட்டாள். படிப்பிலே தன் மனதைச் செலுத்தினாள் ஞானகி. அவள் கவனம் வேறு எதிலும் செல்லவில்லை.

பருவத்தில் இருந்த ஞானவியின் தனிமை வாழ்க்கைக்கு முன், தன் மண வாழ்க்கை அவ்வளவாக ரசிக்காது என்ற ஒரே காரணத்தினுல்தான் மூர்த்தி தன் கல்யாண விஷயத்தைத் தள்ளிப் போட்டுக்கொண்டு வந்தான். ஞானவியின் பேரில் அவனுக்கு அளவற்ற பாசம். ஆனுல் அவளுக்கு உள்ள குறையைப் போல் வேறு ஏதாவது ஒன்றில் குறையுள்ள பையன்தான் அவளை மணக்க முன் வருவான் என்று அவன் எண்ணினுன். ஆகவே, அவன் அவளுடைய கல்யாண விஷயமாக அதிகமாகச் சிரத்தை எடுத்துக் கொள்ளவில்லை. மேலும், ஞானவியின் வேண்டுகோளும் அவனை, அவளுடைய கல்யாண விஷயமாக அதிக முயற்சி எடுத்துக் கொள்ளத் தூண்டவில்லை.

சென்னையில் எழுத்துலகத் தொண்டின் மூலம் நண்பரானவர்தான் ரகுவும் மூர்த்தியும். ஞானவி தன் எழுத்துக்களை ரசித்துப் படிக்கிறுள் என்பதை அறிந்தபொழுது ரகுவினுடைய உள்ள நிறைவு எல்லை கடந்து போயிற்று. அத்துடன் ஞானவியின் புத்திக் கூர்மையும் அவன் கருத்தைக் கவர்ந்தது.

உலகத்தில் சிலர் அங்கத்தின் குறையினுலும், சிலர் அங்கத்தின் அளவு மீறிய நிறையினுலும் மனம் புழுங்கித் தவிப்பதை அனுதாபக் கண் கொண்டு பார்த்தவன் ரகு. அப்பொழுதெல்லாம் தன்னை ஊனம் ஏதுமின்றிப் படைத்த பரம்பொருளை மனதார நினைப்பான். ஞானவியைப் பார்த்ததுமுதல் அவளுக்கு சேர்ந்த குறைக்காக அவளைவிட அதிகமாக வருந்தியது ரகுவின் மனம்தான். வேற்று மனிதன் என்று பாராமல், உள்ளத்தில் கள்ளமின்றிச் சகஜமாகத் தன்னுடன் பேசிப் பழகிய ஞானவியின் நடத்தை, தன்னுடைய கதைகளைப் பற்றிய அவளுடைய நேர்மையான விமர்சனம், தன் குறையைப்பற்றி அவ்வளவாகப் பொருட்படுத்தாத அவளுடைய அலட்சிய மனோபாவம், இவையெல்லாம் சேர்ந்து ரகுவின் மனதைச் சிறிது சிறிதாகத் தொட்டு இழுத்தன. ஞானவியின் வாழ்க்கையை மலரச் செய்ய வேண்டியது தன் கடமை என்று மனதில் கங்கணம் கட்டிக்கொண்டு அவன் சென்னைக்குத் திரும்பிச் சென்றுன்.

தன்னைப் பார்த்த பின்னரும் மூர்த்தியோ, அவன் தாயாரோ, ஞானவியின் கல்யாணப் பிரச்னையை எடுத்துப் பேசாதிருந்தது, ரகுவுக்கு மிகவும் வியப்பை அளித்தது.

சென்னை வந்தபிறகு அவனுக்கு நிம்மதியில்லை. அடிக்கடி ஞானவியின் உருவம் அவன் மனக் கண்முன் காட்சி யளித்தது. மனிதர்களுடன் ஒட்டிப் பழகும் ஞானவியின் பண்பு, அவன் மனதை வெகுவாகக் கவர்ந்திருந்தது. ஆகவே, அவனுல் எவ்வளவு முயன்றும் அவளை மறக்கவே முடியவில்லை. ஆனுல் தன் தங்கையின் கல்யாணத்தைப் பற்றி அவனிடம் மூர்த்திதான் வாய் திறக்கவேயில்லையே!

ரகுவே, தன்னிடம் வலியவந்து தன் தங்கை ஞானவியைக் கல்யாணம் செய்து கொள்ளுவதாகச் சொன்னபொழுது மூர்த்தி அசந்தே போய்விட்டான்! முதலில் அவன் ரகு புது மோகத்தில், உணர்ச்சி வேகத்தில் ஏதோ பிதற்றுகிறுன் என்றுதான் எண்ணினுன். ஆனுல் ரகுவோ விஷயத்தை விடாப்பிடியாக வற்புறுத்தினுன். அவன் கல்யாணத்தைப் பொறுத்தமட்டில் அவன் வைத்ததுதான் சட்டம். அவனுடைய ஒரே ஆதரவான அத்தையும் அவன் எப்படியாவது கல்யாணம் என்று ஒன்று செய்துகொண்டு நன்ருயிருந்தால்போதுமானது என்றுதான் எண்ணினுள்.

“ரகு! நீ ஆலோசனை செய்து ஒரு முடிவுக்கு வா. பின்னுல் உன் செய்கைக்கு நீயே வருந்தினுல், அது ஞானவிக்கு மட்டுமல்ல, நம் நட்புக்கும் பங்கம் விளைவிக்கக்கூடும். எனக்கும் தீராத ஏக்கத்தைக் கொடுக்கும்” என்று கடைசி முறையாக எச்சரித்தான் மூர்த்தி. ரகுவுக்கிருந்த உத்வேக உணர்ச்சியில் மற்ற எதுவும் அவன் காதில் ஏறவில்லை. ஞானவியைக் கல்யாணம் செய்து கொண்டே தீருவேன் என்று பிடிவாதமாகச் சொல்லி விட்டான் ரகு.

ரகுவின் மனோரதத்தைக் கேள்வியுற்றதும் ஞானவியால் முதலில் நம்ப முடியவில்லை. மலராமலே கூம்பி விட்ட தன் வாழ்க்கை மொட்டுக்கு, ரகு மறுமலர்ச்சி கொடுக்க முயற்சிப்பதாக அவளுக்குத் தோன்றவில்லை. நைந்து போன தன் உள்ளத்துடன் அவன் விளையாடத் துணிகிறுன் என்றுதான் எண்ணினுள்.

ஆனுல் ரகு மிகவும் பிடிவாதமாக முனைந்து நின்றபொழுது அவளுக்கும் வாழ்க்கையின் ருசி அறிய மனம் நாட்டம் கொண்டது. அவள் மறுக்கவில்லை. திருமணம் நடந்து தனி வாழ்வும் தொடங்கியது. மூர்த்திக்கு ரகுவின் பேரில் மதிப்பு இரட்டிப்புமடங்கு உயர்ந்தது. புரட்சி மனப்பான்மையைவாயளவோடு நிறுத்திக் கொள்ளாமல் செயல் முறையில்—அதுவும் தன் சொந்த விஷயத்தில் செய்து காட்டிய ரகுவின் துணிவைக் கண்டு அவன் பிரமித்துப் போனுன். ஞானவியும் தன்னை வாழவைத்த ரகுவின் நன்றி மறவாது தன் அன்பினுல் அவனுக்கு ‘இன்பத் தொல்லை’ கொடுத்து வந்தாள்.



* * *

அமைதியாகத் தேங்கி நிற்கும் நீர்ப்பரப்பில் சிறு கல்லைக் கண்டு எறிந்ததும், சலனம் ஏற்பட்டு,

நெற்றலை எழும்பி மோதுவதுபோல, ரகுவின் உறுதியைக் கலைத்துச் சலனம் உண்டாக்க மூர்த்தியின் கல்யாணம் வந்து சேர்ந்தது.

ரகுவும் ஜானகியும் கல்யாணத்துக்குச் சென்றிருந்தனர். ஜானகிக்குத் தன் குறையைப் பற்றி என்றுமே தாழ்வு மனப்பான்மை இருந்ததில்லை. அவள் எல்லோருடனும் சகஜமாகப் பேசிப் பழகி வந்தாள். ஆனால் ரகுவின் கண்கள் மட்டும், 'தன் மனைவியைக் கல்யாணத்துக்கு வந்திருந்த பந்து ஜனங்கள் எப்படி மதிப்பிடுகிறார்கள்!' என்பதை நோட்டம் பார்ப்பதில் ஈடுபட்டிருந்தன. எவ்வளவோ விதமான அபிப்பிராயங்கள், அவர்கள் ஜோடி அமைந்ததைப்பற்றி அடிபட்டன.

அவன், மூர்த்தியின் தாக்ஷிண்யத்திற்காக ஜானகியை மணந்து கொண்டிருக்கலாமென்றும், அவன் அழகுக்கு எவ்வளவோ நல்ல பெண்கள் கிடைத்திருக்குமென்றும் கல்யாணத்துக்கு வந்திருந்தவர்கள் பேசிக்கொண்டிருந்தது அவன் காதுகளில் விழுந்தது. போதாக் குறைக்கு மூர்த்திக்கு வாய்த்த பெண் வேறு வெகு அழகாக அமைந்து விட்டாள்! தன் லட்சிய மணத்தைப் பலரும் வியந்து பாராட்டிப் பேசாது, தனக்காக அனுதாபப் படுவது போல் பேசியதைக்கான ரகுவின் மனம் மிகவும் வெதும்பியது. தான் செய்த தியாகத்தின் பலனாக, மூர்த்தி ஒரு அழகியை மனைவியாக அடைந்து விட்டான் என்ற பொறாமைப் புகை அவனுள்ளத்தில் மூண்டது. அதுமுதல் அவன் தன் செய்கைக்கு வருந்தத் தொடங்கி விட்டான். ஏதோ ஒரு வெறியில், முன்பின் நிர ஆலோசியாமல், தான் ஜானகியைக் கல்யாணம் செய்து கொண்டு விட்டதாக அவன் மனதில் ஒரு எண்ணம் முளைத்தது. நாளாவட்டத்தில் அந்த எண்ணம் வேர் விட்டுக் கிளை விட்டு அவன் மனதில் வளர்ந்தது. கல்யாணத்திற்குச் சென்று விட்டுத் திரும்பி வந்தது முதலே ரகுவின் போக்கு விசித்திரமாக மாறியிருப்பதைக் கண்டாள் ஜானகி. தன்னிடம் அவன் காட்டி வந்த அன்பையெல்லாம் மறந்து, அதற்குப் பதிலாகத் தன்னை அலட்சியம் செய்வதையும் உணர்ந்தாள்.

நமக்குச் சோதனைக் காலம் தொடங்கி விட்டது என்றும் முடிவு கட்டி விட்டாள். ரகுவின் திடீர் மாறுதலுக்குக் காரணமும் ஒருவாறாக அவளுக்குப் புரிந்துவிடவே, அவனுடைய கோழை மனதைக் கண்டு, அவள் உள்ளம் சிரித்தது! அடுத்த கணமே ஏக்கமும் உற்றது. நேற்று வரை தன்னைச் சுற்றிச் சுற்றி வளைய வந்து கொண்டிருந்த ரகு இன்று எதிர் பாராத விதமாகத் தன்னை வெறுப்பதை அவளால் பொறுக்க முடியவில்லை. ஆகவே தான் அன்று இரவு அவள் ரகுவின் எதிரே எரிமலையாகச் சீறியெழுந்து தன் உணர்ச்சிகளைக் கொட்டி விட்டாள். பேச்சற்றுப் போன ரகுவும், கடற்காற்று 'வா' என்று முகமன் கூறி அழைக்க வெளியே நடந்து விட்டான்.




* * *

எட்டாது போயிருக்கும் லட்சியத்தை எட்டிப் பிடிக்கும் முயற்சியில் வினையும் ஆர்வமும் துடிப்பும் அதே லட்சியம் கைகூடி விட்ட பின்னர் இருப்பதில்லை. ரகுவும் படித்தவன் பழங்கணக்குப் பார்ப்பது போல ஜானகியை மணந்து கொண்டதனால் ஏற்பட்ட பலன்களை ஆராயத் தொடங்கி விட்டான். தன்னையும் விதியையும் நொந்து கொண்டாலும் அன்றைய நிகழ்ச்சிகளுக்கு அடிப்படையான காரணம் தன் செய்கை தான் என்பதை அவன் மனச்சாட்சி குத்திக் காட்டியது. ஜானகி வெளியிட்ட ஒவ்வொரு வார்த்தையும் அவனுடைய மன ஆதங்கத்தை அப்படியே வெளிக் கொணர்ந்து கொட்டியதை அவன் நேரில் கண்டான். 'தன் நடத்தை நியாயம்தானா!' என்ற கேள்விக்கு அவன் மனம் விடை சொல்ல முடியாமல் தத்தளித்தது. மனதில் உறுதியின்றி இருக்கும் தன் குற்றம் ரகுவுக்குத் தெள்ளனப் புலப்பட்டது.

"ஜானகியின் ஸ்தானத்தில் தானிருந்தால்...! அதாவது நானே ஒரு அங்க ஹீனனாக இருந்து விட்டால்......!

"கல்யாணத்துக்கு வரன் தேடும் முயற்சியில் சளைத்துப்போய் நிற்கும் ஞானவியின் பெற்றோர் முன், நொண்டியான நான் எதிர்ப்பட்டிருப் பேன். 'ஒரு காலில் சற்றுத் தானே ஊனம்!' என்று அவர்களும் தன் பெண்ணை எனக்குக் கொடுக்கச் சம்மதித்திருப்பார்கள். தன் பொருட்டுப் பெற்றோர் படும் கஷ்டத்தைக் கண்டு ஞானவியும் எதிர்ப் பேச்சின்றி, என்னை மணக்து கொள்ளச் சம்மதித்திருப்பாள்.

"கல்யாணத்திற்குப் பின் ஞானவியின் மனதில் மட்டும் சலனம் ஏற்பட்டால்......! நொண்டி என்ற எண்ணம் தோன்றி கணவனை என்னை அவள் அலட்சியம் செய்ய முற் பட்டால்......! அதை என் மனம் தாளுமா!......

"மனித ஜாதியின் மனதுக்கே பொதுவாகச் சலன மனப்பான்மை உண்டு. அவளோ பெண்! பெண் உள்ளுக்குள் புழுங்குவாளே யொழியத் தன் மனதை வெளிக் காட்டிக் கொள்ள மாட் டாள். ஆனால் நாமோ அதைச் செய்கையிலும் காட்டுகிறோம்."

முடிவு கண்டுவிட்ட திருப்தியில் ரகு வீடு திரும்பினான். இருந்தாலும் அவனுடைய மனதை ஏதோ ஒரு சுமை அழுத்திக் கொண்டிருந்தது. ஞானவி சாப்பிடாமல் குப்புறப் படுத்து அழுது கொண்டிப்பாள் என்று அவன் எண்ணி யிருந்தான். ஆனால் வீட்டுக்கு வந்து ரகு கண்டகாட்சியோ அதிசயமா யிருந்தது.

வீட்டினுள் வெளியறைகளி லெல்லாம் ஞானவியைக் காணுததும் ரகுவின் மனம் துணுக்குற்றது. நேரே சமையலறைக்குப் போனான். ஞானவி சாப்பிட்டுக் கொண் டிருந்தாள். 'ஒரு பெண்ணைப் புரிந்து கொள்வது விஞ்ஞான முயற்சிக்கும் அப் பாற்பட்டது' என்பதாக எங்கோ படித் தது அவனுக்கு நினைவு வந்தது.

ரகு திரும்பி வந்ததைக் கண்ட ஞானவி, "இதோ! சற்றுப் பொறுங்கள். பாலைக் காய்ச்சித் தருகிறேன்" என்று கூறி அவ சரமாக அள்ளிச் சாப்பிட்டுவிட்டு எழுந் தாள். ரகு மாடிக்குச் சென்று விட்டான்.

குடும்பத்தில் ஏற்படும் சிறு பூசல்களை யெல்லாம் கூடத் தம் அழுகை, பட்டினி இவற்றின் மூலம் பெரிதாக்க முயலும் மற்றப் பெண்களைப் போல் இல்லாமல் அதை மூடி மறைத்து மறுபடியும் வாழ்க் கையில் தன் பிடியை விடாது கவ்விக் கொள் ளும் ஞானவியின் தனி வழி, அவனுக்கு மிக வும் ஆச்சரியத்தை அளித்தது. அவனுக்கு அவளுடைய அந்தக் காரியம் பரந்த மனப் பான்மையைப் படம் பிடித்துக் காட்டியது போலிருந்தது. அவள் அங்கத்துக்கு வேண்டு மானல் ஊனம் கற்பிக்கலாம். ஆனால் அவ ளுடைய அறிவில் அவனால் ஊனமே காண முடிய வில்லையே!

மணமான ஒருவன், பஸ்ஸிலும் டிராமி லும் கடைத் தெருவிலும் காணும் அழ கைப் பார்த்துத் தன் மனைவியை அந்த அழகோடு ஒப்பிட்டுப் பார்க்க முயன்றால் தானே மனதில் சலனம் ஏற்பட்டு கொண்ட மனைவியைத் தாழ்த்தும் பல என் ணங்கள் தோன்ற ஏதுவாகிறது! அழகைக் கண்கொண்டு ரசிப்பதோடு நிற்கவேண்டும். அதையும் தானே ஆளவேண்டும் என்ற ஆசை சுயநலமானது மட்டுமல்ல; மிகக் கேவல மானது. இந்த எண்ணம் எழுந்ததுதான் தாமதம்; ரகுவின் மனம் ரச மட்டத்தினுள் ஓடும் பாத ரசத்துளிபோலத் தவித்தது.

பாலைக் கொண்டுவந்து வைத்துவிட்டு அவன் எதிரே நின்றாள் ஞானவி. குத்துவிளக்கு நிற்பதுபோல, குறை சொல்ல முடியாதவாறு விளங்கியது அவள் உருவம்.

"என்மேல் கோபமா!" என்று அன்புடன் கேட்டான் ரகு.

"உங்களிடம் எனக்கென்ன கோபம்! நீங்களோ எல்லாம் தெரிந்தவர்கள். உங்கள் எதிரில் நான் என்ன சொல்லமுடியும்! ஆனால் ஒன்று; வெளியுலகத்து அழகில் நீங்கள் மயங் கியதோடு மட்டும் அல்லாமல் அதோடு என்னை யும் ஒப்பிட்டுப் பார்க்க முனைந்தீர்களே, அது மிகவும் தவறு. அதன் பலனுகத்தான் என்னை



அலட்சியம் செய்யத் துணிந்தீர்கள். ஒரு பெண்ணை அடிப்பதைவிட அலட்சியம் செய்வது கொடூரமானது. அதை அவள் மனம் தாளாது. எனக்கும் பொறுக்கவில்லை. அதனால் தான் சற்று முன் அப்படி நடந்துகொண்டு விட்டேன்! என்மேல் ஏதாவது தவறு இருந்தால் என்னை மன்னித்துவிடுங்கள்!'' என்றாள்.

அவனுடைய மனச் சலனத்தின் மூல காரணத்தை ஓரிரு சொற்களில் சிறைசெய்து அவன் கூறிவிட்டாள். அதில்தான் என்ன மகத்தான உண்மை புதைந்து கிடந்தது!

இருள் கவிந்த வானம்போலிருந்த அவன் அறிவு, அவள் சொன்ன அந்த வாக்கியங்களைக் கேட்டுத் தெளிவுபெற்றது.

''ஜானு! நான்தான் மிகவும் கொடுமையாக நடந்துகொண்டு விட்டேன். உன் பெருந்தன்மை எனக்கில்லாது போயிற்றே!'' என்று வருத்தம் தோய்ந்த குரலில் சொன்னான் ரகு.

''ஜானு என்று அன்பு ஒழுக அழைத்தீர்களே, அதுவே போதும்! அப்பப்பா! இந்த ஒரு வார்த்தைக்காக, கடந்த ஒரு மாதகாலமாக நான் எவ்வளவு தவியாய்த் தவித்திருப்பேன், தெரியுமா!'' என்றாள் ஜானகி.

''ஜானு! ஜானு! என் மனம் இனிமேல் என்றுமே பேதலிக்காது. இது நிச்சயம்'' என்றான் ரகு மகிழ்ச்சி வெறியில்.

''குதிரைக்குக் கண் பட்டை கட்டுவதுபோல இந்த ஆண்களுக்கும் ஏதாவது கண் பட்டை கட்டினால் தான் பெண்கள் வாழ முடியும்! ஏனென்றால், அப்பொழுதுதானே அவர்கள் கோணல் வழியை விட்டுச் சரியான பாதையில் போக முடியும்!'' என்றாள் ஜானகி விஷமச் சிரிப்புடன்.

''நீ சொல்லுவது உண்மைதான். கண் பட்டை கட்டியிருக்கும் குதிரை சிற்சில சமயம் சண்டித் தனம் செய்யத் தொடங்கி விடுவது உண்டல்லவா! அது போலச் சண்டித் தனம் செய்யத் தொடங்கி விட்டால் என்ன செய்வது!'' என்று ரகு குறும்புச் சிரிப்புடன் கேட்டான்.

''அப்படிச் சண்டித்தனம் செய்வது குதிரைக்கு நல்லதல்ல. கடைசியில் அது அடிமேல் அடி வாங்கி அவதிக்குள்ளாக நேரும். தெரியும் அல்லவா!'' என்றாள் ஜானகி. அவளுடைய பேச்சில் விஷமம் தொனித்தது.

''என்னையும் சண்டிக் குதிரை ஆக்கிவிடுவாய் போலிருக்கிறதே! இந்த ரகுவிடம் உன் ஜபம் சாயாது'' என்று சொல்லியவாறே ரகு அன்புடன் ஜானகியின் இரு கைகளையும் பற்றிக் கொண்டான்.

தன் கைகளோடு அவன் கைகள் அழுந்திய வேகத்தின்மூலம், ரகுவின் மனமாற்றத்தை—தன் நல்ல காலத்தை—உணர்ந்து கொண்டாள் ஜானகி. காணுமின்ற காட்சியிலே ஊனமில்லை, காணும் கண்களில்தான் ஊனமிருந்தது என்பதை அன்று ரகுவும் புரிந்து கொண்டான்.

சிற்றலைகள் அடங்கி, நீர்ப்பரப்பில் முன் போல, 'சலன'மற்ற அமைதி நிலவியது.

# கல்கி பாப்பா மலர்

ஆந்தை தன் விழிகளை உருட்டிப் பார்க்க முடியாது. எந்தப் பக்கமாவது பார்க்க வேண்டும் என்றால் கழுத்தைத் திருப்பித் தான் பார்க்கும்.







இந்த ஏணியின் ஒரு பக்கம் குறுகலாகவும் இன்னொரு பக்கம் அகலமாகவும் இருப்பது போலத் தோன்றுகிறதல்லவா? அளந்து பார்த்தால் இரண்டு புறமும் சமம்தான் என்பது தெரியும்.

நல்ல மழைக்குப் பின் சிறு குட்டைகள் ஏற்படுகின்றன. அவற்றில் மீன்கள் எப்படி வருகின்றன, தெரியுமா? குளத்தில் இருக்கும் மீன் முட்டைகள் பறவைகளின் கால்களில் ஒட்டிக் கொண்டு இன்னொரு குட்டைக்கு வந்து விடுகின்றன.






இங்கே எவ்வளவு குருவிகள் இருக்கின்றன, பாருங்கள்!
















# மூன்று சகோதரிகள்

## 7. பிரிந்தவர் கூடினர்!

அங்கே அவர்களுடைய மனதை முதன் முதலாகக் கவர்ந்தது மஞ்சள் நீர்ச் சுனை. அதன் மகிமையைப் பற்றி பாரிஜாதம் விளக்கிக் கூறினான். அதைக் கேட்டு கல்தான் அப்படியே ஸ்தம்பித்துப் போய் விட்டான். அடுத்தபடியாக அவர்கள் பாடும் மரத்தடிக்குச் சென்று பாடும் மரத்தின் இன்னிசையைக் கேட்டனர். தான் விழித்துக் கொண்டிருக்கிறோமா அல்லது கனவுதான் காண்கிறோமா என்பதே கல்தானுக்குச் சந்தேகமாகி விட்டது.

ஆகவே, கல்தான் பாரிஜாதத்தைப் பார்த்து, "குழந்தாய்! இவ்வளவு அதிசயமான வஸ்துக்கள் உனக்கு எங்கே கிடைத்தன? எப்படிக் கிடைத்தன? இம்மாதிரி அதிசயங்களை நான் இதற்கு முன் பார்த்ததேயில்லையே!" என்று மிகுந்த வியப்புடன் கேட்டான்.

"பிரபோ! எங்களிடம் இவ்விரண்டு அதிசயப் பொருள்கள் மட்டுமல்ல, இன்னும் ஒரு அதிசயப் பொருளும் இருக்கிறது. எங்களிடம் ஒரு பேசும் பறவை இருக்கிறது. அது பேசுவதைக் கேட்டால் நீங்கள் என்ன சொல்லுவீர்களோ? அதையும் பார்த்தவுடன் இம் மூன்று அதிசயப் பொருள்களையும் நான் எப்படி அடைந்தேன் என்பதை உங்களுக்குக் கூறுகிறேன்" என்றான் பாரிஜாதம்.

உடனே இருவரும் விருந்து மண்டபத்திற்கு வந்தார்கள். அந்த மண்டபத்திற்குள் ஒரு புறத்து ஜன்னலருகில் ஏராளமான பறவைகள் கூடியிருந்ததைக் கல்தான் கண்டான். அவற்றின் மத்தியிலிருந்த பேசும் பறவையைப் பாரிஜாதம் கல்தானுக்குக் காட்டினான். பேசும் பறவை குரல் கொடுத்தவுடன் மற்றப் பறவைகள் அதைச் சூழ்ந்து கொள்கின்ற மகிமையை எடுத்துரைத்தான்.

பேசும் பறவையருகில் வந்த பாரிஜாதம் "என் அடிமைப் பறவையே! கல்தான் வந்திருக்கிறாரே, பார்த்தாயா?" என்று கேட்டான்.

அதற்குப் பறவை, "கல்தான் வரவு நல்வரவாகுக! அவர் நீடூழி வாழ்க!" என்று சொல்லிற்று. பறவையின் வரவேற்புக்கு வந்தனமளித்துவிட்டுச்




சுல்தான் விருந்திற்கு உட்கார்ந்தான். முதலில் முத்துக்கள் அடைக்கப்பட்ட வெள்ளரிக் காய்க் கறி பரிமாறப் பட்டது. அதைப் பார்த்துச் சுல்தான் திகைத்துப் போய் இளவரசர்களையும் இளவரசியையும் பார்த்து "இது என்ன அதிசயமான பதார்த்தமாயிருக்கிறதே? இந்த வெள்ளரிக்காய்களில் முத்துக்களை அடைத்திருக்கிறீர்களே? இந்தக் கறியை எப்படி மனிதர்கள் சாப்பிடுவது?" என்று கேட்டான்.

அவர்கள் பதில் கூறுவதற்கு முன் பேசும் பறவை சுல்தானைப் பார்த்து, "வெள்ளரிக் காய்களில் முத்தைத் திணித்தால் சாப்பிட முடியாது என்பதைத் தெளிவாக அறியும் திறமை வாய்ந்த சுல்தான், சுல்தானாவுக்கு நாயும், பூனையும், மரக்கட்டையும் பிறந்தன என்பதை எப்படி நம்பினாரோ? தெரியவில்லையே!" என்றது.

"என் நம்பிக்கைக்குப் பாத்திரமான இரு ஸ்திரீகள் அது உண்மை என்று கூறியதால் நம்பினேன்" என்று பதில் அளித்தான் சுல்தான்.

"நீங்கள் ஏமாற்றப் பட்டீர்கள்!" என்று கூறி விட்டுப் பேசும் பறவை சுல்தானுக்குச் சுல்தானாவின் தமக்கைகள் செய்த துரோகத்தை விவரமாக எடுத்துக் கூறிற்று. மேலும் நந்தவனத் தலைவன் கால்வாய் வழியே கூடையில் மிதந்துவந்த குழந்தைகளை எடுத்து வளர்த்த வரலாற்றையும் விளக்கிற்று.



தன் முன் னிலையில் அழகின் அவதாரமாக, நிற்கும் மூவரும் தன் குழந்தைகள் என்பதை அறிந்த சுல்தான் பேரானந்த மடைந்து அவர்களை அன்புடன் தழுவிக் கொண்டான். அவர்களுடன் சிறிது நேரம் பேசி விட்டு "குழந்தைகளே! நாளைய தினம் உங்கள் தாயாராகிய சுல்தானாவை உங்களை பார்க்க இங்கு அழைத்து வருகிறேன்" என்று கூறினான்.

விருந்து முடிந்தவுடன் சுல்தான் தனது அரண்மனைக்குத் திரும்பி வந்தான். திரும்பி வந்தவுடன் அவன் செய்த முதல் காரியம் சுல்தானாவின் இரு சகோதரிகளையும் அழைத்து வரச்சொல்லி அவர்களை உடனே தூக்கிலிடச் செய்ததுதான்!

தண்டனை முடிந்ததும் சுல்தான் தன் பிரபுக்களுடன் பெரிய மசூதிக்குச் சென்று அங்கு பல வருஷங்களாகச் சிறையில் வாடி வரும் சுல்தானாவை விடுவித்தான். அவன் சிறையிலிருந்து வெளி வந்தவுடன் தான் செய்த தவறுக்காக மன்னிக்கும்படி கேட்டுக் கொண்டு அவளைத் தன்னுடன் அழைத்துக் கொண்டான். அரண்மனைக்கு வந்ததும் சுல்தான் சுல்தானாவிடம் தங்களுடைய மூன்று குழந்தைகளைக் கண்ட விவரத்தைச் சாங்கோபாங்கமாகக் கூறினான். பிறகு அவர்களைச் சந்திக்க அவளை மறுநாள் அழைத்துப் போவதாகவும் சுல்தானாவிடம் தெரிவித்தான்.

அன்று அரசசபையில் சுல்தானா சுல்தானுடன் கம்பீரமாக வீற்றிருந்ததைப் பாரஸீக மக்கள் கண்டு மிகவும் குதூகலமடைந்தனர்.

மறுநாள் சுல்தான், சுல்தானா இருவரும் தங்கள் பரிவாரங்களுடன் நந்தவனத் தலைவன் மாளிகைக்குச் சென்றனர். அங்கே சுல்தான் தனது மூன்று குழந்தைகளையும் அவர்களுடைய தாயாராகிய சுல்தானாவுக்கு அறிமுகம் செய்து வைத்தான். சுல்தானா தன் குழந்தைகளைக் கட்டித் தழுவி முத்தமிட்டாள். தன் குழந்தைகள் இவ்வளவு சிறப்பாக வளர்ந்திருப்பதைக்கண்டு பேரானந்த மடைந்தாள்.

சுல்தானுக்கும் சுல்தானாவுக்கும் ஆடம்பரமான

ஒரு விருந்து அளிக்கப்பட்டது. விருந்து முடிந்தவுடன் சுல்தானும் அவன் குழந்தைகளும் சுல்தானைத் தம் நந்தவனத்திற்கு அழைத்துச் சென்றனர். நந்தவனத்தின் சிறப்பையும் அதிசய வஸ்துக்களின் மேன்மையையும், அவைகளை அடைவதற்குப் பாரிஜாதம் பட்ட கஷ்ட நிஷ்டூரங்களையும் கேட்டுச் சுல்தான் மிகவும் வியப்புற்றான்.



அன்று மாலை அரச குடும்பத்தினர் தங்களுடைய அரண்மனைக்குத் திரும்பினர். சுல்தானுக்கு வலது புறத்தில் இளவரசர்கள் பஹ்மானும் பர்விஸும், இடது புறத்தில் சுல்தானும் இளவரசி பாரிஜாதமும் அரச வீதியில் பவனி வந்தது கண் கொள்ளாக் காட்சியாயிருந்தது. பாரசீக மக்கள் இந்த இணையற்ற காட்சியைக் கண்டு ஆடிப் பாடி ஆரவாரம் செய்தனர். தங்கள் சுல்தானின் குழந்தைகள் திரும்பி வந்தது கண்டு அவர்களுக்கு ஜய கோஷம் செய்தனர். இளவரசி பாரிஜாதம் தன் கையில் பேசும் பறவையை வைத்திருந்தாள். அதன் இனிய குரல் கேட்ட மற்ற பறவைகளும் கூட்டம் கூட்டமாக மரத்திற்கு மரம் தாவிப் பறந்து வந்து குதூகலமாகக் கூவித் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தன. இவ்வாறாகப் பிரிந்து கூடிய அரச குடும்பத்தினர் பலகாலம் சந்தோஷமாக வாழ்ந்து வந்தனர். (முற்றும்)

# அழுவானேன்?

சீனர்கள் தந்தையிடம் மிகவும் பக்தி கொண்டவர்கள். தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என்னும் முதுமொழியைக் கடைப்பிடிப்பவர்கள்.

கிட்டத்தட்ட நூறு வயதான ஒரு சீனனுக்கு எழுபத்தைந்து வயதான ஒரு பிள்ளை இருந்தான். பிள்ளை ஏதோ ஒரு சிறு குற்றம் செய்து விடவே, தந்தை மிகவும் கோபமுற்றுப் பிள்ளையை அடித்து விட்டான்.

பிள்ளை விசித்து விசித்து அழலானான். அதைக் கண்ட தந்தைக்குத் தன் பிள்ளை மீது இரக்கம் பிறந்தது. அவன் உடனே தன் பிள்ளையின் அருகில் எழுந்து சென்று "குழந்தாய்! ஏன் அழுகிறாய்? நான் அடித்த அடி பலமாகப் பட்டு விட்டதா, என்ன? அழாதே! இனி மேல் நான் உன்னை அடிக்கவே இல்லை!" என்று சொல்லிச் சமாதானப் படுத்தினான்.



அதைக் கேட்டதும் பிள்ளை இன்னும் அதிகமாக விசித்து விசித்து அழலானான். அதைக் கண்ட தந்தைக்குக் கண்ணில் நீர் பெருகி வந்தது. "அழாதே, இனிமேல் உன்னை அடிக்கவே இல்லை" என்று பிள்ளையைத் தேற்றினான்.

அதைக் கேட்ட பிள்ளை இன்னும் சற்று அதிகமாக விசித்து அழுதவாறு, "அப்பா! நீங்கள் அடித்ததற்காக நான் அழவில்லை. முன்பெல்லாம் நீங்கள் அடித்தால் 'சுளீர், சுளீர்' என்று உறைக்கும்படி அடிப்பீர்கள். இப்பொழுது உங்கள் அடியில் அவ்வளவு பலமும் சக்தியும் இல்லையே! உங்கள் கையை வலிக்குமே என்ற வருத்தத்தினால்தான் அழுகிறேன்" என்றான்.

பிள்ளை சொன்னதைக் கேட்ட தந்தை பிள்ளையின் அன்பைக் கண்டு 'கர கர' வென்று கண்ணீர் உகுத்தான். —அக்ஷயம்



# பாருஷாவின் காதல்

ஆசிரியர்-சிதர்சன்    மொழிபெயர்ப்பு-ரா.கி.

## 7. சிறைச்சாலையில்........!



பரூனின் அந்த உத்தரவைக் கேட்டதுதான் தாமதம்; அவனது அடிமைகள் உடனே முன்னேறி ரேம்பஸையும் தியூனஸையும் கைப்பிடியாகப் பிடித்துக் கொண்டனர். வெளியே வந்ததும் ஒருவரைக் கீழ்த் திசைக்கும், இன்னொருவரை மேல் திசைக்கும் இட்டுச் சென்றனர். ஆனாலும் அவ்விருவரும், ஒருவரையொருவர் விட்டுப் பிரிய மனம் இல்லாதவர்களாகத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றனர். தங்கள் விருப்பத்துக்கு விரோதமாகத் தங்களைப் பிரிக்க முற்பட்டிருக்கும் அந்தச் சக்தியை எதிர்த்துப் போராடி வெற்றி கொள்ளத் தங்களுக்குச் சக்தியில்லாததைக் குறித்து மிகவும் மனம் புழுங்கினர். ஆனால் மனம் புழுங்கிப் பெருமூச்சு விட்டதனால் மட்டும் காரியம் ஆகிவிடுமா?

* * *

பரூன் தன் அரண்மனையின் உப்பரிகை மீது ஏறி நின்று கொண்டு, தியூனஸ் சிறைச் சாலைக்குள் செல்வதைக் கண்டான். அக்காட்சியைக் காணும் பொழுது, அவனுடைய உள்ளத்திலும் துயரம் பொங்கி வந்தது. அவனுடைய மனதை ஏதோ ஒரு சுமை அழுத்தியது. உள்ளத்தில் ஏதோ ஒன்று கூர்மையாகத் தைத்து மிகவும் மனோ வேதனையை அளிப்பதாகத் தோன்றியது. அவன் தன் புஜ பல பராக்கிரமம், சிறுமை-பெருமை அனைத்தையும் மறந்து அப்படியே தரையில் சாய்ந்து விட்டான். அவன் கண்களைக் கண்ணீர் மறைத்தது. அவன் காதல்-அன்பு என்னும் சொற்களையெல்லாம் லட்சம் தடவைக்கு மேலாகக் கேட்டிருந்தான். ஆனால் இன்றுதான் காதலின் மகிமையையும், உண்மை மதிப்பையும் உணர்ந்தான்; காதலின் பரம ரகசியத்தை அறிந்தான்.

அவனுடைய மனம் இதுகாறும் இம்மாதிரி வருத்தமோ வாட்டமோ உற்றதேயில்லை. அவன் மூளையை இம்மாதிரி எந்தச் சிந்தனையும் இதுவரை முற்றுகையிட்டதில்லை. அவன் தலையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, சிறைச் சாலைக்குள் தியூனஸ் நுழைவதைக் கண்டான். ஆனால் அவன் சிறைச் சாலைக்குள் சென்றதும் அவன் உள்ளத்தை என்னவோ செய்தது. எதையோ பறி கொடுத்து விட்டது போன்ற எண்ணம் அவன் மனதைச் சங்கடப் படுத்தியது. அவன் அப்படியே அசந்து போய்த் திக்பிரமை பிடித்தவன் போல நின்று விட்டான். உப்பரிகையின் திறந்த வெளியிலும்கூட அவனுடைய மூச்சுத் திணறித் திக்கு முக்காடத் தொடங்கியது. உலகத்துக் காற்று அனைத்தையும் தியூனஸ் தன்னுடன் கூடவே சிறைப்படுத்தி எடுத்துச்

சென்று விட்டது போலவும், தனக்கு மூச்சு விடுவதற்கென்று உலகத்தில் காற்றுத் துளிகூட மிச்சமில்லாமற் செய்து விட்டுப் போய் விட்டது போலவும் பருன் அம்னஸ் பிரமையில் ஆழ்ந்தான்.

மாணிக்கங்களும், மரகதங்களும், வைர வைடூரியங்களும், முத்துக்களும், ரத்னங்களும் பதிக்கப்பட்டு 'பளபள' வென்று கண்களைப் பறித்துப் பிரகாசித்துக்கொண்டிருந்த தன்னுடைய பிரத்யேகமான அறைக்குத் திரும்பி வந்த பின்னரும்கூட ஏதோ ஒரு பொருள் கெட்டுப் போய் விட்டது போன்ற உணர்ச்சி அவனுடைய உள்ளத்தில் உறுத்திக் கொண்டே யிருந்தது. அவன் மிகுந்த பரபரப்புடன் இங்கும் அங்கும் உலாவலானான். அவனுடைய கண்கள் நாற்புறமும் ஏதோ ஒரு பொருளைத் தேடத் தொடங்கின. ஆனால் அவன் மனதுக்குப் பிடித்த அந்தப் பொருள் எங்குமே காணக் கிடைக்கவில்லை. அதே சிந்தனையில் நள்ளிரவும் கழிந்து விட்டது. பருன் ஒன்றும் சாப்பிடாமல், உடுத்தி யிருந்த அரசாங்க உடைகளைக் களைந்து மாற்றுடை கூடத் தரித்துக் கொள்ளாமல் தன் படுக்கையில் போய்த் 'தடால்' என்று விழுந்தான்.

இரவு மூன்றாவது ஜாமம் கழிந்து விட்டது. பருன் ஓசைப்படாமல் மெதுவாகத் தன் அறைக் கதவைத் திறந்தான். பிறகு தன்னுடைய தங்கச் செங்கோலைக் கையில் எடுத்துக்கொண்டு அரண்மனைக்கு வெளியே வந்தான். வாசற் காப்போர் வியப்பு மிகுதியினால் 'ஆ' வென்று வாயைத் திறந்தவாறு நின்றனர். ஆனால் பருனுக்கு அவர்களுடைய முகத்தில் ஓடிய வியப்பையும் கலவரத்தையும் காணப் பொழுது எங்கே இருந்தது? அவன் வெகு வேகமாக அடி யெடுத்து வைத்து அவ்விடத்தை விட்டு அகன்றான். நாற்புறமும் நல்ல அமைதி நிலவியிருந்தது. எங்கு பார்த்தாலும் பயங்கர நிசப்தம்! எங்கிருந்தும் எவ்விதமான அரவமும் எழவில்லை. எல்லா ஜீவராசிகளும் இன்பமாக ஆனந்த நித்திரை செய்யும் நேரம் அல்லவா அது? அந்த வேளையிலே ஆறுகள் கூடத் தூங்கி வழியும். சாலைகளும் சோலைகளும் கூடத் தூங்கிவிடும். காற்றுக்கூடக் கண் அயர்ந்து விடும். அந்த நேரத்திலே எங்கிருந்து என்ன சப்தம் வரப்போகிறது? சகல ஜீவராசிகளும் தன் நினைவிழந்து கண் அயர்ந்திருக்கும் அந்த வேளையிலே உயர் வானத்தைத் தவிர வேறு யார் கண் விழித்திருந்து காவல் புரிந்து கொண்டிருக்கப் போகிறார்கள்?

தன்னந் தனியனாக வந்து கொண்டிருந்த பருன் சிறைச் சாலையின் தீவட்டிகள் எரிந்து கொண்டிருப்பதைக் கண்டான். அதைக் கண்டபின்தான் அவன் நீண்ட நிம்மதியான மூச்சு விட்டான். அங்கேதானே அவனுடைய மன நிம்மதியையும் கண் உறக்கத்தையும் கொள்ளை கொண்டு விட்ட பெண் சிறை வைக்கப்பட்டிருந்தாள்?

அவனி முழுவதும் ஆனந்தமாக இளைப்பாறிக் கொண்டிருக்கும் அந்த வேளையிலே, பித்தனைப் போன்ற வெறித் தோற்றத்துடன் சிறைச் சாலையின் வாசலில் வந்து பருன் நின்று கொண்டிருப்பதைக் கண்ட காவலாளிகள் கதிகலங்கிப் போய் விட்டனர். அடுத்தகணம் அவர்கள் பீதியில் மதி மயங்கிப் பூமியில் சாய்ந்தும் விட்டனர்.

பருன் அவர்களில் ஒருவனைத் தூக்கி நிறுத்தி உணர்வு பெறச் செய்தான். பிறகு மிகவும் மெதுவான குரலில், "இன்றிரவு முதல் ஜாமத்தில் ஒரு அடிமைப் பெண் இங்கு வந்தாள் அல்லவா? அவளுடைய அறை எங்கிருக்கிறது? நம்மை அவள் இருக்கும் அந்த அறைக்கு அழைத்துச் செல்" என்று ஆக்ஞாபித்தான்.

காவலாளி தியூனளைச் சிறை வைத்திருந்த அறைக்குப் பருனை அழைத்துச் சென்றான். பிறகு ஒரு தீவட்டியை அங்கே ஒரு மூலையில் ஏற்றி வைத்துவிட்டு வெளியே வந்தான். வெளியே வரும் பொழுது அந்த அறைக் கதவையும் நன்றாகச் சாத்திக்கொண்டு வந்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் சிறைச் சாலைக்குப் பருன் வந்திருக்கும் செய்தி காட்டுத் தீபோல் பரவிவிடவே, சகல வேலையாட்களும் விழித்துக்கொண்டு விட்டனர். 'என்னவோ, ஏதோ!' என்ற பயம் அவர்களுடைய உள்ளத்தைப் பற்றிக் கொண்டது. அவர்கள் கதிகலங்கி நடுநடுங்கி வெல வெலத்துப் போய்விட்டனர். 'என்ன நடக்குமோ?' என்ற பீதியில் அவர்களுடைய உடல் முழுவதும் வியர்த்து விறுவிறுத்துப் போய்விட்டது. 'கடவுளே! நீதான் கதி! எங்களைக் காக்க வேண்டிய பொறுப்பு உன்னுடையது தான்!' என்று கடவுளை வாயார மனமார வேண்டிக் கொண்டனர். ஆனால் எவருடைய வாயிலிருந்தும் சொற்கள் உரக்க வெளி வரவேயில்லை. பயத்தினால் தொண்டை உலர்ந்து விட்டபின் வார்த்தைகள் உரக்க எப்படி வெளிவரும்?

பருன் சில மணி நேரத்துக்குப் பின்–அதாவது கணப்பொழுதை யுகப் பொழுதாகக் கழித்தபின், தியூனளைத் தன்னெதிரே கண்டான். அப்புறம்தான் அமைதியை இழந்திருந்த அவனுடைய மனம் நிம்மதியுற்றது. 'உப்ப்ப்' என்று நிம்மதியான நீண்ட மூச்சுவிட்டு அவன்

மனதை ஆச்வாசப்படுத்திக் கொண்டான். நியூனஸ் வெறும் கட்டாந்தரையில் படுத்துத் தன் நினைவிழந்து தூங்கிக் கொண்டிருந்தான். அவனுடைய தலைமயிர் அவிழ்ந்து கலைந்து பூமியில் புரண்டு கொண்டிருந்தது. அவனுடைய வாய் இலேசாகத் திறந்திருந்தது. இளநகை ஆடிக் கொண்டிருந்த அவனுடைய எழில் பிகுந்த பல் வரிசைகள் ஆழ்கடலின் அடியிலிருக்கும் அசல் நன் முத்தைப்போலப் பிரகாசித்துக் கொண்டிருந்தன. தான் உடுத்தியிருக்கும் உடை அவிழ்ந்து நழுவி அலங்கோலமாகப் போயிருக்கிறது என்ற நினைப்புக் கூட இல்லாமல் அவன் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். இரு பேராசை பிடித்த விழிகள் இமை கொட்டாமல் தன் யௌவனத்தின் எழிலைப் பருகிக் கொண்டிருக்கின்றன என்னும் விஷயம் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த அவனுக்குத் தெரிய நியாயம் ஏது? தன் முன் நெற்றி மயிர் முகத்தில் பரந்து விரிந்து முகத்தைப் பாதி மூடிக் கொண்டும், பாதி வெளிக் காட்டிக் கொண்டும் தன்னுடைய சந்திர வதனத்தின் சோபையைப் பன் மடங்கு அதிகமாக எடுத்துக் காட்டிக் கொண்டிருக்கிறது என்பதும் அவனுக்கு எங்கே தெரிந்திருக்கப் போகிறது?

பருன் அவனை இரவு முதல் ஜாமத்தில் பார்த்த பொழுது அவனுடைய மன மோகன எழில் உருவம் மனதைக் கவர்ந்தது என்பதில் ஐயமில்லை. ஆனால் அவன் இப்பொழுது உறங்கிக் கொண்டிருந்தது போல அப்பொழுது உறங்கிக் கொண்டிருக்கவில்லையே! அழகு தூங்கும் பொழுது இன்னும் அதிகமாக மயக்கத்தைத் தரும். கூந்தல்-நாகம் விரிந்து படம் எடுத்து ஆடும் பொழுது இன்னும் அதிக விஷமுள்ளதாக இருக்கும் என்பது அவனுக்கு என்ன தெரியும்? அதுமட்டும் அல்ல; பெண்களை முன் ஜாமத்தில் பார்ப்பதற்கும் பின் ஜாமத்தில் பார்ப்பதற்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருக்கிறது என்பதையும் அவன் அறியான். இராப் பொழுது கழியக் கழிய, உலகம் தூங்கத் தூங்க, பெண்ணின் யௌவனமும் யௌவன லாவண்யமும் புது மெருகுற்று விளங்குகின்றன என்னும் விஷயமும் அவனுக்குத் தெரிந்திருந்தால் தானே? எழிலை அநுபவிப்பது என்றால் ரசிக உள்ளம் படைத்திருக்க வேண்டாமா?

பருன் சிறிது நேரம் வரை திகைத்துத் திக்பிரமை பிடித்துப் போய் நின்றவாறே அப்ஸரஸ் போன்ற அழகிய முகம் படைத்த நியூனஸைப் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு அந்த அறைக்குள்ளேயே அங்கும் இங்கும் உலாவலானான். கொஞ்ச நேரம் கழித்ததும் அவன் தனக்காகக் காவலாளி அந்த அறையில் கொண்டு வந்து போட்டிருந்த நாற்காலியை இழுத்துக்கொண்டு போய்த் நியூனஸின் அருகில் போட்டுக் கொண்டு உட்கார்ந்தான். அடுத்த கணம் நியூனஸின் பூவுடலை நோகாமல் தூக்கித் தன் காலடிகளில் போட்டுக் கொண்டான். அது மட்டும் அல்ல; பருனுடைய நாம் நியூனஸை நமது காலடிகளில் தூக்கிப் போட்டுக்கொண்டு அவன் மீது அபாரக் கருணை புரிந்து விட்டோம் என்று எண்ணி மனம் மகிழ்ந்து பூரித்துப் போனான்.

நியூனஸின் கண்கள் திறந்து கொண்டன. அவன் முதன் முதலாக, ஆடாமல் அசையாமல், கண்கூடக் கொட்டாமல் தன் முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த பருனின் விழிகளைப் பார்த்தான். முதலில் அவனுக்குத் தூக்கக் கலக்கத்தில் 'நாம் எங்கே இருக்கிறோம்? நம் அருகில் பருன் எப்படி வந்தான்?' என்பதெல்லாம் சரிவரப் புரியவே இல்லை. அதைக் காண அவனுக்கு, 'நாம் கனவுதான் காண்கிறோமோ?' என்ற பிரமை தட்டியது. அவன் தன் இரு கைகளாலும் கண்களை கசக்கிவிட்டுக் கொண்டான். தூக்கக் கலக்கம் சற்றுக் கலைந்தது. அதற்குப் பிறகு தான் அவனுக்கு முன் இரவில் நடந்த நிகழ்ச்சிகள் அத்தனையும் நினைவுக்கு வந்



"அம்மா! இந்த பேபி பள்ளிக் கூடத்தில் அழாமல் கொள்ளாமல் சமர்த்தாக என் பக்கத்திலேயே உட்கார்ந்திருந்தது!"

தன. அவளுடைய பெண்புத்தி சட்டென்று சகல விஷயங்களையும் ஊகித்து உணர்ந்து கொண்டு விட்டது. அடுத்த கணம் அவளுடைய உள்ளத்தில் பீதி குடி புகுந்தது. அவள் மனம் பதறினாள்; கதி கலங்கினாள்; நடு நடுங்கினாள்; வெல வெலத்துப் போனாள். உள்ளத்தில் உண்டான பீதியின் பிரதிபிம்பம் முகத்திலே மிகத் தெளிவாகப் பிரதிபலித்தது. என்ன செய்வது என்று அவளுக்குப் புரியவில்லை. 'என்ன நடக்குமோ பகவானே!' என்று தன் மனதுக்குள்ளாகவே முணு முணுத்துக் கொண்டாள். இது என்ன விபரீதத்துக்கோ? யார் கண்டார்கள்?—நியூனலைக்குத் தன் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற் போலிருந்தது.

நியூனலின் முகத்தில் தோன்றிய பரபரப்பைக் கண்ணுற்ற பருன் அவளுடைய தோள் பட்டையில் தன் கையால் மிகவும் மிருதுவாகத் தட்டிக் கொடுத்தான். பிறகு மிகவும் மெதுவான குரலில், "கவலைப் படாதே! நீ பருனின் பட்டமகிஷி ஆகப் போகிறாய். பருனுக்கு உன்னை மிகவும் பிடித்திருக்கிறது. பருனின் கருணை உன் பாக்கியம்!" என்றான்.

எகிப்து காட்டின் எண்ணற்ற எழிலரசிகள் பருனின் எந்த வார்த்தையைக் கேட்பதற்காக இரவு பகல் எந்நேரமும் ஆவலுடன் காதைத் நீட்டி வைத்துக் கொண்டிருந்தார்களோ, அந்த அருமை பெருமை நிறைந்த வார்த்தையைத் நியூனல் தன் காதுகளால் கேட்டாள். ஆனால் அவளுக்கு அதனால் கடுகத்தனை கூட மகிழ்ச்சி ஏற்படவில்லை. அதற்கு நேர்மாறாகப் பயம்தான் இன்னும் அதிகரித்தது. அவள் நடுநடுங்கிப் போய் எழுந்து நின்றாள். பிறகு தரையில் விழுந்து வணங்கி, "எகிப்து காட்டுப் புவிக்கும் வானத்துக்கும் அதி தேவதையான தேவ, அரசே! என் மீது கருணை புரியவேண்டும். நான் இந்தப் பதவிக்குத் தகுதியே அற்றவள். நீ கருணை கூர்ந்து அளிக்க முன் வந்திருக்கும் அன்புப் பிச்சையின் சுமையைத் தாங்கும் சக்தி எனக்குக் கொஞ்சமும் இல்லை. நீயோ ஈடு இணையற்ற எகிப்து நாட்டுப் பாதுஷா; மாபெரும் சக்கரவர்த்தி. உன்னுடைய பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே உலகத்தில் உள்ள மற்ற பாதுஷாக்கள் அத்தனை பேரும் தங்கள் தங்கள் மாளிகைக்குள்ளே மகா ஜாக்கிரதையாக வாழ்ந்து வந்த பொழுதிலும் நடுநடுங்கிச் சாகிறார்கள். சிம்ம ஸ்வப்பனம் கண்ட யானையைப் போல மூர்ச்சித்துத் 'தடால்' என்று தரையில் விழுகிறார்கள்.

"நானோ கேவலம் ஒரு அடிமைப் பெண். பாதுஷாக்களுடன் எப்படிப் பேசிப் பழக வேண்டும் என்பது கூட எனக்குச் சரியாகத் தெரியாது. நான் என் பலவீனத்தை நன்கு அறிவேன். என்னை அடைவதனால் உன் மனம் ஒரு பொழுதும் திருப்தியுறாது. மகிழ்ச்சி என் பதையே நீ மனதால்கூட ஸ்மரிக்க முடியாது. உன் மனதை மகிழ்விக்கும் சக்தி என்னிடம் லவலேசம்கூட இல்லை. உன்னை மணம் செய்து கொள்ளும் பாக்கியம் இந்த அடிமைக்கு ஏற்படச் சிறிதும் நியாயமே இல்லை. உன்னை மணந்து கொள்ளும் பாக்கியம் கிடைத்தால் அரம்பையர் நாட்டு அப்ஸர மாதர்களேகூடத் தங்கள் பாக்கியத்தை எண்ணி, அளவற்ற மகிழ்ச்சியில் மூழ்கிப் பூரித்துப் போவார்கள் என்பதில் கொஞ்சங்கூடச் சந்தேகம் இல்லை. இருந்தாலும் நான்...நானோ...என் அரசே! என் தாய் தந்தையர் மீது ஆணை! என் மேல் கருணை கூர்ந்து கிருபை புரிய வேண்டும். நான் இந்த அரசமரியாதைக்கு அருகதையானவளே இல்லை. எனக்கு இவ்வளவு மரியாதை அளிப்பது தகாத காரியம். நீயோ மிக மிகப் பெரியவன்; நானோ மிக மிகச் சின்னவள். நம் இருவருக்கும் இவ்வளவு அஜகஜாந்தரமான வித்தியாசம் இருக்கும் பொழுது பாதுஷாவான நீ என்னை விரும்புவது சற்றும் நியாயம் ஆகாது. ஆகவே, என்னை நீ மறந்து விடுவதுதான் உசிதமானது" என்றாள். (தொடரும்)

## பிரமாதம்!



"நீங்கள் பிரமாதமாய்க் கதை எழுதிக் கிழிக்கிறேன் என்று என் சிநேகிதி சொன்னது சரிதான்!"




## 2. பலே, முனுசாமி!

சபேசய்யரின் புத்திரி பிரேமாவுக்கு வயது இருபது இருக்கும். எஸ். எஸ். எல். ஸி. வரையில் படித்தவள். கொடி போன்ற உருவம். ஆரம்பத்திலிருந்தே பெற்றோரின் பரிவும், பாசமும் இருந்ததால் நாளடைவில் யதேச்சையான நடத்தையும் குணமும் அவளுக்கு ஏற்பட்டு விட்டன. கொஞ்சம் படித்த பெண் என்றால் கேட்கவேண்டுமா! நவீன வாடையில் மலர்ந்த இன்றைய நாகரிக ஆடை ஆபரண அலங்காரங்களுக்குப் புகலிடமாகி விட்டாள். அவளுடைய வசீகரமான அழகு அவள் அணிந்து கொள்ளும் உடைகளினாலும், அலங்காரங்களினாலும் சில சமயங்களில் சிலருக்கு வெறுப்பைத் தரக்கூடிய வகையில் மாறிவிடும். ஆனால் அவள் அவளுக்காக அலங்காரம் செய்துகொள்கிறாளே தவிர மற்றவர்களின் விருப்பையோ வெறுப்பையோ பெறுவதற்காக இல்லையே!

பிரேமாவுக்குத் தன் சகோதரன் சங்கரனின் நடத்தையோ கொள்கையோ கொஞ்சமும் பிடிக்காது. அவனுக்கும் பிரேமாவின் நடத்தையும் கொள்கையும் துளிக்கூடப் பிடிக்காது. அவர்களின் பெற்றோர்களுக்கு இவர்கள் இரண்டு பேரின் நடத்தையும் கொள்கையும் கட்டோடு பிடிக்காது. பிரேமா அந்த ஊர் 'லேடீஸ் கிளப்'பில் அங்கத்தினள். சங்கருக்கு 'லேடீஸ் கிளப்' என்றால் பிடிக்காது. இதற்குக் காரணம் அதில் ஆண்கள் அங்கத்தினராகச் சேர அனுமதிக்கப்படுவதில்லை என்பதினால்தான். இது அவனுடைய சமதர்மக் கொள்கைகளுக்கு முற்றிலும் முரணானது அல்லவா!

அன்று மத்தியானம். பிரேமா அழகாக அலங்காரம் செய்துகொண்டு மாடி அறையில் உட்கார்ந்து பாடிக்கொண்டிருந்தாள். பிரேமா வீட்டிலேயே இருந்தாலும் அரை மணிக்கு ஒரு தடவை வேறு உடை அணிந்து வேறு விதமான அலங்காரங்களுடன் காட்சியளிப்பது வழக்கம். அரை மணிக்கு ஒரு தடவை இப்படி அலங்காரம் செய்துகொள்ள வேண்டுமென்பது 'லேடீஸ் கிளப்'பின் சட்ட

மல்ல. ஆனால் 'லேடீஸ் கிளப்'பிலுள்ள ஒவ்வொரு அங்கத்தினருக்கும் வழக்கமாக ஏற்பட்டு விட்ட பழக்கம். அல்லது பழக்கமாய்ப் பட்டு விட்ட வழக்கம் என்றும் சொல்லலாம். பிரேமாவுக்குச் சங்கீதத்தில் அலாதி மோகம். ஆனால் தெய்வம் அவளுக்கு நல்ல சாரீரத்தைக் கொடுக்கவில்லை. ஆனால் பாட வேண்டுமென்ற ஆசை யாரைச் சும்மா விட்டது! அவள் பாட வேண்டுமென்று தோன்றுகிற போதெல்லாம் பாடி விடுவாள். ஆனால் வருஷத்திற் கொரு தடவையோ, அல்லது ஆறு மாதத்திற்கு ஒரு தடவையோ பாட வேண்டுமென்ற ஆவல் அவளுக்கு ஏற்பட்டால் நன்றாயிருக்கும். மணிக்கு முப்பது தடவையாவது அவளுக்குப் பாட வேண்டுமென்ற ஆவல் ஏற்பட்டது தான் பிறருக்குச் சங்கடத்தை உண்டாக்குவதாயிருந்தது. அதுவும் சங்கரனின் ஆத்திரத்தையும் கோபத்தையும் மேலும் மேலும் தூண்டி விடுவதாயிருந்தது. பிரேமா பாடியதையே திருப்பித் திருப்பிப் பாடுவதில்லை. நிமிஷத்திற்கு நிமிஷம் புதிய புதிய பாடல் கிளம்பும், அவளுடைய இனிய சாரீரத்திலிருந்து!

அப்பொழுதுதான் சங்கரன் மிஸ்டர் அப்புவை அழைத்துக் கொண்டு மாடி அறையில் நுழைந்தான். பிரேமா பாடிக் கொண்டிருந்தாள்.

"சித்திரத்திலும் அழகு சொட்டுதே—அவர்
சிரிப்பு என்னைத் தேனாய்க் கொட்டுதே!"

என்ற அபூர்வமான அக்ஷரங்கள் இசையோடு கலந்து வருகிறவர்களை வெளியே துரத்துவது போலிருந்தது.

சங்கரனுக்கு ஆத்திரமும் ஆவேசமும் அடக்க முடியாமல் வந்தது. "இனிமேல் தாங்க முடியாது; ஆமாம், சகிக்க முடியாது! ஹாரிபிள்! ரியலி ஹாரிபிள்! மிஸ்டர் அப்பு, இந்த சங்கீதம் ஆளைக் கொன்றுவிட்டுத்தான் மறு காரியம் பார்க்கும் போலிருக்கிறது. இந்த சங்கீதத்திற்குப் பயந்தாவது சோவியத் ரஷ்யாவுக்கு ஓடிவிடலாம் போலிருக்கிறது!" என்றான்.

அப்பு அந்த அறையில் நுழைந்தவுடனேயே பிரமித்து நின்று விட்டான். யாருக்குத்தான் தங்கள் காதல் தெய்வத்தைக் கண்டால் பிரமிப்பு ஏற்படாது! அதுவும் பிரேமாவைக் காணும்போதெல்லாம் அப்பு சொக்கிப்போய் நிற்பது வழக்கம். இப்பொழுது அவளுடைய இனிய சாரீரத்திலிருந்து எழுந்த இசைப் பெருக்கு அவனைத் திக்குமுக்காடச் செய்தது. இருந்தாலும் சங்கரனுக்கு ஏதேனும் பதில் சொல்லியாகவேண்டு மல்லவா! பிரேமாவைப் பார்த்தபடியே, "ஆமாம், ஆமாம்! சங்கீதம் பிடிக்காதவர்க ளெல்லாம் சோவியத் ரஷ்யாவுக்கோ, வேறெங்கோ போய்விடுவதுதான் நல்லது!" என்றான்.

"ஆனால் அங்கேயும் இந்தச் சங்கீதம் இருந்து தொல்லை கொடுத்தால்...!" என்றாள் பிரேமா கேலியாக.

"அங்கேயா! அங்கே சங்கீதம் என்ற பேச்சே இருக்காது. அது சொர்க்கம்" என்றான் சங்கரன் மேஜையில் ஆத்திரத்துடன் ஒரு குத்துக் குத்தியபடியே.

"சொர்க்கத்தில் சங்கீதம் இருக்காது என்று சொன்னால் பயித்தியக்காரத்தனம்; வெறும் பிதற்றல்!" என்றாள் பிரேமா.

"ஆமாம், ஆமாம்! கட்டாயம் சொர்க்கத்தில் சங்கீதம் இருக்கத்தான் வேண்டும். அங்கேதானே தும்புரு நாரதர், இன்னும் இங்கிருந்து போன சங்கீத சாஹித்ய வித்வத் சிரோன்மணிக ளெல்லாம் இருக்கிறார்கள்!" என்றான் அப்பு.

"மிஸ்டர் அப்பு! நான் சொல்வது அந்த சொர்க்கம் இல்லை; சோவியத் ரஷ்யா...!"

"ஓஹோ! சோவியத் ரஷ்யாவா? ஆமாம், ஆமாம். அங்கே இதெல்லாம் இருக்காது" என்றான் அப்பு.

"அப்படி யென்றால் சோவியத் ரஷ்யா என்றால் பெரிய பாலைவனமா!" என்றாள் பிரேமா விஷமமாகச் சிரித்துக் கொண்டே.

"பாலைவனமா! உனக்கு அவ்வளவுதான் தெரிந்தது. அது சொர்க்கம்; பூலோக சொர்க்கம்!" என்றான் சங்கர்.

"பூலோக சொர்க்கமா! சரிதான்; இனிமேல் செத்த பிறகு எல்லா ஆவிகளும் சோவியத் ரஷ்யாவை நோக்கிப் போகும்போலிருக்கிறது!" என்றாள் பிரேமா குறும்புடன்.

"மறுபடியும் பார்த்தாயா, மிஸ்டர் அப்பு? இவளுக்கு அந்த 'லேடீஸ் கிளப்' ஞாபகந்தானே இருக்கு!" என்றான். 'லேடீஸ் கிளப்'பைப் பேச்சுக்கு இடையே சங்கரன் இழுத்தது பிரேமா



வுக்கு மிருகத் கோபத்தை உண்டாக்கியது. "அண்ணு! இதுவரையில் நீ எங்கள் இனப்பைப்பற்றிக் கேவலமாகப் பேசியதை யெல்லாம் பொறுத்துக் கொண்டிருந்தேன். இப்போது இன்னொரு பெரிய மனிதரின் எதிரே அதைப் பற்றிக் கேவலமாகப் பேசுகிறாய். இதை என்னால் சகித்துக் கொண்டிருக்கவே முடியாது!" என்றாள்.

"சகித்துக் கொண்டிருக்க முடியாதா! வா, அப்படி வழிக்கு! ஆம், எதையும் சகித்துக் கொண்டிருக்கக் கூடாது. இந்தச் சகிப்புத் தன்மைதான் ஒவ்வொருவரையும் அடிமைப் படுத்தும் விலங்கு; இதை உடைத்தெறிய வேண்டும். சகிப்புத்தன்மையை உடைத்தெறியும்போதுதான் உலகத்தில் புரட்சி உண்டாகிறது. புரட்சி ஏற்பட்டால்தான் பாட்டாளிகள், பணக்காரர்கள், ஸ்திரீகள், புருஷர்கள் எல்லோருக்கும் விடுதலை கிடைக்கும்" என்று பிரசங்க பாணியில் ஆர்ப்பரித்தான் சங்கரன்.



அப்பு, சங்கரனின் பேச்சை ஆதரித்தானோ, மறுத்தானோ தெரியவில்லை. ஆனால் சந்தர்ப்பத்திற்குத் தகுந்தாற்போல் தலையை ஆட்டிக் கொண்டிருந்தான்; அன்று சங்கரிடமிருந்து ஐந்து ரூபாய் கைமாத்தாக வாங்கிக் கொண்டு போக அவன் யத்தனித்தான். அதே சமயத்தில் பிரேமாவின் அன்பையும் மதிப்பையும் பெற உத்தேசித்தான். இது அவனுடைய நான்கு வருஷ திட்டத்தைவிட நெருக்கடியில் நிறைவேற வேண்டிய சிறிய திட்டமல்லவா!

"சகிப்புத் தன்மையை இழக்க வேண்டுமா! ஆண்கள் வேண்டுமானால் சகிப்புத் தன்மையை இழக்கலாம். ஆனால் பெண்கள் சகிப்புத் தன்மையை இழந்தால் உலகத்தில் என்ன நேரிடும் தெரியுமா!" என்றாள் பிரேமா.

"ஆமாம், ஆமாம்! பெண்கள் சகிப்புத் தன்மையை இழந்தால் அதோகதிதான்! நளாயினி, அனுசூயா, திரௌபதி, சீதை இவர்களெல்லாம் சகிப்புத் தன்மையை இழந்தபோது என்ன நடந்தது தெரியுமா!" என்று பிரேமாவை ஆதரிப்பவன் போல் சொல்லி விட்டு, மெதுவாகப் பேச்சின் போக்கை மாற்ற எண்ணி, "அதனால்தான் என்னுடைய நாலு வருஷ திட்டத்தில் சில புதிய மாறுதல்களெல்லாம் செய்யலாமென்று யோசிக்கிறேன்" என்றான் அப்பு.

"என்ன புதிய மாறுதல்!" என்றான் சங்கரன் பதட்டத்துடன்.

"நம்முடைய திட்டத்தில் மலபாரில் பேப்பர் மில் நடத்துவது மாத்திரம் போதாது. முப்பதாவது அம்சமாக இந்த சங்கீதத்தைப்பற்றியும் கவலை எடுத்துக்கொள்ள வேண்டும்."

"சங்கீதத்திற்கும் பேப்பர் மில்லுக்கும் என்ன சம்பந்தம்!" என்றாள் பிரேமா.

"என் சம்பந்த மில்லை!" என்று கேட்டான் சங்கரன்.

"நான் இந்த முப்பது வயதிற்குள் மூன்று முறை உலகம் சுற்றி இருக்கிறேன் என்பதுதான் உனக்குத் தெரியுமே, சங்கர்! நான் ஸ்வீடனில் இருந்தபோது 'விஷமின்கி' என்ற பிரமுகர் சொன்னார். 'சங்கீதமென்பது சில தனிப்பட்ட நபர்கள் கையாளும் கலை' என்று!"

"ஆமாம், அதிலென்ன சந்தேகம்! இதைத்தான் நான் ஆதியிலிருந்து சொல்லிச் சொல்லிக் கதறுகிறேன். இனிமேல் சங்கீதம் சில தனிப்பட்ட நபர்களின் சொத்தாக இருக்கக் கூடாது. பொது சொத்தாக வேண்டும். இது நம்முடைய நான்கு வருஷ திட்டத்தில் முக்கிய அம்சமாக இருக்க வேண்டும்."

"இப்பொழுது யாரேனும் சங்கீதத்தை அடிமைப்படுத்தி அடக்கி வைத்திருக்கிறார்களா என்ன, அதை மீட்டுப் பொதுஜன சொத்தாக்குவதற்கு!" என்றாள் பிரேமா.

"உனக்கு என்ன தெரியும்! நீ இஷ்டப்பட்ட போதெல்லாம் பாடி விட்டால் சங்கீதம் சுதந்திரமாக இருக்கிறது என்று அர்த்தமா! அப்படியல்ல; ஒவ்வொருவரும் சங்கீதம் பாட வேண்டும்" என்றான் சங்கரன் ஆவேசமாக.

"அதற்கு முதலில் சங்கீதத்திற்குள்ள கட்டுப்பாட்டை எல்லாம் தளர்த்த வேண்டும். சுருதி-லயம்-ராகம்-தாளம் என்று சொல்லுகிறார்கள் பாரு, அவைகளை யெல்லாம் அடியோடு நீக்கி விட வேண்டும்."

"ஆமாம், எல்லோரும் பாடக்கூடிய வகையில் புது வழி ஒன்றைக் கண்டு பிடித்தாக வேண்டும். நான் வியன்னாவில் தங்கி இருந்தபொழுது ஒரு ஜெர்மன் புரொபஸர் சொன்னார்....."

"மிஸ்டர் அப்பு, ஜெர்மன்காரர்களெல்லாம் பாஸிஸக் கொள்கை யுள்ளவர்கள். அவர்களுடைய நோக்கமெல்லாம் நாஜிஸத்தையும் பாஸிஸத்தையும் அடிப்படையாகக் கொண்டது!" என்றான் சங்கரன்.

"அது எனக்குத் தெரியும். அதனால்தான் நான் அவருடைய கொள்கையை அடியோடு மறுத்தேன்!" என்றான் அப்பு.

இந்தச் சமயத்தில் வீட்டு வேலைக்காரன் முனுசாமி அந்த அறைக்குள் நுழைந்து பிரேமாவிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து, "இதைச் சௌதாமினி அம்மா உங்ககிட்ட கொடுக்கச் சொன்னாங்க." என்றான்.

பிரேமா அந்தக் கடிதத்தைப் பிரித்து அவசரமாகப் படித்துவிட்டு, "சரி, போ!" என்றாள் முனுசாமியைப் பார்த்து.

முனுசாமி வெளியே போக யத்தனித்தான். உடனே சங்கரன் அவனை நிறுத்தி "என்னடா

முனுசாமி! வண்ணான் வீட்டுக்குப் போய்வரச் சொன்னேனே, போனாயா!" என்றான் அதிகார தோரணையில்.

"போனேங்க. நான் ஒரு தடவை போனேன். என் சம்சாரத்தை இரண்டு தடவை அனுப்பினேன். மார்க்கெட்டுக்குப் போகும்போது என் மச்சான்கிட்டே சொல்லி அனுப்பினேன். என் மகன் சின்னவன்கிட்டே வேலைக்குப் போகும்போது ஒரு தடவை பார்த்துட்டுப் போடான்னு சொன்னேன்..."

"இவ்வளவு பேர் போயுமா இன்னும் உருப்படிகள் வந்து சேரவில்லே!"

"என்ன செய்யறது, சின்ன எஜமான்! போனவங்க அழுக்கை வெளுத்துக் கொண்டு வந்திட முடியுமா!"

"எனக்குத் தெரியுமே, உன்னுடைய விவகாரம்! உனக்குக் கொடுக்கிற சம்பளம் தண்டம். அம்மாவும் அப்பாவும் உனக்குக் கொடுக்கிற இடம்..."

"இல்லீங்க, சின்ன எஜமான்!"

"எய், நிறுத்து! உனக்குத் துளிக்கூட மூளை இல்லே!" என்று சொல்லிவிட்டு அப்புவைப் பார்த்து "என்ன, மிஸ்டர் அப்பு, வர வர இந்த வீட்டிலே 'எஜமான் யார், வேலைக்காரன் யார்!' என்ற வித்தியாசமே இல்லாமல் போய் விட்டது" என்றான் கோபத்துடன்.

"அதற்குத்தான் நான் என்னுடைய நாலு வருஷ திட்டத்திலே பதினோராவது அம்சமாக 'எஜமான் யார், வேலைக்காரன் யார்! முதலாளி யார், தொழிலாளி யார்!' என்பதை யெல்லாம் வரையறுத்திருக்கிறேன்" என்றான் அப்பு.

"அது ரொம்ப நல்லதுங்க. ரொம்ப நாளா இந்த வீட்டிலே எஜமான் யாருன்னு தெரியாமல் முழிக்கிறேனுங்க!" என்றான் முனுசாமி.

"சரிதான்; வாயைப் பொத்திக் கொண்டு போ!. உன்னைத் தொலைத்துவிட ஏற்பாடு செய்கிறேன், பார்!" என்றான் சங்கரன்.

"நான் என்ன செய்யட்டுங்க! உங்க துணி வெளுத்திருந்தாத்தானுங்களே! வேறொருத்தர் துணியை எடுத்துக்கிட்டு வந்து விட முடியுமா!" என்றான் முனுசாமி.

"வேறொருவர் துணியை ஏன் எடுத்துக் கொண்டு வரக்கூடாது—எல்லாம் ஒரு காலத்தில் பொது சொத்தாகிறபோது...." என்று குதித்தான் சங்கரன்.

"பொது சொத்தா! நீங்க சொல்றது நல்லா இருக்கே! வேறொருத்தர் துணியைப் போய் எடுத்தா அடி உதை ஏதாவது விழுந்தா...!"

"அதையும் பொதுவில் கிடைத்த சொத்தாக ஏற்றுக் கொள்ள வேண்டியதுதான்!" என்றாள் பிரேமா.

"பிரேமா! நீ பேசாதே! உன்னால்தான் வீட்டில் வேலைக்காரர்களுக்கெல்லாம் இவ்வளவு இடம் ஏற்பட்டுப்போச்சு!... ஹூம், நான் இன்னிக்கு சாயந்திரம் மீட்டிங்குக்குப் போகணுமே, என்ன செய்கிறது!" என்று யோசனையில் ஆழ்ந்தான் சங்கரன்.

"சரி, நமஸ்காரம். மிஸ்டர் அப்பு! நான் இன்று கொஞ்சம் அவசரமாக 'லேடீஸ் கிளப்'பிற்குப் போக வேணும். ஒரு மீட்டிங். நான் போய் வருகிறேன்" என்று சொல்லி விட்டுப் பிரேமா அந்த அறையை விட்டுப் போனாள்.

"மிஸ்டர் அப்பு, ; சலவை உடுப்பு இல்லாமல் 'செங்கல் தொழிலாளர்' கூட்டத்தில் போய்ப் பேசுவது அவ்வளவு நன்றாயிருக்காது. நான் அந்தக் கூட்டத்தில் உங்கள் நாலு வருஷ திட்டம் பற்றி மிகவும் விரிவாகப் பேச நினைத்தேன். அந்தக் கூட்டத்தை அடுத்த ஞாயிற்றுக்கிழமை ஒத்தி வைத்து விடச் சொல்லப் போகிறேன். உங்கள் அபிப்பிராயம் என்ன?"

"அப்படித்தான் செய்யவேண்டும். அதிலென்ன சந்தேகம்!— அதிருக்கட்டும், நான் கொஞ்சம் அவசரமாக வீட்டிற்குப் போக வேண்டும். காலையில் தாயார் ஏதோ சாமான் வாங்குவதற்காக ஐந்து ரூபாய் கேட்டாள். இன்று ஞாயிற்றுக்கிழமை. ஒரு பாங்கும் திறந்திருக்காது. என்ன செய்வது! உன்னிடம் இருந்தால் ஒரு ஐந்து ரூபாய் கொடு..." என்றான் சகஜமான தோரணையில் அப்பு.

"அடடே! அதைஅப்பொழுதே சொல்லுவதற்கென்ன; மிஸ்டர் அப்பு!" என்று சொல்லியபடியே மணிபர்ஸைத் திறந்து பார்த்து விட்டு, "ஐந்து ரூபாய் இல்லே, பத்து ரூபாய் நோட்டாய்த்தான் இருக்கிறது" என்றான்.

"அதனால் பாதகமில்லே; அதைத்தான் கொடு!" என்று சொல்லி வாங்கிக் கொண்டு, "ரொம்ப தாங்ஸ்" என்று சொல்லி விட்டுப் போனான் அப்பு. (தொடரும்)



"ரூபாய் நோட்டு புதுசா வந்திருக்கே பார்த்தாயா?"

"அடே, நீ ஒண்ணு! நான் பழைய நோட்டைப் பார்த்தே எத்தனையோ வருஷங்கள் ஆகிவிட்டதே!"

# மகத்தான பொறுப்பு

**வஸுமதி ராமஸ்வாமி**

சென்ற இரண்டு மாதங்களாக அநேகமாக எல்லோருடைய சிந்தனையும் ஒரு விஷயத்திலேயே லயித்திருப்பதைக் காண்கிறோம். எங்கு போனாலும் அங்கலாய்ப்பும் மனமுடைய பெற்றோர்களும், வாடின முகத்துடன் கூடிய மாணவர்களும் எந்தப் பள்ளிக் கூடத்தில் சேரலாம், எந்தக் கல்லூரியில் சேரலாமென்று குழப்பம் அடைந்திருப்பவர்களாகக் காணப்படுகிறார்கள். இக்கேடுகளுக்குக் காரணமென்ன! கல்வி மனச்சாந்திக்கு விரோதமானதா!

இளமைப் பருவத்தில் மாணவர்கள் மனம் குழம்பிக் கஷ்டப்படுவது பரிதாபத்துக்குரிய விஷயம். சில இளைஞர்கள் பரீக்ஷையில் தேறா விட்டால் உயிரை விடத் துணிகிறார்கள். அவ்வளவு தூரத்துக்கு அவர்கள் மனம் முறிந்து விடுகிறது.

ஆதிகாலத்தில் நம் நாட்டில் மன்னர்களும், மக்களும் கல்வி கேள்விகளில் குறைவின்றி வாழ்ந்தார்கள். யுக்த வயது வந்ததும் குருகுல வாசம் செய்து மன அடக்கம், நாவடக்கம், தேக அடக்கம் இம்மூன்று சாதனங்களையும் அடைந்தார்கள். ஒரு அரச குமாரன் மற்றப் பிள்ளைகளோடு சரிசமானமாக குருகுல வாசம் செய்வான். இதில் அரசன் பிற்காலத்தில் மக்களோடு வாழ்ந்து வீண் ஆடம்பரமின்றி நியாய பரிபாலனம் செய்ய வேண்டுமென்பது உள்கருத்து. அத்துடன் வில்வித்தை, யானையேற்றம், குதிரையேற்றம் இவைகளையும் கூடவே கற்றார்கள். தச்சன், இரும்பு வேலைக்காரன், நெய்பவன், எல்லோருமே பரம்பரைத் தொழிலுடன் கல்வியும் கற்றார்கள்.

சமீபத்தில் பிஜித் தீவில் பன்னிரண்டு வருஷ காலம் நம் நாட்டு மக்களுக்குத் தொண்டு புரிந்து சென்னைக்கு விஜயம் செய்த ஸ்வாமி ருத்திரானந்தர் ஒரு முக்கியமான விஷயத்தை வெளியிட்டார். மற்ற நாட்டில் கல்வியுடன் ஒவ்வொருவரும் ஒரு கைத்தொழிலும் கற்று வருகிறார்கள். எட்டாவது படித்த மாணவனுக்கு மேல் படிப்புக்கு வழியில்லாவிட்டால் அதனால் பட்டினி கிடந்து சாகவும், மதிப்பிழந்து வாழவேண்டிய நிர்ப்பந்தமும் அங்கு இல்லை. படிப்புடன் அவன் இஷ்டப்பட்ட கைத்தொழில் ஒன்று அவனுக்குக் கற்பிக்கப் படுகிறது. அந்தத் தொழில் செய்து அதனால் அவன் ஜீவிக்க முடியும். ஸ்விட்ஸர்லாந்தில் பெண்கள் ஓய்வு நேரத்தில் நாம் ரூபாய் நூறு நூற்றைம்பது கொடுத்து வாங்கும் கைக்கடிகாரங்களைச் செய்து விடுகிறார்கள். இதனால் அறிவு விசாலமும் கைத்தொழில் தேர்ச்சியும் சிறு பிராயத்திலேயே ஏற்பட்டு விடுகிறது.

சமுதாயம் மாறிக்கொண்டே போகும்போது நாமும் பழக்க வழக்கங்களை மாற்றிக் கொண்டே போவதுதான் சிறந்தது. தற்சமயம் இருக்கும் கல்லூரிகள் மாணவ மாணவிகளுக்குப் போதுமானதாக இல்லை என்பது ஒரு குறைதான். ஆனால் ஒரே பள்ளிக் கூடத்தில் இருக்கும் உபாத்தியாயர்களும் இடமும் 'ஷிப்டு' முறையில் இரண்டு பங்கு மாணவ மாணவிகளுக்குக் கல்வி கற்கப் போதுமானதா யிருக்கும். ஒரு பகுதியினர் கல்வி கற்கும்பொழுது மற்ற பகுதியினர் இஷ்டமான தொழிலைக் கற்கப் போதுமான அவகாசமும் இருக்குமல்லவா!

ஷேக்ஸ்பியரைப் பற்றிப் பாடம் பாடமாகப் படித்துப் பட்டம் பெற்ற மாணவனுக்கு நம் நாட்டில் கம்பரும் வள்ளுவரும் இளங்கோவனும் இருந்தது தெரியவில்லை. இந்த வயிற்றெரிச்சலைப் பாரதியார் சொல்லி ஆற்றாமைப் பட்டார். ஆனால் அந்தக் காலம் மலை ஏறி விட்டது. மற்ற நாட்டிலுள்ள சாரங்களைக் கடைந்தெடுத்துக்கொண்டு நம் நாட்டுப் பெருமைகளையும் இன்னும் நமக்குத் தேவையான ஒற்றுமை, ஐக்கியபாவம், விஷயஞானம், பொது அறிவு இவைகளை அடிப்படையாகக் கொண்ட கல்வித் திட்டங்களை அமைப்பது சிரமமல்ல. பிரேயோ ஸ்டார்க்கின் புத்தகங்களைப்போன்ற சாக்கடைப் புத்தகங்களை எடுத்துவிட அதிக நேரமாகாது. மேலும் வயது, வகுப்புக் கேற்றவாறு புத்தகங்களும் விஷயங்களும் மாறவேண்டும்.

பரீக்ஷைகள் மாணவ மாணவிகளுக்கு ஒரு கண்டமாக இருப்பது கல்விக்குச் சத்துரு. தேறாத பிள்ளைகளைக் கடிந்து அவர்களை மனித வர்க்கமாகக் கருதாமல் பெற்றோர்கள் நடந்து கொள்வது தவறு. இது தவிர, பரீட்சைப் பேப்பர் திருத்துபவர்கள் இரண்டு அல்லது ஒரு மார்க்கில் வெற்றி, தோல்வி என்று மாணவர்களின் தலைவிதியை நிர்ணயித்து விடுகிறார்கள். அவர்கள் திருத்தம் செய்யும் பேனாவைப் பேனா என்று சொல்லக் கூடாது. மாணவர்கள், பெற்றோர்கள் மனதை அறுக்கும் கத்தி என்றுதான் சொல்ல வேண்டும்.

தாய் பாஷையை முதன்மையாக வைத்துப் பாடம் அமைத்த முறை வரவேற்க வேண்டியதுதான். ஆனால் ஆறு வகுப்புகள் வரை ஆங்கிலம் கற்பிக்காமல் இருப்பதில் அர்த்தமில்லை. போதுமான ஆங்கிலம் கற்பிக்கப்படாமல் காலேஜில் திடீரென்று எல்லாப் பாடங்களையும் ஆங்கிலத்தில் நடத்தினால் எப்படி மாணவர்கள் அவற்றைப் பின்பற்ற முடியும்?

இவை தவிர, பெண்களுக்கும் ஆண்களுக்கும் ஒரே படிப்பு நன்மை பயக்குமா என்பதை ஆராய்ந்தால், அது ஒரு தனிப் புத்தகமாகும். மொத்தத்தில் கல்வி முறையை உடனே மாற்றி, மாணவர்களின் உதய காலத்தை வளம் பெறச் செய்வது கல்வி இலாகாவின் மகத்தான பொறுப்பாகும்.



# மஞ்சுளா

## டாக்டர் டி. எஸ். துரைசாமி

திருச்சி ஜங்ஷனில் மெயில் வண்டி வந்து நின்றது. ஒரு வண்டியின் கதவைத் திறந்து, பெட்டி படுக்கை முதலிய சாமான்களை ஒரு போர்ட்டர் உள்ளே வைத்தான். உடனே ஒரு வயதான பெரியவரும், பதினேழு வயது மதிக்கக்கூடிய ஒரு பெண்ணும் வண்டியில் ஏறினர். வண்டியில் ஒரே கூட்டம். சாமான்களை வைக்கவோ அவர்கள் இருவரும் உட்காரவோ இடம் இல்லை. அவர்கள் சுற்று முற்றும் பார்த்துத் தடுமாறினர். அதற்குள் வண்டி நகர ஆரம்பித்தது.

அந்தப் பெண், பெட்டியை சீட்டுக்கு அடியில் தள்ளி வைக்க எண்ணினாள். பெஞ்சியின் மேல் உட்கார்ந்திருந்த ஒரு வாலிபன் காலைத் தொங்கவிட்டுக்கொண்டு ரொம்பவும் ஜோராக உட்கார்ந்திருந்தான்.

அந்தப் பெண் அவனைப் பார்த்து, "கொஞ்சம் காலை எடுத்துக் கொள்ளுங்கள்!" என்று சொன்னாள்.

வாலிபன் உடனே காலை பெஞ்சியின்மேல் வைத்துக்கொண்டு அவளை விறைக்கப் பார்த்தான். அவள் அதைப் பொருட்படுத்தாமல் பெட்டியை உள்ளே தள்ளினாள்.

அவள் அத்துடன் சும்மா இருந்துவிடவில்லை. "தயவு செய்து உங்கள் பக்கத்தில் இருக்கும் அந்தப் பெட்டியை மேலே வைத்துவிட்டீர்களானால் என் தாத்தா உட்கார்ந்து கொள்ளச் சௌகரியமாயிருக்கும்!" என்றாள்.

வாலிபன் அந்தப் பெண்ணை ஒரு தடவை பார்த்துவிட்டு, 'இது என்ன பெண்ணடா!' என்று முணுமுணுத்துக் கொண்டே பெட்டியை எடுத்து மேலே வைத்தான்.

"தாத்தா, நீங்கள் உட்கார்ந்து கொள்ளுங்கள்!"

அந்தப் பெண் வாலிபனைப் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை.

பெரியவர் அந்த இடத்தில் உட்கார்ந்து கொண்டார்.

"ரேவதி, இப்படிப் பதட்டமாகப் பேசப்படாது, அம்மா! யாராவது பார்த்தால் அதிகப்பிரசங்கி என்பார்கள்!" என்று அன்பு ததும்பும் குரலில் பெரியவர் தம் பேத்தியைக் கடிந்துகொண்டார்.

"என்ன தாத்தா, நீங்கள் சொல்லுவது வேடிக்கையாக இருக்கிறதே! வயதான பெரியவர் நீங்கள் நின்றுகொண்டு வருவதும் சிறியவர்கள் உட்கார்ந்துகொண்டு வருவதும் நியாயமா! இந்த ரயிலை விலை கொடுத்து ஒருவரும் வாங்கிவிடவில்லையே! நான் நின்று கொண்டு வருவதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. நீங்கள் நிற்கக் கூடாது!" என்று ரேவதி அழுத்தம் திருத்தமாகச் சொன்னாள்.

அந்தப் பெண்ணின் பேச்சும் செய்கையும் வாலிபனுக்கு வெறுப்பைத் தந்தது. இருந்தாலும் அதை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் "தாத்தா, உங்களுடைய பேத்தி ரொம்ப கெட்டிக்காரி போலிருக்கிறதே!" என்றான்.

பெரியவர் அவனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே இன்னும் கொஞ்சம் நெருங்கி உட்கார்ந்துகொண்டு பேத்திக்கும் இடம் கொடுத்தார்.

வண்டி இதையெல்லாம் பொருட்படுத்தாமல் ஓடிக்கொண்டேயிருந்தது.

மதுரை ஸ்டேஷன் வந்ததும் பெரியவரும் ரேவதியும் பரபரப்புடன் ரயிலை விட்டுக் கீழே இறங்கினார்கள்.

"ரேவதி, சாமான்களெல்லாம் சரியாக இருக்கின்றனவா, பார்த்தாயா!" என்று பெரியவர் கேட்டதும் அந்த வாலிபன் அவர் பேத்தியைக் கூர்ந்து கவனித்தான். ரேவதியும் அவள் தாத்தாவும் ஸ்டேஷனை விட்டு வெளியேறினர்.

"அப்பா, இன்று மாலை நாலு மணிக்கு அவர்கள் பெண் பார்க்க வருவார்கள். பையன் எம். பி. பி. எஸ். பாஸ் செய்துவிட்டு டாக்டராகப் பட்டணத்தில் 'பிராக்டிஸ்' செய்துகொண்டிருக்கிறான். அவன் மாமா இந்த ஊரில் இருக்கிறார்!" என்று ரேவதியின் தகப்பனார் அவள் தாத்தாவினிடம் சொன்னதும் ரேவதியின் முகம் வெட்கத்தினால் சிவந்தது.

மத்தியானம் மூன்று மணிக்குள் ரேவதிக்குச் சர்வ அலங்காரங்களும் செய்து முடித்து விட்டார்கள். ரேவதியின் தோழிகள் 'எப்போ வருவாரோ!' என்ற பாட்டைப் பாடி அவளைக் கேலி செய்துகொண்டிருந்தனர்.

சரியாக நாலு மணிக்குப் பிள்ளை வீட்டார் வந்துவிட்டனர். பையனோடு அவன் மாமாவும் வந்திருந்தார். ரேவதியின் தகப்பனாரும் அவள் தாத்தாவும் அவர்களை வரவேற்று உபசரித்

தனர். டிபன், காப்பி எல்லாம் சாப்பிட்டபிறகு ஹாலில் எல்லோரும் வந்து உட்கார்ந்தனர்.

"அம்மா, ரேவதி! இப்படி வந்து நமஸ்காரம் பண்ணு, அம்மா!" என்றார் அவள் தகப்பனார்.

உடனே ரேவதி நாணிக் கோணிக் கொண்டு மாமாவுக்கும், மாப்பிள்ளையாக வரப்போகிறவனுக்கும் நமஸ்காரம் செய்தாள். நமஸ்கரித்து விட்டு எழுந்திருக்கும்போது இருவர் கண்களும் சந்தித்தன. ரேவதியின் முகம் நாணத்தினால் சிவந்தது. பெரியவருக்குப் பையனைப் பார்த்ததுமே தூக்கி வாரிப்போட்டது. இவர்களோடு ரயிலில் வந்த அதே பையன்தான்!

'எப்படி முடியுமோ, என்னவோ! பெண்ணுக்கு வாய்த் துடுக்கு என்று சொல்லி விடுவானோ!' என்று அவர் பயந்தார்.

ரேவதியின் வசீகரமான முகமும், கூர்மையான கண்களும் அவள் அழகை அதிகரிக்கச் செய்தன. அவர்களுக்குப் பெண் பிடித்து விட்டது. அவ்வளவுதான்; ஒரு சுப முகூர்த்தத்தில் சௌபாக்கியவதி ரேவதிக்கும், ஸ்ரீதரன் எம்.பி.பி.எஸ்.ஸுக்கும் விமரிசையாகத் திருமணம் நடந்தது. பிறகு சீர் வரிசைகளெல்லாம் குறைவறச் செய்து மாப்பிள்ளை வீட்டுக்கு ரேவதியை அழைத்துக் கொண்டு போய் விட்டார்கள். தியாகராய நகரில்தான் டாக்டர் ஸ்ரீதரன் பங்களா இருந்தது.

அங்கு வந்த முதல் தினம்தான் ரேவதி சந்தோஷமாயிருந்தாள். மறு தினமே அந்த வீட்டில் தான் ஒரு வேண்டாத பொருள் என்பது அவளுக்கு நன்றாய்த் தெரிந்துவிட்டது. ரேவதி படித்தவள். நல்ல அழகுள்ளவள். சங்கீதத்தில் அவளுக்கு நல்ல பயிற்சி உண்டு. ஸ்ரீதரன் விஷயத்தில் இவை ஒன்றும் பயன்படவில்லை. அன்று ரயிலில் ரேவதி பேசிய துடுக்குப் பேச்சை அவன் இன்னும் நினைவில் வைத்திருந்தான். அன்று அவள் தன்னை அவமதித்ததாக எண்ணினான்.

பெண்களுக்கு வாய்த் துடுக்கு ஆகாது என்று அவள் உணர வேண்டும் என்பதற்காகவே அவளை ஸ்ரீதரன் கவனிக்காதவன்போல் நடந்து வந்தான். ரேவதிக்குத் தனிக் கார் இருந்தது. வீட்டில் வேலைக்காரர்கள் இருந்தனர். அவளுக்கு ஒரு சிரமமும் இல்லை. மாதா மாதம் அவள் செலவுக்குப் பணமும் கிடைத்து வந்தது. ஆனால் ஸ்ரீதரன் மட்டும் அவள் முகத்தை நிமிர்ந்து பார்ப்பதில்லை. ரேவதிக்கு வாழ்க்கை கசந்துவிட்டது. இருப்பினும் அவள் தன் கடமைகளைச் சரியாகச் செய்து வந்தாள்.

இந்தச் சமயம் யுத்தம் ஆரம்பமாயிற்று. யுத்த சேவைக்காக ஸ்ரீதரன் கடல் கடந்து செல்ல வேண்டியதாயிற்று. அந்தச் சமயத்தில் கூட அவன் ரேவதியைப் பார்க்கவும் இல்லை; சொல்லிக் கொள்ளவும் இல்லை. அவன் பாட்டுக்குப் புறப்பட்டு விட்டான். ரேவதியின் மனம் வருந்தியது. அவளும் வீட்டை விட்டுப் புறப்பட்டுக் கிராமத்துக்குச் சென்று ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பித்து நடத்தி வந்தாள். அதிலும் அவள் மனம் சமாதானம் அடையவில்லை. தன் பொறுப்பை இன்னொருவரிடம் ஒப்புவித்து விட்டுச் சென்னைக்குப் புறப்பட்டுச் சென்றாள்.

யுத்த சேவைக்குச் சென்ற ஸ்ரீதரன் கொஞ்ச நாள் உற்சாகமாகவே இருந்தான். நாள் ஆக ஆக அவனுக்குத் தான் செய்த தப்பிதம் மனத்தில் உறுத்தலாயிற்று. சதா ரேவதியின் நினைவாகவே இருந்தான்.

'ஐயோ! ரேவதியின் புத்திசாலித்தனத்துக்காகச் சந்தோஷம் அல்லவா அடைய வேண்டும்! அப்படியில்லாமல் அவளை அனாவசியமாகக் கஷ்டத்துக்குள்ளாக்கினேனே! வாஸ்தவமாக அவள் வாய்த் துடுக்கு உள்ளவளாயிருந்தால் இத்தனை நாள் என்னுடன் சண்டை போட்டிருப்பாளே! அவளுக்குத்தான் என்ன பொறுமை! என் கண்ணில் படாமலே எனக்குச் செய்ய வேண்டிய சிசுருஷைகளெல்லாம் அவ்வளவு வேலைக்காரர்கள் இருக்கும் தானே செய்து வந்தாளே! அவளை மிகவும் வருத்தி விட்டேனே!' ஒரு நாளாவது அவளோடு அன்பாகப் பேசியிருப்பேனா? அவள் அழகைக் கண்ணெடுத்துப் பார்த்திருப்பேனா! அவள் முகம்கூடச் சரியாக நினைவு இல்லையே! கண்ணிருக்கும் குருடனானேனே!' என்றெல்லாம் எண்ணி அவன் உள்ளம் மறுகினான்.

ஸ்ரீதரனுக்குக் கடைசியில் விடுதலை கிடைத்தது. தாய் நாடு திரும்பினான். தியாகராய நகரில் தன் பங்களாவுக்கு வந்து பார்த்தான்.

---



கான்ஸ்டேபிள்:— என்ன பையா! நடுரோட்டில் நடந்து போகிறாயே?

பையன்:—எங்கள் உபாத்தியாயர் பள்ளிக்கூடத்திற்கு நேரே வரும்படி சொல்லியிருக்கிறார்!

அது பூட்டிக் கிடந்தது. அக்கம் பக்கத்தில் விசாரித்ததில் அவர்களெல்லோரும் ஊர் கலைந்த பிறகு புதிதாகக் குடித்தனம் வந்தவர்கள் என்று தெரிந்தது. மாமனார் ஊருக்குச் சென்று அவரை விசாரித்ததில் அவன் துக்கம் அதிகமாயிற்று.

"ரேவதியைப்பற்றி எங்களுக் கென்னப்பா தெரியும்! உனக்கு அவளைக் கல்யாணம் செய்து கொடுத்துத்தான் நான் அவளை உயிரோடு இழந்தேன். எங்கள் பாவத்தை நாங்கள் தானே அனுபவிக்க வேண்டும்!" என்று கூறி மாமனார் கதற ஆரம்பித்து விட்டார்.

ஸ்ரீதரனுக்குப் பேச வாய் ஏது! மாமனார் முகத்தை நிமிர்ந்து பார்க்கக்கூட அவனுக்குத் தைரியம் இல்லை. குனிந்த தலை நிமிராமல் அவன் மீண்டும் தன் வீட்டுக்கு வந்து சேர்ந்தான். எத்தனையோ விதமாக ஸ்ரீதரன் யோசித்துப் பார்த்தான். ரேவதி எங்கே போயிருப்பாள் என்று அவனால் ஊகிக்கவே முடியவில்லை. அவன் மனம் பட்ட வேதனை சொல்லிமுடியாது.

ஸ்ரீதரன் தான் ரேவதிக்கு இழைத்த தீங்குக்குப் பிராயச் சித்தமாக "ரேவதி ஆஸ்பத்திரி" என்று ஒரு ஆஸ்பத்திரி ஆரம்பித்து அதில் ஏழை மக்களுக்கும் தீனர்களுக்கும் தர்ம வைத்தியம் செய்து வந்தான். அந்த ஆஸ்பத்திரி வர வரப் பெரிதாகிவிட்டது. கம்பவுண்டர்களையும் நர்ஸ்களையும் நிறைய நியமித்தான். அவர்களுள் மஞ்சுளா என்னும் நர்ஸ் ஸ்ரீதரனுக்கு அஸிஸ்டெண்டாக வந்தாள். அவளுடைய திறமையையும் சுறுசுறுப்பையும் கண்ட ஸ்ரீதரன் அவளிடம் எல்லாப் பொறுப்புகளையும் ஒப்புவித்தான்.

அன்று காலையில் மாமனாரும் மாமியாரும் திடீரென்று வந்து சேரவே ஸ்ரீதரன் மனதில் அதிசயமும் ஆனந்தமும் மாறி மாறித் தோன்றின. அவர்களை அன்போடும் மரியாதையோடும் வரவேற்றான்.

இரவு சாப்பாடெல்லாம் முடிந்து எல்லோரும் பேசிக் கொண்டிருக்கும்போது ஸ்ரீதரன், "மாமா, ரேவதியைப்பற்றி ஏதாவது விவரம் தெரிந்ததா!" என்று துக்கம் பொங்கக் கேட்டான்.

"ஏன் அப்பா, நடந்து போன சமாசாரத்தைப் பற்றி மனம் நொந்து கொள்கிறாய்! நீ எத்தனை நாளைக்கு இப்படித் தனியாக இருப்பாய்! எங்கள் தூர உறவுப் பெண்ணான நர்ஸ் மஞ்சுளாவை நீ கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். இது எங்கள் வேண்டுகோள். என்ன சொல்லுகிறாய்!" என்று கேட்டார் அவன் மாமனார்.

"மாமா, மாமி! உங்கள் பெருங் குணத்தைப் பற்றி நான் என்ன சொல்லுவேன்! ரேவதியின் வாழ்க்கையைப் பாழ்படுத்தின எனக்கு மீண்டும் விவாகம் செய்து வைக்க முன் வருகிறீர்களே! நான் ஒருநாளும் ரேவதிக்குத் துரோகம் செய்யமாட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்!" என்று கூறி மாமனாரையும் மாமியாரையும் ஸ்ரீதரன் வணங்கினான்.

"அப்பா, ஸ்ரீதரா! மஞ்சுளாவின் வாழ்க்கையையும் குலைத்துவிடாதே! அவள் உன்னைத் தான் விவாகம் செய்து கொள்ளுவேன் என்கிறாள். அவள் கடிதம் எழுதினாள் நாங்கள் இங்கே வந்தோம். மஞ்சுளா மிகவும் நல்ல பெண். வாயாடி அல்ல. அவளை எங்கள் சொந்தப் பெண் மாதிரியே நாங்கள் நினைத்து வருகிறோம்" என்றார் அவன் மாமனார். உணர்ச்சி மிகுதியில் அவர் தொண்டை கரகரத்தது.

"மாமா, இதுபற்றி மஞ்சுளாவையே கேட்டுத் தீர்மானிப்போம்!" என்றான் ஸ்ரீதரன்.

மறுநாள் காலை ஸ்ரீதரன் ஆஸ்பத்திரிக்கு வந்ததும் மஞ்சுளாவுக்குச் சொல்லி அனுப்பினான். சற்று நேரத்துக்கெல்லாம் மஞ்சுளா 'டக் டக்' என்ற பூட்ஸ் சத்தத்துடன் வந்து, "டாக்டர் ஸார்! கூப்பிட்டீர்களாமே!" என்று பணிவோடு கேட்டாள்.

ஸ்ரீதரன், "மஞ்சுளா, நான் ரேவதிக்கு இழைத்த தீங்குக்காக அவளுடைய பெற்றோரின் விருப்பத்துக்குப் பணியவேண்டி யிருக்கிறது. அவர்கள் விருப்பம் நான் உன்னை மணக்க வேண்டும் என்பதே! நீ என்ன சொல்லுகிறாய்!" என்று கேட்டான்.

மஞ்சுளா, சம்மதம் என்பதற்கு அறிகுறியாக ஒரு பார்வை பார்த்தாள்.

அவ்வளவுதான்; ஆடம்பரமற்ற முறையில் டாக்டர். ஸ்ரீதரனுக்கும் மஞ்சுளாவுக்கும் விவாகம் நடந்தது.

"மஞ்சுளா, நீ ஏன் புதுப் பெண் மாதிரி ஒளிகிறாய்!" என்று கூறி ஸ்ரீதரன் அவள் அருகில் சென்று கையைப் பிடித்தான்.

"நான் யார் என்று தெரிகிறதா!" என்று கேட்டாள் மஞ்சுளா. அப்போது அவள் நர்ஸ் உடை உடுத்தியிருக்கவில்லை.

ஸ்ரீதரன் அவளை உற்றுப் பார்த்தபடி கொஞ்சம் தடுமாறிப் பிறகு, "ஹா! ரேவதி, ரேவதி! என்னை மன்னித்து விடு. நீ எப்போது வந்தாய்! நீ இருக்கும் இடம் தெரியாமல் தவித்தேனே!" என்று கதறி விட்டான்.

"நான் இனி பழைய மஞ்சுளாதான். அந்த வாயாடி ரேவதி இறந்தே போய் விட்டாள். தாங்கள்தான் என்னை மன்னிக்க வேண்டும்" என்றாள் ரேவதி.

"நீயா ரேவதி! நீயா என்னிடம் நர்ஸ் மஞ்சுளாவாகச் சேவை செய்தாய்! பாவி, நான் உன் முகத்தை ஏறெடுத்தும் பார்க்காமல் வெறுப்புடனேயே காலம் தள்ளி விட்டேன். ஆகையினால் உன்னைப் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆகா! இப்பொழுது நினைத்தாலும்கூட என் நெஞ்சு வெடித்துவிடும்போல் இருக்கிறது. உன் மதிவதனத்தைப் பார்க்காமலே என் வாழ்நாளைப் பாழாக்கி விட்டேன், பாவி!" என்று கூறிய ஸ்ரீதரன் நாத் தழுதழுக்க மேலே என்ன பேசுவதென்று தெரியாமல் தவித்தான்.

"டாக்டர், அந்தப் பழைய நினைவுகளை மறந்து விடுங்கள். இப்பொழுதுதான் நம் இன்ப வாழ்க்கை ஆரம்பமாகி யிருக்கிறது!" என்றாள் நர்ஸ் மஞ்சுளா.

ஸ்ரீதரன் பிரமித்துப் போனான்.

# மிருக சுபாவம்

குட்டிக் கதை 11

பொழுது விடியப்போகும் சமயம். முன் இரவின் தங்களுக்காக இரை தேடச் சென்ற தாய்ப் புலியை எதிர்பார்த்து இரு புலிக் குட்டிகள் காத்திருந்தன.

சிறிது நேரத்துக்குப் பிறகு முன் கால்கள் இரண்டையும் நீட்டிச் சோம்பல் முறித்துக்கொண்டே, "இவ்வளவு நேரமாகியும் அம்மாவைக் காணோமே!" என்றது ஒரு புலிக் குட்டி.

"இன்னும் ஒன்றும் கிடைக்கவில்லையோ, என்னமோ!" என்றது இன்னொரு புலிக் குட்டி நாக்கைச் சப்புக் கொட்டிக் கொண்டே.

"எனக்குப் பசி காதை அடைக்கிறது......"

"எனக்கும்தான் பசி வயிற்றைக் கிள்ளுகிறது!"

"எதற்கும் நாம் கொஞ்ச தூரம் சென்று அம்மாவைத் தேடிப் பார்ப்போமா?"

"வேண்டாம், வேண்டாம்; 'நான் வரும் வரை நீங்கள் குகையை விட்டு வெளியே வரக் கூடாது' என்று அம்மா சொல்லிவிட்டுப் போயிருக்கிறாள்......"

"கடைசி வரை அம்மா வராமலே இருந்து விட்டால் ......?"



"என்னை நீயும் உன்னை நானும் சாப்பிட்டு விடுவதா, என்ன?—பேசாமல் இரு; அப்படி வரா விட்டால் அப்புறம் பார்த்துக் கொள்வோம்!" என்று அவற்றில் ஒன்று எரிந்து விழுந்தது.

இன்னொன்று, "அதுவரை பசியோடு இங்கேயே கிடந்து தவிக்க வேண்டுமாக்கும்!" என்று அலுத்துக்கொண்டே, தன் கால் விரல்களில் ஒன்றை லேசாகக் கடித்து, அதில் கசிந்து வந்த இரத்தத்தை நாவினால் நக்கி ருசி பார்த்தது.

அதற்குள் அவற்றின் அம்மா சற்றுத் தூரத்தில் உறுமிக் கொண்டு வரும் சத்தம் கேட்கவே, இரண்டு குட்டிகளும் ஏககாலத்தில் துள்ளிக் குதித்து அதை வரவேற்கத் தயாராயின.

தாய்ப் புலி தங்களை நெருங்கியதுதான் தாமதம்; புலிக் குட்டிகள் இரண்டும் ஏமாற்றம் அடைந்தன. ஏனெனில் அவை எதிர்பார்த்தது போல் அம்மாவின் வாயில் எந்தவிதமான இரையும் இல்லை!

"ஏன், அம்மா! ஒன்றும் கிடைக்கவில்லையா?"

"கிடைத்தது; அதற்குள் இன்னொரு புலி வந்து......"

"என்ன கிடைத்தது?"

"ஒரு கொழுத்த காட்டுப் பன்றி. அது தன்பாட்டுக்கு ஒரு மரத்தடியில் உதிர்ந்து கிடந்த பழங்களைப் பொறுக்கித் தின்று கொண்டிருந்தது. நான் அதன்மேல் பாய்வதற்குத் தயாராவதற்குள் இன்னொரு புலி வந்து அதைப் பிடித்துக் கொண்டு போய் விட்டது......"



"அந்தப் புலியை நீ சும்மாவா விட்டாய்?"

"சும்மா விடாமல் என்ன செய்வது?"

"ஏன், அந்தப் புலியை அடித்துக் கொன்றிருக்கக் கூடாதா?"

"சீ, சீ! நாம்கூட மனிதர்களா, என்ன?—தன் இனத்தைத் தானே அடித்துக் கொல்வதற்கு?" என்று சொல்லிக் கொண்டே, தாய்ப் புலி மீண்டும் இரை தேடச் சென்றது. —விந்தன்

# "ஒன்ஸ்மோர்!"

## ஸோமாஸ்

பத்மநாபன் அன்று சங்கீத சபாவுக்குப் போனதே அவன் மனைவி பார்வதியின் பிடிவாதத்துக்காகத்தான். அதனால் பத்மநாபன் சங்கீதம் என்றால் கஜம் என்ன விலை என்று கேட்பான் என்று நிர்மாணித்து விடக் கூடாது. அவனுக்குச் சங்கீதம் கேட்பதில் ஆர்வம் அதிகமாக உண்டு. ஆனால் அன்றைய தினம் சபாவில் சங்கீதக் கச்சேரியில்லை; விக்கினேசுவர பாகவதரின் ஹரிகதா காலக்ஷேபம். பத்மநாபனுக்கும் ஹரிகதா காலக்ஷேபத்துக்கும் ரொம்ப தூரம்.

'விக்கினேசுவர பாகவதரின் ஹரிகதா காலக்ஷேபமா, அல்லது தர்மபத்தினி பார்வதியின் கோபமா?' எதைச் சகித்துக் கொள்ளுவது? என்று யோசனைசெய்து அவனால் ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை.

பார்வதியின் கோபம் எப்படிப்பட்டது என்பது அவனுக்கு நன்றாய்த் தெரிந்தது தான். பத்மநாபனைவிட அவன் வீட்டுப் பாத்திரங்கள்தான் பார்வதியின் கோபத்தை நன்றாய்த் தெரிந்து வைத்திருந்தன! செம்பும் தவலையும் குடமும் அவள் கோப அவசரத்தில் கொடுத்த பரிசுகளை நன்கு விளம்பரப்படுத்திக் கொண்டிருந்தன. பத்மநாபனுடைய குழந்தைகளின் முதுகைப் பேட்டி கண்டு கேட்டால், அவை பயத்துடன் அம்மாவின் கோபத்தைச் சொல்லும்!

கடைசியில் பத்மநாபன் பார்வதியின் விருப்பப்படி விக்கினேசுவர பாகவதரின் கதா காலக்ஷேபத்துக்குப் போகலாம் என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டான்; அதாவது பார்வதியினால் பத்மநாபன் தீர்மானமாகச் சொல்லப்பட்டான்!

ஞாயிற்றுக்கிழமை வந்தது. பார்வதி மத்தியானத்திலிருந்தே கதா காலட்சேபத்துக்குப் போவதற்குப் பிரமாதமாகத் தயார் செய்து கொள்ள ஆரம்பித்தாள்.

மாலை மணி ஐந்தாயிற்று. பத்மநாபன், "பார்வதி, நேரம் ஆகிவிட்டது!" என்றான்.

"நான் தயார்! குழந்தைகளை அழைத்துக் கொண்டு வீட்டைப் பூட்டிக் கொண்டு புறப்பட வேண்டியதுதான். நீங்கள் டிரஸ் பண்ணிக்கொள்ளுங்கள்!" என்றாள் பார்வதி.



பத்மநாபன் டிரஸ் பண்ணிக்கொண்டு கால் டஜன் குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு, வாசற் கதவைப் பூட்டிக் கொண்டு பார்வதி சமேதனாகக் கிளம்பினான். கைக்குழந்தையைப் பத்மநாபன் எடுத்துக் கொள்ள, மற்ற இரண்டு குழந்தைகளும் அவன்கூடவே ஓடி வந்தன. பார்வதி ஒய்யாரமாக நடந்து வந்தாள்.

இவர்கள் சபைக்குப் போய்ச் சேருவதும் பாகவதர் கதை ஆரம்பமாவதும் சரியாக இருந்தது. பார்வதி பெண்கள் இருக்கும் இடத்தில் உட்கார்ந்துகொண்டு சுவாரஸ்யமாகக் கதை கேட்பதில் ஈடுபட்டிருந்தாள்.

பத்மநாபன் குழந்தைகளுடன் புருஷர்களுக்கு மத்தியில் உட்கார்ந்திருந்தான்.

நேரம் போனது தெரியாமல் மிகவும் சுவாரஸ்யமாகக் கதை கேட்டுக்கொண்டு வந்த பத்மநாபன் ஒரு துண்டுக் காகிதத்தைப் பையிலிருந்து எடுத்து அதில் இரண்டு வரி என்னவோ எழுதி ஒரு சின்னப் பையனிடம் கொடுத்து அவன் காதோடு ஏதோ சொல்லி யனுப்பினான்.

அந்தப் பையன் எல்லோரையும் மிதித்துக் கொண்டும் உதைத்துக் கொண்டும் பாகவதரை நோக்கி முன்னேறினான். பையன் படும் அவஸ்தையைப் பார்த்த ஒருவர் அந்தத் துண்டுக் கடிதத்தை வாங்கி அடுத்த வரிசையில் இருந்த இன்னொருவரிடம் கொடுத்தார்; அவர் இன்னொருவரிடம் கொடுத்தார்; அந்த இன்னொருவர் இன்னொருவரிடம் கொடுத்தார். இப்படியாக அந்தத் துண்டுக் கடிதம் ஜனத்திரளைக் கடந்து ரஸிக மகா ஜனங்களின் பேருதவியால் பாகவதர் கைக்குப் போய்ச் சேர்ந்தது.

துண்டுக் கடிதத்தை வாங்கிக் கொண்ட பாகவதரின் முகம் பிரகாசம் அடைந்தது. அவர் அப்பொழுது பாடி முடித்த தியாகப் பிரும்மத்தின் கீர்த்தனத்துக்குத் தான் யாரோ ஒரு ரஸிகர், 'ஒன்ஸ்மோர்' கேட்டிருக்கிறார் என்று நினைத்த மாத்திரத்தில் பாகவதரின் உடம்பு சிலிர்த்தது. புன்னகை பூத்த முகத்துடன் பாகவதர் அந்தக் கடிதத்தைப் பிரித்துப் படித்தார்.

"பார்வதி, நேரம் ஆகிவிட்டது. பாகவதன் ஓயமாட்டான்போலிருக்கிறது. குழந்தைகள் தூங்கிவிட்டன. புறப்படு! பத்மநாபன்."

இந்தக் கடிதத்தைப் பார்த்த பிறகு பாகவதரின் முகம் விகாரமடைந்தது. பத்மநாபன் முகமும் விகாரமடைந்தது; எழுந்து நின்று பார்வதியைக் கூப்பிட்டு, குழந்தைகளுடன் நகர ஆரம்பித்தான்.

# செல்லப் பெண்

## நவீனன்

மாடிப்படியில் நின்ற அந்தப் பெண் என்னைப் பார்த்துக் 'களுக்'கென்று சிரித்தாள்!

எனக்கு ஆத்திரமாக வந்தது. இடுப்பில் குழந்தையைச் சுமந்து கொண்டு, வீட்டுச் சாமான்களைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு அப்போதுதான் அந்த வீட்டுக்குக் குடி வந்து கொண்டிருந்தேன். கைக்குழந்தை 'ஞைஞை' யென அழுதது.

சிரிப்பு என்ன வேண்டியிருக்கிறது, சிரிப்பு!

அவளுக்கும் கல்யாணமாகி, என்னைப் போல் குடியும் குடித்தனமுமாகி, குழந்தை குட்டிகளைப் பெற்றெடுத்தால் அப்போது சிரிக்க வருமா?

வந்த கோபத்தையெல்லாம் சிரமப்பட்டுச் சமாளித்துக் கொண்டு என் 'போர்ஷ'னுக்குப் போனேன். வேறு பெண்ணாக இருந்தால் நறுக்குத் தெறித்தாற் போல இரண்டு வார்த்தைகள் கேட்டிருப்பேன். அவள் வீட்டுக்காரரின் அருமைப் பெண்ணாகப் பிறந்து விட்டாளே!

கையில் வைத்திருந்த சாமான்களை உள்ளே வைத்துவிட்டு அடுத்த நடை வந்தபோது அந்தப் பெண், அப்பாவுக்குப் பின்னால் நின்று குழைந்து கொண்டிருந்தாள். பைஜாமா போட்டுக் கொண்டு, இரட்டைப் பின்னல் இப்படியும் அப்படியும் அசைந்தாட அவள் தன் உடம்பை வில்லாக வளைத்துக் கொண்டு தன் அப்பாவிடம் கொஞ்சிக் கொஞ்சிப் பேசினாள்.

எனக்கு அவர்கள் பேசியது நன்றாகக் கேட்டது.

"அப்பா! அதற்குத்தான் கல்யாணம் வேண்டாம் என்கிறேன். கல்யாணம் பண்ணிக் கொண்டால் நானும் பின் கட்டுக்குப் புதிசாக் குடி வருகிற மாமியைப் போலக் கஷ்டப்படணுமே!" என்று அவள் கூறிவிட்டுத் தன் ஜோலக்குகளை அசைத்துக் கொண்டாள்.

"கல்யாணம் செய்து கொண்டால் நீ என்னத்துக்கு அம்மா தனிக்குடித்தனம் இருக்க வேணும்? இத்தனை பெரிய வீடு வேறு யாருக்காம்?" என்று வீட்டுக்காரர் தன் செல்லப் பெண்ணிடம் செல்லமாகச் சொல்லிவிட்டு, "எங்கே, புதிதாகக் கற்றுக் கொண்ட 'டான்ஸ்' கொஞ்சம் ஆடிக் காட்டு!" என்று தம் மூக்குக் கண்ணாடியைத் துடைத்து மாட்டிக் கொண்டார்.

அந்தப் பெண் கவலையில்லாமல் வளர்ந்த தன் உடம்பைத் தூக்கி 'டம் டம்' என்று குதித்தது!

எனக்கும் சிரிப்பு வந்தது. ஆனால் அடக்கிக் கொண்டேன். நான் சிரித்துவிட முடியுமா?

* * *

இரண்டு, மூன்று தினங்களுக்குப் பிறகு அந்தப் பெண் "மாமி!" என்று கூப்பிட்டபடி பின் கட்டுக்கு வந்தாள்.

"வா; உட்கார்! உன் பேர் என்ன?" என்று கேட்டேன்.

"என் பேர் சரோஜா. அப்பா மட்டும் 'ரோஜ்' என்று கூப்பிடுவார்!" என்று சொல்லிவிட்டு வாசற்படியில் உட்கார்ந்து கொண்டு இரண்டு கைகளையும் கன்னத்தில் ஊன்றிக் கொண்டு, கண்களைச் சுழற்றிப் பார்த்தாள்.

"இவ்வளவு சின்ன இடத்துக்குக் குடி வர எப்படித்தான் இஷ்டப்பட்டீர்களோ?" என்று கேட்பதுபோல இருந்தது அவள் பார்த்த பார்வை.

"அப்பா கோர்ட்டுக்குப் போய் விட்டால் எனக்குப் பொழுதே போவதில்லை. ஏன் மாமி! உங்களிடம் கதைப் புத்தகம் ஏதாவது இருக்கிறதா?" என்று கேட்டாள்.

"இப்போதெல்லாம் கதை படிக்க எனக்கு எங்கே நேரம்? அதனால் வாங்குகிறதில்லை" என்று பதிலளித்துக் கொண்டே, "இந்த வருஷம் உனக்குக் கல்யாணம் ஆகணும் போலிருக்கிறது. உன்னைக் கொத்திக் கொண்டு போக எவன் வருகிறானோ.........!" என்று ஆரம்பித்தேன்.

"மாமி! கொத்திக் கொண்டு போக நான் எலிக்குஞ்சு இல்லை!" என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே அவள் எழுந்து போய் விட்டாள். கல்யாணப் பேச்சை எடுத்தால் சரோவுக்கு அவ்வளவாகப் பிடிக்காது என்று பிறகு யூகித்துக் கொண்டேன்.

அதற்காக நான் சும்மா இருப்பதில்லை. அவள் மிடுக்கிக் கொண்டு என்னைத் தேடித் தன் சொந்தப் பெருமையைச் சொல்ல வரும்போதெல்லாம் "உனக்கு எப்போது கல்யாணம்?" என்று கேட்டு அவளை விரட்டி அடித்து விடுவேன்.



ஒரு நாள் முன் கட்டுக் குழாயில் தண்ணீர் பிடித்துக் கொண்டிருந்தபோது சரோஜாவின் தகப்பனார் என்னிடம் மனம் விட்டுப் பேசினார்.

"அவளுக்குக் கொஞ்சம் புத்திமதி சொல்லுங்கள். யார் என்ன சொன்னாலும் கேட்க மாட்டேன் என்கிறாள். இதுவரை வந்த வரன்களையெல்லாம் தட்டிக் கழித்து விட்டாள். இன்றுகூடப் பம்பாயிலிருந்து ஒரு பிள்ளையாண்டான் 'பறந்து வந்து' அவளைப் பார்க்கப் போகிறான். அவன் வரும் நேரம் பார்த்து என் மகள் 'டென்னிஸ் பாட்'டை எடுத்துக்கொண்டு கிளம்பி விடாமல் இருக்கவேண்டுமே என்று கவலையாயிருக்கிறது. சின்ன வயது முதல் கொடுத்த செல்வத்தினால் இப்போது சிரமப்படுகிறேன். அவள் அம்மா இருந்தால் இப்படியெல்லாம் நடக்குமா?" என்று கூறிவிட்டு, மூக்குக் கண்ணாடியைக் கழற்றி அடியில் வழிந்திருந்த கண்ணீரை மேல் வேஷ்டியால் துடைத்துக் கொண்டார். இவ்வளவு பெரியவர் நம்மிடம் சொல்லிக் குறைப்பட்டுக் கொள்கிறாரே என்று எனக்கு அங்கலாய்ப்பாக இருந்தது. சரோமீது இனி ஆத்திரப்படாமல் அவளை வழிக்குக் கொண்டு வர முடியுமா என்று அன்று முதல் முயற்சி எடுத்துக்கொள்ளத் தொடங்கினேன்.

அந்த நாள் நினைவு வந்தது. 'எனக்குரியவர்' என்று யாரோ ஒருவரை என் அப்பா நிச்சயித்தார். ஜானவாசத்தின் போதுகூட அவர் எப்படி இருக்கிறார் என்று மேல் மாடியில் நின்று பார்க்க என் அம்மா என்னை அனுமதிக்கவில்லை.

ஆனால் இந்த சரோ? வருகிறவர்களை விரட்டி அடிக்கிறாளாமே! அவள் இதயத்தில் என்னதான் இருக்கிறது?

புகுந்து பார்க்க எவ்வளவோ சிரமப்பட்டேன். அவள் மனம் போனபடி விட்டுத் திருப்பி உள்ளத்தை ஊடுருவிப் பார்க்கப் பகீரதப் பிரயத்தனம் செய்தேன். அவள் காலேஜில் படித்த காலத்தில் எந்தக் கட்டழகனைக் கண்டாவது மோகித்து, அப்பாவிடம் சொல்ல வெட்கப் படுகிறாளோ?— அப்படியானால் உடனே அவள் அப்பாவிடம் 'சரோ விடு தூதா'கச் சென்று கல்யாணத்தை முடித்து வைக்கத் தயார் என்று கூடச் சொன்னேன்.

கடைசியில் சற்று மனம் திறந்து சொன்னாள். அவளுடைய அம்மா இளையாளாக வாழ்க்கைப் பட்டு இன்பப்படுவதற்குப் பதிலாகத் துன்பப்பட்டாளாம். தகப்பனார் பார்வைக்கு நல்லவர்போலத் தோன்றினாலும் பிடிவாதக்காரராம். அவரிடம் மாட்டிக் கொண்டு உயிர் போகும்வரை சரோவின் அன்னை பட்ட அல்லல் கொஞ்ச நஞ்சமல்லவாம். சரோவிடம் அவள் தாய் கடைசி மூச்சு நிற்கும்போது, "நீயாவது கல்யாணம் செய்து கொள்ளாமல் புத்திசாலியாக இரு!" என்று காதோடு கூறி விட்டுப் போனாளாம். அதனால்தான் தனக்குக் கல்யாணமே வேண்டாம் என்று தான் உறுதியாக இருப்பதாக அவள் கூறினாள். தனக்கு உள்ளூறத் திருமணத்தில் சபலம் இருந்தும் சமயத்தில் அன்னைக்குக் கொடுத்த வாக்குறுதி நினைவு வந்து தன்னை ஆட்டி வைத்து விடுகிறது என்றும் அவள் சொன்னாள்.

அவளுடைய நிலைமைக்காக அநுதாபப் பட்டேன். "உலகத்தில் எல்லாப் புருஷர்களுமே உன் அப்பாவைப் போல இருந்து விட மாட்டார்கள். இவ்வளவு பெரிய சம்சாரியாக இருந்தும் எனக்கு என் கணவரிடம் தனிப் பிரியம் இருக்கிறது. அது எப்போதுமே குறையாது என்பது உறுதி. இத்தனைக்கும் என் அப்பாவால் நிச்சயிக்கப்பட்டவர் அவர். மணக்கோலத்தில்

"'அவர்' அமரும் வரை அவர் கறுப்பா, சிவப்பா என்று நான் அறியேன்" என்பதாக எடுத்துச் சொல்லி, சரோவின் வைராக்கியத்தைத் தகர்த்து எறிந்து விட்டேன். அன்று மாலை அவளைப் பார்க்க வந்த 'பம்பாய்ப் பிள்ளை'யை அவளுக்குப் பிடிக்கும்படியும் செய்து விட்டேன்.

"அப்பா! எனக்குச் சர்வ சம்மதம்" என்று உள்ளே ஓரே ஓட்டமாக ஓடிச் சென்று அபிப்பிராயம் சொல்லும்படி புரட்சிகரமாக சரோவை மாற்றி விட்டேன்.

அப்பாவும் பெண்ணும் தனித்தனியே என்னைப் பாராட்டினார்கள். கல்யாணத்திற்குத் தேதி கூட வைத்துவிட்டார்கள். "பக்கத்தில் இருந்து நடத்தி வைக்க வேண்டும். நீங்கள் என் வீட்டுக்குக் குடி வந்த வேளை என் பெண்ணிற்குக் கதி மோட்சம் பிறந்துவிட்டது" என்று கூறி, சரோஜாவின் தகப்பனார் என்னை ஆச்சரியப்பட வைத்துவிட்டார். இவ்வளவு நல்லவராக இருப்பவரைப் பொல்லாதவர் என்று சரோஜா சொல்லுகிறாளே என்று தோன்றியது எனக்கு.

* * *

கல்யாணத்திற்கு இன்னும் நான்கு நாட்கள்தான் இருந்தன. சரோவுக்கு என்று தகப்பனார் வாங்கி வைத்திருக்கும் வைர ஸெட், சீர் வரிசைகள், பட்டுப் புடவைகள் எல்லாவற்றையும் நிமிஷத்துக்கு நிமிஷம் எடுத்து வந்து, "மாமி! இது எனக்கு நன்றாக இருக்குமா? மாமி! இது அவருடைய கைக் கெடியாரத்துக்குச் செயின்!" என்று கூறி என் மறுமொழிக்காகத் துடித்து நின்றாள்.

"உனக்கு என்ன குறைச்சல்? அப்பாவுக்கு ஒரே அருமைப் பெண். உனக்குச் செய்யாமல் வேறு யாருக்குச் செய்யப்போகிறார்? ஏன், உன்னை மணக்கப் போகும் அந்தப் பையனுக்குத்தான் என்ன? உன்னைப் பார்த்தவுடன் சொக்கிவிட்டானே! ஏண்டியம்மா சரோ! அன்று நான் சொல்லவில்லையா? உன்னைக் கொத்திக் கொண்டு போக வரப்போகிறான் என்று. இப்போது என்ன சொல்லுகிறாய்? அவன் 'பறந்து'தானே வந்தான், பம்பாயிலிருந்து?" என்றேன்.

அவள் வெட்கத்தினால் மேலும் தன் கன்னங்களைச் சிவப்பாக்கிக் கொண்டு, "போங்கள் மாமி! உங்களுக்கு எப்போதும் பரிகாசம்தான்!" என்று கூறி விட்டு மான் குட்டி போல முன் கட்டுக்குத் துள்ளி ஓடிவிட்டாள்.

அரைமணிக்குப் பிறகு கோர்ட்டிலிருந்து வந்த சரோவின் தகப்பனார் என்னை அவசரமாக அழைத்து, "படியுங்கள், இந்தக் கடிதத்தை! நான் அப்பொழுதே நினைத்தேன்; அப்படியே ஆகி விட்டது. இப்போது அவன் அப்பா என்ன எழுதியிருக்கிறார் என்று படித்துப் பாருங்கள்!" என்று துடித்தார்.

**"...என் பையனை எல்லோருமாகச் சேர்ந்து ஏமாற்றிவிட்டீர்கள். எதிர் ஜாமீன் இல்லாமல் சீர் மட்டும் செய்யும் கல்யாணத்தை நான் விரும்பவில்லை. எனவே ஆயிரம் ரூபாய் ரொக்கமாகத் தந்தால்தான் கல்யாணம் நடைபெறும். உடனே மேற்கண்ட விலாசத்திற்குத் தந்தி மணியார்டர் அனுப்ப வேண்டும். இல்லாவிடில் வேறு வரன் பார்த்துக்கொள்ளலாம்."**

கடிதத்தைப் படித்துவிட்டு நான் சரோஜாவின் முகத்தைப் பரிதாபகரமாகப் பார்த்தேன். அவள் முகம் வாடி வதங்கி இருந்தது. அவளுடைய அப்பா, "இந்தக் கல்யாணம் நின்று போனாலும் பரவாயில்லை. பேசிய பேச்சு தவறக்கூடாது எனக்கு. கண்டிப்பு என்றால் கண்டிப்புத்தான்!" என்று துள்ளினார். பெண்ணை ஒரு தினுசாகச் சரிப்படுத்தி மணக்கத் தயார் செய்த பிறகு அப்பா இப்படி வக்கரித்துக்





கைதி (விடுதலை யடைந்ததும்):—எஜமான், இங்கே ரொம்பக் கஷ்டப் பட்டுட்டேனுங்க! இனிமேல் இந்தச் சிறையிலே காலடி எடுத்து வைக்க மாட்டேனுங்க!

இன்ஸ்பெக்டர்:—பேஷ்! இப்போ தாவது புத்தி வந்ததே!

கைதி:—இல்லீங்க; அடுத்த தடவை கட்டாயம் வேலூர்ச் சிறைக்கு மாத்திக்கிறேனுங்க. இன்னொரு தடவை இந்தச் சிறைக்கு வந்தால் கேளுங்க!

---

கொள்கிறாரே என்று எனக்கு வியப்பாக இருந்தது.

அன்று இரவு பத்து மணிக்கு மேல் சரோ பூனைபோல மாடியிலிருந்து இறங்கி என்னிடம் வந்து விம்மினாள். "மாமி! அப்பா பிடிக்கிற பிடிவாதத்தைப் பார்த்தீர்களா? பதினாயிரம் ரூபாய் செலவழித்துச் சீர் செய்கிறவருக்கு ஆயிரம் ரூபாய் பெரிதாகப் போய்விட்டதே! நான் என்ன மாமி செய்வேன்?" என்று தேம்பினாள்.

கடைசியில் இருவருமாகச் சேர்ந்து 'சதி' திட்டம் வகுத்து வெற்றி கண்டோம். சரோவின் தகப்பனாருக்குத் தெரியாமல் அவளுடைய தாயார் இரகசியமாகக் காசுமாலை ஒன்று கொடுத்துவிட்டுப் போனாளாம். அது அவளிடம் இருப்பது அப்பாவுக்குத் தெரியவே தெரியாதாம். அதை விற்றுப் பணமாக்கி அப்பாவுக்குத் தெரியாமல் பிள்ளையின் தகப்பனாருக்கு அனுப்பி விடவேண்டும் என்பதே எங்கள் ஏற்பாடு.

இந்தச் சதித் திட்டத்தில் என்னுடைய கணவரும் ஒத்துழைத்தார். தந்தி மணி யார்டர் அனுப்ப அவர் மூலம் ஏற்பாடு செய்தோம்.

"மாமி! உங்களை என்னமோ என்று நினைத்தேன். கோவிலில் வைத்துத்தான் கும்பிட வேண்டும்" என்று அந்தப் பெண் என்னை அளவுக்கு மீறி ஸ்தோத்திரம் செய்தாள். எனக்குச் சந்தோஷமாக இருந்தது.

கல்யாணம் ஆயிற்று. எந்தவிதமான பூசலும் கிளம்பி விடாமல் கண்காணித்துக் கொண்டேன். தம் சம்பந்தி பணிந்து விட்டார் என்றுதான் சரோஜாவின் தகப்பனார் நினைத்துக் கொண்டிருந்தார்!

சரோஜாவின் கல்யாணம் நடந்தவுடன் அவளைக் கையோடு பம்பாய்க்கு அழைத்துச் செல்ல மாப்பிள்ளை தீர்மானித்தார். சரோஜா நன்றி பொங்க என்னை நமஸ்கரித்து விட்டுப் புருஷனுடன் பம்பாய்க்குக் கிளம்பினாள்.

* * *

ஆறு மாதங்களுக்குப் பிறகு சரோ, தான் சௌக்கியமாக இருப்பதாக எனக்கு நான்கு இடங்களில் நமஸ்காரம் சொல்லிக் கடிதம் போட்டிருந்தாள். இறுதியில் இரண்டு மாதங்களாக 'ஸ்நானம்' செய்யவில்லை என்று குறிப்பிட்டுவிட்டு, "அம்மாவின் நினைவு இப்போது எனக்கு வருகிறது. அம்மா இருந்தால் பிரசவத்திற்குப் பிறந்தகத்துக்கு வந்துவிட மாட்டேனா, மாமி!" என்று அந்தப் பெண் எழுதியிருந்தது எனக்குத் தாங்கலாகப் பட்டது.

அதே சமயம் "சரோஜா இரண்டு மாதமாக எழுதவில்லை என்று கடிதம் போட்டிருக்கிறாள். என்ன செய்வது என்று யோசிக்கிறேன்" என்று என் காதில் விழும்படி அவளுடைய தகப்பனார் கூறிவிட்டு, எதிரில் மாட்டியிருந்த தன் இளைய மனைவியின் படத்தைப் பார்த்துப் பெருமூச்சு விட்டார். இந்தச் சமயத்திலாவது அவளை நினைத்தாரே என்று எனக்குச் சற்று ஆறுதலாக இருந்தது.

"ஆமாம்; எனக்குக் கூடத்தான் எழுதியிருக்கிறாள். அதற்கு என்ன? போய் அழைத்து வாருங்கள். நான் இருக்கும் போது விட்டுக் கொடுத்துவிடுவேனா?" என்றேன்.

அதே சமயம் என்னிடம் இருவித உணர்ச்சிகள் வேலை செய்தன. "ஐயோ பாவம், தாயில்லாத பெண். வரட்டும்!" என்றது ஒன்று. குரு வந்த அன்று இடுப்பில் 'ஜானகை' என்று அழகு கைக் குழந்தையைக் கண்டு 'களுக்'கென்று சிரித்தாயே, இப்போது அவளுக்கு இரட்டை இரட்டையாகப் பிறக்கட்டுமே!" என்றது இன்னொன்று!

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 303. இரண்டு தண்டாயுதங்கள்.

கும்பகர்ணன் இறந்து பட்டான் என்ற செய்தி கேட்ட மாத்திரத்தில் தாங்க முடியாத துயரமும் கோபமும் வந்து விட்டது ராவணனுக்கு.

பக்கத்தில் நின்றவர்களைப் பார்த்து 'நீங்கள் ஏன் இன்னும் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?' என்று கடூரமாகப் பேசினான்.

இதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த அதிகாயன் (ராவணன், தான்யமாலினி என்ற மனைவியால் பெற்ற மகன் அதிகாயன்) சினங் கொண்டவனாய், "நான் போய் அந்த ராமன் தம்பி லக்ஷ்மணனைக் கொன்று வருகிறேன். சேனைகளோடு போகவும் தயார். தனியே போகவும் தயார், விடை கொடுங்கள் எனக்கு" என்று ஆவேசத்தோடு பேசினான்.

அதன் மேல் ராவணனுக்கு உத்ஸாகம் உண்டாகி விட்டது. பல்லாயிரக் கணக்கான சேனைகளையும் சேனைத் தலைவர்களையும் அதிகாயனுடன் போகும்படி கட்டளை யிட்டான்.

அதிகாயன் வருவதைப் பார்த்தான் லக்ஷ்மணன்.

லக்ஷ்மணனும் தன்னுடைய வானர சேனைகளோடு தயாராக நின்றான்.

வானர சேனைகளும் அரக்க சேனைகளும் ஆங்காங்கு பல இடங்களில் எதிர்த்துப் போர் செய்தன. இவைகளுக்கு இடையே அதிகாயனும் லக்ஷ்மணனும் சந்தித்துக் கொண்டார்கள்.

பல வகைப்பட்ட அம்புகளை இருவரும் எய்தார்கள். நெடு நேரம் இருவரும் யுத்தம் செய்தார்கள். கடைசியில் லக்ஷ்மணனுடைய நீண்ட பெரும் பாணம் ஒன்று அதிகாயனது தலையைக் கொய்து விட்டது. அதிகாயன் காரியம் முடிந்தது.

ஆனாலும் வானர சேனையும், அரக்க சேனையும் முரண்டி ஒன்றையொன்று தாக்கிக் கொண்டிருந்தன.

ஒரு தனியான இடத்தில் அரக்க சேனைத் தலைவனான கும்பனுக்கும் வானர சேனைத் தலைவனான சுக்ரீவனுக்கும் ஒரு வீரப் போர் நடக்கிறது. அந்தக் காட்சியை நமக்குக் காட்டுகிறார் கவிஞர் கம்பர்.

சுக்ரீவனும் கும்பனும் வாள் கொண்டு ஒருவரை யொருவர் தாக்கினார்கள். இருவருக்கும் காயம் பட்டு உடம்பெல்லாம் இரத்தம் பெருக்கெடுத்து ஓடுகிறது. வாள்களும் முறிந்து சிதறிப் போய் விட்டன.

ஆங்காரம் விட்டபாடாக இல்லை. இரத்தத்தைத் துடைத்துக் கொண்டு இருவரும் சுற்றிச் சுற்றி வருகிறார்கள். இடை யிடையே ஒருவர்மேல் ஒருவர் மோதுகிறார்கள். கழுத்தில் அணிந்த மாலைகளும் காலில் அணிந்த கழல்களும் பேரொலி செய்கின்றன. அப்படிப் பாய்கிறார்கள்.

சந்தம்

தான தன
தன்னன தன்னன
தன் ன

கிடைத்தார், உட
லிற்கெழு சோரியை
வா ரித்
துடைத்தார், விழி
யில்தழல் மாரிசொ
ரிந் தார்,
உடைத்தா ரொடு
பைங்கழல் ஆர்ப்ப
உலா விப்
புடைத்தார், பொரு
கின்றன கோளரி
போல் வார்.

[கிடைத்தார் : போரில் தாக்குபவரான இருவரும்—சுக்ரீவனும் கும்பனும் ; உடலிற் கெழு சோரியை : புண் பட்ட உடலில் கொப்புளித்து வரும் இரத்தத்தை ; வாரித் துடைத்தார் : கைகளால் எடுத்துத் துடைத்துக் கொண்டார்கள் ; விழியில் தழல் மாரி சொரிந்தார் : கண்களில் இருந்து கோபக்கனல் தாரை தாரையாகப் பொழிந்தது போல் இருந்தது ; உடைத்தாரொடு பைங்கழல் ஆர்ப்ப : சிறப்பாக அணிந்த ரத்தின மாலைகளும் காலில்

உன்ன கழல்களும் மிருதியாகச் சப்திக்கும்படி; உலகைப் புடைத்தார்: அப்படியும் இப்படியு மாகப் பாய்ந்து பாய்ச்சல்காட்டி மோதி னூர்கள்; பொருகின்றன கோளரி போல்வார்: யுத்தம் செய்கிற ஆண் சிங்கங்கள் போன்ற சுக்ரீவனும் கும்பனும்.]

***

இவ்வாறு பாய்ச்சலும் பாவலாவும் நடந்த பிறகு ஒரு கதாயுதத்தை எடுத்து வீசிக் கொண்டு வந்தான் கும்பன்.

தண்டம் கையில்
 வீசிய தாக,
  அரக் கன்
அண்டங் கள்
 வெடிப்பன என்ன
  அடித் தான்,—
கண்டங் கது
 மாமர மேகொடு
  காத் தான்,
விண்டங் கது
 தீர்ந்தது; மன்னன்
  வெகுண் டான்.

[தண்டங்கையின் வீசியதாக: தண்டாயு தத்தைக் கையில் வீசிக்கொண்டு; அரக்கன்: கும்பன்; அண்டங்கள் வெடிப்பன என்ன அடித்தான்: வானமும் வானத்திலுள்ள கோளங்களும் உடைகின்றனவோ என்று சொல்லும்படி பூமியில் அடித்துக் கொண்டு சுக்ரீவனை நோக்கி வந்தான்; கண்டங்கு அது: அதைப் பார்த்து; மாமரமே கொடு காத்தான்: பக்கத்தில் நின்ற ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கித் தண்டாயுதத்தின் வேகத் தைத் தடுத்து விட்டான்—ஆனாலும்;

விண்டங்கது தீர்ந்தது: மரந்தானே, வைர மேறிய கதாயுதமா அது?—அல்ல. ஆகவே கையில் இருந்த மரம் தெரிபட்டுப் பொடிப் பொடியாய்ப் போய்விட்டது; மன்னன் வெகுண்டான்: சுக்ரீவனுக்குக் கோபமே வந்துவிட்டது — கையாலாகாது போனால் கோபம்தானே வரும்.]

***

கையில் இருந்த மரம் தகர்ந்து போகவும் என்ன செய்வான் சுக்ரீவன்? கோபம் வந்து விட்டது அவனுக்கு.

"சரி, இருக்கட்டும். இதோ தொலைத்து விடுகிறேன்" என்று சொல்லிக் கொண்டு, கைக் குத்துச் சண்டைக்காகப் பாயப் பார்த்தான் சுக்ரீவன்.

அந்த க்ஷணத்தில் தானே, நீலன் என்ற குரங்கு வீரன் ஓடிவந்து மிகப் பெரிய ஒரு தண்டாயுதத்தைச் சுக்ரீவன் கையில் கொடுத்துவிட்டான்.

பொன்றப் பொரு
 வேன் இனி என்று
  பொரு தான்,
ஒன்றப் புகு
 கின்றதோர் காலம்
  உணர்ந் தான்;—
நின்றப் பெரி
 யோன் நினை யாதமுன்
  நீ லன்
குன்றொப் பதோர்
 தண்டுகொ ணர்ந்து
  கொடுத் தான்.

[பொன்றப் பொருவேன் இனி என்று பொருதான்: இதோ அந்தக் கும்பனைச் சாகும் படி அடித்து விடுகிறேன் என்று கோபாவேசத் துக்கு உள்ளான சுக்ரீவன்; ஒன்றப் புகு கின்றதோர் காலம் உணர்ந்தான்: கும்பனோடு நெருங்கி மல் யுத்தத்துக்குத் தயாராகும் நேரத்தை உணர்ந்தான் (நீலன்); நின்றப் பெரியோன்: மேலே கண்ட மல்யுத்தத்துக்குத் தன்னைத் தயாரித்துக் கொண்டு நின்ற சுக்ரீ வன்; நினையாத முன்: யோசனை செய்வதற்கு முன்னேயே; நீலன்: நீலனாகிய குரங்கு; குன்று ஒப்பதோர் தண்டு கொணர்ந்து கொடுத்தான்: மலை போன்ற ஒரு தண்டா யுதத்தைக் கொண்டு வந்து சுக்ரீவன் கையில் கொடுத்தான். எதுகை நோக்கி 'நின்ற பெரியோன்' என்பது 'நின்றப் பெரி யோன்' என்று ஒலித்து நிற்கிறது.]

கும்பன் கையிலும் தண்டாயுதம், சுக்ரீவன் கையிலும் ஒரு தண்டாயுதம் இருக்கிறது. இரண்டு தண்டாயுதங் களும் செய்யப்போகும் வேலையை இனிப் பார்க்கலாம்.

---

## ஒரு திருத்தம்

ஜூலை 30உ இதழில் வெளியாகியுள்ள 'கம்பர் தரும் காட்சி'யில் 66-ம் பக்கத்தி லிருக்கும் இரண்டாம் பாடலில், நாலாவது அடியில்,

எம்பிபிரி யாளுகஅருளுதியால்
  வேண்டினேன் எம்பிரானே!

என்று இருப்பதை,

எம்பிபிரி யாளுக
  அருளுதியால் எம்பிரானே!

என்று திருத்தி வாசித்துக் கொள்ளவும்.

---

# தமக்கையின் பாசம்

**கமலபதி**

"ஊம், அக்காளாம் அக்காள்! இவள் என் அக்காளா? துரோகி! கூடப் பிறந்தவன் சோற்றுக்குத் திண்டாட வேண்டும், தான் சுகமாக இருக்க வேண்டும் என்ற துர் எண்ணக்காரி; இவள் நன்றாக இருப்பாளா......? நான் இல்லாத சமயத்தில் அப்பாவை ஏமாற்றித் தன் பேருக்குப் பதினாயிர ரூபாய் எழுதி வைக்கும்படி செய்து விட்டாளே! உலகத்திலேயே இதுமாதிரி எங்கேயாவது நடந்ததுண்டா? அவள்தான் எழுதிவைக்கச் சொன்னாள் என்றால் தாசில் பண்ணின இவருக்கு மூளை எங்கே போச்சு? எப்படி எழுதி வைக்கலாம்?........." என்று சத்தம் போட்டு ஆர்ப்பாட்டம் செய்ய ஆரம்பித்துவிட்டான் ராமரத்தினம்.

இவன் தடபுடலைக் கண்ட பெரியப்பா ஓடி வந்தார். "என்னடா ராமரத்தினம்! நீ எல்லாம் தெரிந்தவன் என்று பேரு. இப்படிப் பேசுகிறாயே? உன் தகப்பனார் உனக்கு ஒன்றும் வைக்காமல் பரதேசியாகவா விட்டு விட்டார்? உன் அத்திம்பேர் உன் அக்காளைத் தள்ளி வைத்திருக்கிறான். அவளை அழைத்துக் கொள்ள மாட்டேன் என்கிறான். பெண் வாழ வேண்டுமே என்கிற எண்ணம் உன் அப்பாவுக்கு. இந்தப் பணத்துக்காகவாவது அவளை அழைத்துக் கொள்ள மாட்டானா என்ற நப்பாசை தான் அவருக்கு. அவளுக்கு ஏதாவது வழி வேண்டாமா?" என்றார். ஆனால் ராமரத்தினம் இவைகளில் சமாதானம் அடையவில்லை.

சாதாரண நாளிலேயே அக்கா மங்களத்தைக் கண்டால் அவனுக்குப் பிடிக்காது. அதிலும் தன் தகப்பனார் பதினாயிரம் ரூபாய் அவள் பேரில் உயில் எழுதிவைத்து விட்டார் என்பதில் அவன் கோபத்தை அடக்க முடியாமலேயே இருந்தான். அப்பொழுது மட்டும் அவன் தகப்பனார் கணபதி அய்யர் உயிருடன் இருந்திருந்தால் நடக்கும் விதமே வேறு. புண்ணியவான் தப்பித்துக் கொண்டார்.

கணபதி அய்யர் உயில் எழுதி வைத்திருக்கிற விஷயம், யாருக்குமே தெரியாது. ஏன், மங்களத்திற்குக் கூடத் தெரியாது. எனினும் அவருடைய இந்தக் காரியத்தினால் ராமரத்தினத்துக்குத் தன் தமக்கையின் பேரில் தீராப் பகை ஏற்பட்டாலும், அவள் தன் கணவனுடன் வாழக் கூடிய பாக்கியம் நேர்ந்தது.

மேற்படி சம்பவங்கள் நடந்து வருஷம் இரண்டாகி விட்டன.

மங்களத்தின் கணவர் பட்டணத்தில் ஒரு கம்பெனியில் மானேஜர் உத்தியோகத்திலிருந்தார்.

அந்தச் சமயம் ராமரத்தினம் மாம்பலத்தில் ஒரு வீடு கட்டிக் கிரகப்பிரவேசம் செய்தான். பெரிய மனுஷர்கள், முக்கியமான உறவினர்கள் எல்லோருக்கும் அழைப்பு அனுப்பியிருந்தான். ஆனால் மங்களத்தை மட்டும் கூப்பிடவே இல்லை. தன்னைக் கூப்பிட வில்லையே என்று மங்களத்துக்கு மட்டும் வருத்தம்தான்.

அன்று காலை பத்து மணிக்கு மங்களத்தின் வீட்டுக்கு அவளுடைய அத்தங்காள் வந்திருந்தாள்.

"ஏண்டி! நீ இன்னும் போகவில்லையா? மணி பத்தாகப் போகிறதே!" என்றாள் அத்தங்காள்.

"என்னைத்தான் அவன் கூப்பிட வில்லையே! கூப்பிடாத வீட்டிற்கு நான் ஏன் போகிறேன்?" என்றாள் மங்களம்.

"நன்னா உன்னைக் கூப்பிடாமல் இருந்தானம்மா! அவன்தான் சும்மா இருந்தானென்றால் அவளுக்குத்தான் எங்கே போச்சு புத்தி? நீ மட்டும் வராமல் இருந்தால் நாலு பேர் ஏதாவது சொல்லுவார்கள். தம்பிக்கும் அக்காவுக்கும் ஏதோ மனஸ்தாபம் என்று தண்டோரா போட்டு விடுவார்கள். இருந்தாலும் நீயும் விட்டுக் கொடுக்கப் படாதுதான். அவனுக்குத் தான் தெரியவில்லையென்றால் அதற்காகப் பேசாமல் இருந்து விடுகிறதா? அடுத்

---

## அவர் பாராட்டு!



"அடாடா! இவ்வளவு பிரமாதமாக ஊதிப்பிட்டேனே!"

தாப்பலே அவள் யாருடா? உன் தம்பி தானே? அவள் வந்து உன்னை வீட்டுக்கு வான்னு கூப்பிட வேணுமா? அந்த வீட்டில் உனக்குப் பாத்தியமில்லையா?" என்றாள் மங்களத்தின் அத்தங்காள்.

"நீங்கள் போயிட்டு வாங்கோ அத்தங்கா, நான் வரவில்லை" என்றாள் மங்களம்.

"நன்னாச் சொன்னேடா! செய்யத் தெரியாதவர்களுக்குச் செய்துதான் காட்டணும்!" என்று பிடிவாதம் செய்து மங்களத்தைத் தன் காரிலேயே அழைத்துப் போய் விட்டாள்.

"வா, அத்தங்கா! வா, அத்தங்கா!" என்று ராமரத்தினம் அத்தங்காளை வரவேற்றான். ஆனால் கூட வந்த மங்களத்தைப் பார்த்தவுடன் அவன் முகம் சுருங்கியது. இருந்தாலும் மரியாதைக்காக "அக்கா வா! வா! நானே வந்து கூப்பிட வேண்டுமென்று இருந்தேன். ஒழியவில்லை" என்றான் ராமரத்தினம்.

அவன் தனியாயிருக்கும் சமயம் பார்த்து "நீ செய்தது ரொம்ப அழகாயிருக்கே! நீ அவளைக் கூப்பிடாமல் ஒதுக்கலாமா? அவள் யாருடா உன் கூடப் பிறந்தவள் தானே......?" என்றாள் அத்தங்காள்.

"எல்லாம் வேண்டுமென்றுதான் நான் அவளைக் கூப்பிடவில்லை. அவள் எனக்கு அக்காவா? பெரிய விரோதி!" என்றான் ராமரத்தினம்.

"ஏண்டா, அவள் மேல் உனக்குக் கோபம்? அவள் உன் கண்ணைக் தோண்டினாளா, என்ன? பாவம், அவள் பேரில் பதினாயிரம் ரூபாய் எழுதி வைத்தார் என்று அவளை ஏண்டா கரிக்கிறே? உனக்குத் தொண்ணூறாயிரம் ரூபாய் வைத்திருக்கிறாரே? அதை நீ தொலைக்காமல் சமத்தாக வைத்துக் கொண்டால் போதும். அவர் அவளுக்குப் பதினாயிரம் ரூபாய் வைக்காமல், ஆளுக்குப் பாதின்னு—பிரிச்சு ஐம்பதினாயிரம் ரூபாய் எழுதி வைத்திருந்தாரானால் நீ என்ன செய்வாயாம்? அவர் தன் கையால் சம்பாதிச்ச சொத்துதானே அவ்வளவும்?" என்றாள் அத்தங்காள்.

"என் அப்பாவே செய்கிறதுதானே? ஐம்பதினாயிரம் என்ன! முழுச் சொத்தையும் அவளுக்கே எழுதி வைத்திருக்கலாமே!"

"நீ ரொம்ப சமத்து தாண்டா" என்று சொல்லிக்கொண்டு கீழே இறங்கிப் போய்விட்டாள் அத்தங்காள். எல்லோரும் சாப்பிட்டு விட்டுப் போய்விட்டார்கள். ராமரத்தினம் மட்டும் இன்னும் சாப்பிடவில்லை.

"ஏண்டா ராம ரத்தினம், சாப்பிடவில்லை?" என்று அத்தங்காள் கேட்டாள்.

"மங்களம் இருக்கிறாளா, போய் விட்டாளா? அவள் இந்த வீட்டில் இருக்கிற வரைக்கும் நான் சாப்பிடப் போவதில்லை..." என்றான் ராமரத்தினம்.

அத்தங்காளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. இந்த வார்த்தைகள் மாடியிலிருந்த மங்களத்துக்குச் 'சுரீர்' என்றது. அவள் கண்களில் நீர் ததும்ப காலுகால் பாய்ச்சலில் கீழே வந்தாள். "ராமரத்தினம்! நீ எனக்காகச் சாப்பிடாமல் இருக்காதே, அப்பா! நான் இதோ போகிறேன்" என்று சொல்லிவிட்டு விர்ரென்று கிளம்பி விட்டாள். அவளுடன் அத்தங்காளும் கிளம்பினாள்.

"அத்தங்கா! நீ சாப்பிடாமல் போகிறாயே!" என்றான் ராமரத்தினம்.

"கூடப் பிறந்தவளுக்கே சாதம் இல்லைங்கற வீட்டில், எனக்கு என்னடா வேண்டியிருக்கு?" என்று சொல்லிவிட்டு மங்களத்தைக் காரில் ஏற்றிக் கொண்டு போய் விட்டாள்.

ராமரத்தினம் எம். ஏ., எம். எல். என்று போர்டு தொங்கிக் கொண்டிருந்த போதி



லும் அதனால் ஒரு தம்பிடி கூட வருமானம் கிடையாது. அவன் வக்கீலாக வந்து சம்பாதிக்கவில்லை என்றும் சொல்ல முடியாது. ஏதோ இதுவரை நூறு இருநூறு ரூபாய் சம்பாதித்திருக்கலாம்.

யாராவது கேஸ் கொண்டு வந்தாலும், அவன் கோர்ட்டில் போய் 'பிராக்டிஸ்' பண்ணி யிருக்கப் போகிறதில்லை. அவன் பெரிதும் சுகஜீவனமே விரும்பினான்.

'நமக்குத்தான் சொத்து இருக்கே. எதற்காக இந்தப் பசங்களிடம் பல்லைக் காட்டிச் சப்பைக் கட்டுக் கட்ட வேண்டும்' என்ற எண்ணம் வேறு. அதோடு கூட அவன் கொல்லு கொல்லென்று இரும ஆரம்பித்தான். டாக்டரைக் 'கன்சல்ட்' செய்தான். "ஆஸ்த்மா வரும்போலிருக்கு. சிரமப்பட்டு வேலை செய்ய வேண்டாம். சாதத்தை விட இரண்டு வேளையும் பழ ஆகாரம் வைத்துக் கொள்வதே மேல். தேவையானால் 'ஓட்ஸ்' சாப்பிடுங்கள். அடிக்கடி நீலகிரி போய் வாருங்கள்" என்று டாக்டர் சொல்லி விட்டார்.

கார்தான் இருக்கிறது. டிரைவர்தான் வீட்டோடு கிடக்கிறான். வீட்டில் பொழுது போகவில்லை என்று தினம் கோர்ட்டுக்குப் போய் வருவான். வரும்போது பத்து ரூபாய்க்குப் பழம் வாங்கிக்கொண்டு வருவான். அது ஒரே நாளில் தீர்ந்துவிடும்.



அவனுடைய போக்கும் ஒரு கிறுக்குப் போக்குத்தான். எல்லோரும் நீலகிரியிலிருந்து திரும்பும்சமயம் நீலகிரி போவான். போகும் சமயம் திரும்பி வருவான்!

ராமரத்தினம் ஒரு பங்கு செலவு செய்தால் அவன் மனைவி இரண்டு பங்குதான் செலவு செய்வாள். தான் வக்கீல் மனைவியாக இருந்தாலும், செலவிலும், நவீன நாகரிக கவுரவத்திலும் ஒரு ஹைகோர்ட் ஜட்ஜியின் மனைவிகூடத் தோற்றுவிட வேண்டும் என்னும்படி தான் நடந்து கொள்வாள்; செலவும் செய்வாள்.

★

நாட்களும் மாதங்களும் ஓடி வருஷங்கள் ஏழெட்டு ஆகிவிட்டன.

மங்களம் தன் பிள்ளையை மட்டும் அழைத்துக் கொண்டு மாயவரத்துக்கு ஒரு கல்யாணத்திற்காக வந்திருந்தாள். ஒரு நாள் காவேரிக்கு ஸ்நானம் செய்யப்போன போது தன் பழைய சிநேகிதி கோமளத்தைக் கண்டாள். இருவரும் வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். ஆனால் இடீரென்று பேச்சு வாக்கில் கோமளம் போட்ட ஒரு குண்டுதான் மங்களத்தைத் தூக்கி வாரிப் போட்டது. "உன் தம்பி, என்னடீ மங்களம், கடைசியில் இப்படிப் பண்ணி விட்டான்? என் ஆத்துக்காரர் நேற்றுதான் பட்டணத்தி லிருந்து வந்தார். அவனைப் பற்றி ஓரே கதை கதையாகச் சொன்னார்" என்றாள் கோமளம்.

"என்னடீ கோமளம்! நீ சொல்கிறது ஒன்றும் புரியவில்லையே! என் தம்பி என்ன பண்ணிவிட்டான்?" என்று பரபரப்புடன் மங்களம் கேட்டாள்.

"என்ன, நீ கூட இப்படிக் கேட்கிறே? உன் தம்பிக்குச் சொத்தெல்லாம் போய் விட்டதாமே. வீட்டைக் கூடக் கடன்காரர்கள் ஏலம் போட்டு விட்டார்களாம். அவனும் இன்ஸால்வென்டு கொடுத்து விட்டானாம். அகமுடையான், பெண்டாட்டி குழந்தைகள் எல்லாரும் ராமசாமிச் செட்டி சத்திரத்தில் தங்கியிருக்கிறார்களாம். குழந்தைகளெல்லாம் பசி பசின்னு துடிக்கறதுகளாம். அவரும் நேற்று முதல்நாள் தற்செயலாய்ச் சத்திரத்தில் கண்டாராம். அந்தக் கண்ணராவியை அவரால் பார்க்கச் சகிக்கவில்லையாம். அப்புறம் ஐந்து ரூபாயைக் கொடுத்து, செலவுக்கு வைத்து கொள்ளச் சொன்னாராம். முதலில் வாங்கிக் கொள்ளச் சங்கோசப்பட்டானாம். அவன் பத்துப் பேருக்

குப் பணம் கொடுத்துச் சாப்பிட்டது போக, இன்னொருவனிடம் பணம் வாங்கிச் சாப்பிடுவதென்றால் மனசு எப்படியிருக்கும்?'' என்றான் சோமனம்.

சோமனம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே மங்களத்தின் கண்களில் நீர் ததும்பி விட்டது. பிறகு அழுகையே வந்து விட்டது. ''நிஜமாகவா சோமனம்? நீ சொல்வதை என்னால் நம்பவே முடியவில்லையே! அவருக்கு உடம்பு சரியாயில்லை என்று மூன்று மாத லீவில் நாங்கள் சிதம்பரம் வந்திருக்கிறோம். அதனால் தான் எங்களுக்கு ஒரு விஷயமும் தெரியவில்லை'' என்றாள் மங்களம். அவளுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. தன் தம்பி சொத்தெல்லாம் தொலைத்து விட்டுச் சத்திரத்தில் தங்கும் காலம் வருமென்று அவளால் மனதால் கூட நினைக்க முடியவில்லை.

மறுகணம் அவளுக்கு இருப்புக் கொள்ளவில்லை. கல்யாண வீட்டில் ஏதோ சாக்குச் சொல்லிவிட்டுச் சிதம்பரத்துக்குக் கிளம்பி விட்டாள்.

கணவனிடம் தன் தம்பியின் சங்கதிகள் முழுவதையும் சொன்னாள்.

''அவன் எக்கேடு கெட்டால் என்ன? சொத்து இருந்த நாளில் உன்னைக் கண்டால் அவனுக்கு வேப்பங்காயாக இருந்தது. இவளைப் போல் ஆயிரம் அக்காவைக் கடையிலே வாங்கலாம் என்று சொன்ன பேர்வழி தானே அவன்?'' என்றார்.

''அவனுக்குத் தெரியவில்லை. அதற்காக நாம் விட்டுக் கொடுத்து விடுவதா? தன் சொந்தத் தம்பியை இப்படிச் சந்தியில் விட்டு விட்டாளே என்று நாளைக்கு நம்மைத் தானே ஏசுவார்கள்? நம்மைத் தவிர அவனுக்கும் மனுஷாள் யார்?''

''அதென்னமோ எனக்கு ஒன்றும் தெரியாது. இனி அக்கா பாடு, தம்பி பாடு. எப்படியாவது போங்கோ. என்னை ஒன்றும் கேட்க வேண்டாம். உனக்கு எப்படி இஷ்டமோ அப்படியே செய்'' என்று கூறிவிட்டார் மங்களத்தின் கணவர்.

★

''ராமரத்தினம்! நீ இது மாதிரி செய்யலாமா? எனக்கு ஒரு வார்த்தை சொல்லி அனுப்பியிருக்கக் கூடாதா?'' என்று கேட்டாள் மங்களம்.

தான் இருக்கும் நிலைமையைப் பார்த்துத் தன்னைப் பரிகசிக்க வந்திருக்கிறாளாக்கும் என்று ராமரத்தினம் நினைத்தான்.

''ராமரத்தினம்! சொத்துப் போய் விட்டதே என்று கவலைப்படாதே! பணக்காரன் ஏழையாகிறதும், ஏழை பணக்காரனாகிறதும் சகஜம். ஏதோ போதாத காலம் சொத்துப் போய்விட்டது அதற்காக நீ 'இன்லால்வெண்டு' கொடுக்கலாமா? என்னைக் கேட்டிருந்தால் கூட ஆயிரம் இரண்டாயிரம் கொடுத்திருப்பேனே. அப்பா எழுதி வைத்த பணம் கிரமமாக உன்னைச் சேரவேண்டியது தானே. நீ என்னை ஒரு வார்த்தை கேட்கக் கூடாதா? அவமானத்தின் சிகரத்தை அடைய வேண்டும் என்று சத்திரத்தில் வேறு தங்க வேண்டுமா?—சரி, இனி இங்கே ஒரு நிமிஷம் கூட இருக்கக் கூடாது. வீட்டுக்குப் போகலாம் வா'' என்று கூப்பிட்டாள் மங்களம்.

அக்கா தன் வீட்டை விட்டுப் போனால் தான் சாப்பிடுவேன் என்று சொன்ன அவனை—அதே அக்கா தன்னையும் தன் குடும்பத்தையும் அழைக்கிறாள் என்பது அவன் மனதைத் துளைத்தது. ''அக்கா! ஏதோ தெரியாமல் உன் மனதை நோகச் செய்து விட்டேன். உன்னைக் கண்டபடி பேசிவிட்டேன். என்னை மன்னிக்க வேண்டும்'' என்றான் ராமரத்தினம்.

''என்ன சொன்னே! உன்னை மன்னிக்க வேண்டுமா? நீ யார், நான் யார்? கூடப் பிறந்தவர்கள். நீ எது சொன்னாலும் நான் கேட்கப் பாத்தியமுள்ளவள் தானே? அசடே! நான் சொல்லுகிறேன் கேள், எழுந்திரு. வீட்டுக்குக் கிளம்பு. எங்கள் வீட்டில் இருக்கலாமா கூடாதா என்கிற யோசனையே வேண்டாம். தம்பி வீட்டில் அக்கா குடும்பம் இருக்கிறதும், அக்கா வீட்டில் தம்பி குடும்பம் இருக்கிறதும்



மோட்டார்காரர்:— கொஞ்சம் தள்ளிப் போங்கள் ஐயா, மீசை காரில் இடிக்கப் போகிறது!

வழக்கமில்லையா? ஊம், கிளம்பு, நாழி கையாகிறது" என்றான்.

"அக்கா! நீ கூப்பிட்ட வரையில் சந்தோஷம். எல்லாம் அவரவர்கள் தலை விதிப்படி நடக்கிறது. நான் சத்திரத்தில் திண்டாடுகிறேன் என்று கவலைப் படாதே. நீ திரும்பிப் போ" என்றான் ராமரத்தினம்.

"நான் திரும்பிப் போய் பாயசம் வைத்துச் சாப்பிடச் சொல்லுகிறாயா? ரொம்ப நல்லது. எல்லோரும் போய், நாம் இரண்டு பேரும் அக்காவும் தம்பியும் சேர்ந்ததற்காகப் பாயசம் வைத்துச் சாப்பிடுவோம்" என்று கூறிக் கொண்டே குழந்தைகளைத் தூக்கிக் கொண்டுபோய் டாக்ஸியில் உட்காரவைத்தாள். "ஏறுடி! நாத்தனார் சொன்னால் நீ கேட்கமாட்டியா?" என்று ஒரு போடு போட்டாள்.

அனாதைகளைப் போல் சத்திரத்தில் தங்கிக் கிடப்பது ராமரத்தினத்தின் மனைவிக்குப் பிடிக்கவில்லை. தயங்கிக் கொண்டே காரில் ஏறிக்கொண்டாள். ஆனால் அவன் மட்டும் ஏறவில்லை.

"சரி, நீ வராவிட்டால் நானும் இங்கேயே இருந்துவிடுகிறேன்" என்றாள் மங்களம். இதற்குள் "நேரமாச்சுங்க" என்று வாடகை மோட்டார்க்காரன் சத்தம் போடவே, கடைசியில் ராமரத்தினமும் ஏறிக் கொண்டான். அவன் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருகியது.

★

அன்று மாலை மங்களம் தன் பிள்ளையிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தாள். "இதை உடனே போஸ்ட் பண்ணிவிட்டு வா" என்றாள்.

"அம்மா! நாழிகையாயிடுத்தே, கட்டு எடுத்திருப்பானே" என்றான்.

"பரவாயில்லை, 'லேட் பீ' ஒட்டியாவது கட்டில் சேர்த்துவிடு. கட்டாயம் இன்றைய தபாலில் போய்ச் சேர வேண்டும்" என்றாள் மங்களம்.

"அப்படி என்ன அவசரமான காரியம் 'லேட் பீ' ஒட்டி அனுப்பும்படிக்கு?" என்று கேட்டான் ராமரத்தினம்.

"அவருக்குத்தான் கடிதம் எழுதியிருக்கேன், உடனே புறப்பட்டு வரும்படிக்கு. இங்கே ஒரு கம்பெனியில் ஒரு அஸிஸ்டெண்ட் மானேஜர் வேலை காலியிருக்காம். அவர் வந்து முயற்சி பண்ணினால் அந்த வேலை உனக்கு நிச்சயம் கிடைக்கும். இஷ்டமானால் அந்த வேலையை ஒப்புக் கொள்ளலாம். சம்பளமும் நல்ல சம்பளம்......" என்றாள் மங்களம்.

அவன் கண்களில் ஆனந்தக் கண்ணீர் தாரை தாரையாகப் பெருகியது!














## ஜெயமணி

மலேயா (தொடர்ச்சி)

மலாய் நாட்டின் செழுமைக்கும் செல்வப் பெருக்கிற்கும் ரப்பர் உற்பத்திதான் காரணம். எனவே இச் சந்தர்ப்பத்தில் ரப்பரின் ஆதி வரலாற்றைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறுவது பொருந்தும்.

கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடித்தார் என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் உலகம் முழுதும் வியாபித்திருக்கும், யந்திரங்களின் வாழ்க்கையிலும் மனிதரின் வாழ்க்கையிலும் இன்றியமையாத ஸ்தானத்தை வகித்து வரும் ரப்பரைக் கண்டு பிடித்தவரும் அதே கிறிஸ்டோபர் கொலம்பஸ்தான் என்பது எவ்வளவு பேருக்குத் தெரியும்?

உலகப் பிரசித்தி பெற்ற கொலம்பஸ் நானூற்றைம்பது வருஷங்களுக்கு முன் மேற்கு இந்தியத் தீவுகளில் ஒன்றான ஹெய்டித் தீவைக் கண்டுபிடித்த போது கடற்கரையில் சில குழந்தைகள் கருப்புப் பந்துகளை வைத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். அந்தப் பந்துகள் ஒரு மரத்தின் பாலிலிருந்து தயாரிக்கப்பட்டன என்பது கொலம்பஸுக்குத் தெரிய வந்தது. எனவே அவர் அந்தப் பாலில் மாதிரிக்காகக் கொஞ்சம் ஐரோப்பாவுக்கு எடுத்து வந்தார். உறைந்த மேற்படி பால் இழுத்தால் நீளுவதையும் விட்டு விட்டால் முன்பு இருந்தது போல் சுருங்கி விடுவதையும் கண்டு ஜனங்கள் அதிசயித்தனர். ஆனால் அதன் பிரயோஜனம் என்ன என்பதை அப்போது யாரும் அறிந்து கொள்ளவில்லை. அதிலிருந்து மூந்நூறு வருஷங்களுக்குப் பிறகுதான் ரப்பரின் அபூர்வமான பிரயோஜனம் கண்டு பிடிக்கப்பட்டது.

1770-ம் வருஷம் ஜோசப் ப்ரீஸ்ட்லி என்ற ரசாயன நிபுணர் உறைந்த அந்தப் பாலைக்கொண்டு பென்ஸில் எழுத்துக்களை அழித்து விடலாம் என்பதைக் கண்டு பிடித்தார். ஆங்கிலத்தில் 'ரப்' (rub) என்ற வார்த்தைக்குத் தேய், அழி என்று அர்த்தம். அதன் காரணமாகவே மேற்படி பாலுக்கும் ரப்பர் என்ற பெயர் வழங்கலாயிற்று.

அவ்வாறு ஆரம்பத்தில் அற்ப பலனைக் கொடுத்த ரப்பர் இன்று உலகம் முழுதும் வியாபித்து விற்கிறது. ரப்பர் இராவிட்டால் மனித வாழ்க்கையே ஸ்தம்பித்து விடும் என்று தோன்றுகிறது. இன்றைய நவீன உலகில் ரப்பரின் மகத்தான சக்தியை அளவிட்டுக் கூற முடியுமா?

சிருஷ்டியில் எல்லாவற்றையும் நனைக்கும் சக்தியுள்ள தண்ணீர் ரப்பரிடம் தன் சக்தியை இழந்து விடுகிறது. ஆக்கவும் அழிக்கவும் வல்ல மின்சார சக்தியினால் ரப்பரை எதுவும் செய்ய முடிவதில்லை. ரப்பர் இராவிட்டால் இயந்திரங்கள் இயங்க முடியுமா? மோட்டார்கள் ஓட முடியுமா? டாக்டர்கள் வைத்தியம் செய்ய முடியுமா? குழந்தைகள்தான் பால் புட்டியிலிருந்து பாலைக் குடிக்க முடியுமா? இவற்றைத் தவிர அது இன்னும் ஆயிரம் பதினாயிரம் விதத்தில் மானிட வர்க்கத்துக்குப் பிரயோஜனகரமாக இருக்கிறது. இவ்வாறாக யந்திரங்களின் வாழ்க்கைக்கும் மனிதரின் வாழ்க்கைக்கும் ரப்பர் இன்றியமையாத சாதனம் ஆகிவிட்டது!

★

ரப்பர் உற்பத்தி செய்வதற்காகக் கிழக்கு ஆசியா நாடுகளில் மாத்திரம் இதுவரையில் ஒரு கோடி ஏக்கர்களுக்கு மேற்பட்ட காடுகளை அழித்து ரப்பர் தோட்டங்கள் போட்டிருக்கிறார்கள். மேற்படி ரப்பர் தோட்டங்களில் மொத்தம் ஐம்பது லட்சம் தொழிலாளர்களுக்கு மேல் வேலை செய்து ஜீவனத்தை நடத்துகிறார்கள். ரப்பரைக் கொண்டு அமெரிக்கா வருஷத்தில் ஐம்பது கோடி டாலர் பெறுமான முள்ள ரப்பர் டயர்களை உற்பத்தி செய்கிறது என்றால் ரப்பரிலிருந்து உற்பத்தியாகும் மற்றச் சாதனங்களின் பெறு

மானம் எத்தனை கோடி இருக்குமோ! உலகம் முழுவதற்கும் வேண்டிய ரப்பர் சாதனங்களில் நாலில் மூன்று மடங்கு அமெரிக்கா தேசத்தில் உற்பத்தியாகிறது என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

ரப்பரிலிருந்து செய்யப்படும் சாதனங்கள் அமெரிக்காவில் அபரிமிதமாக உற்பத்தியாகிறது என்றாலும் இயற்கை ரப்பருக்கு அது வெளிநாடுகளையே எதிர்பார்க்கவேண்டியிருக்கிறது. அதனால் அங்கு பல ஆண்டுகளுக்கு முன் செயற்கை ரப்பர் உற்பத்தி முறையைக் கண்டு பிடித்தனர். எனவே இப்போது அமெரிக்காவில் ஏராளமாகச் செயற்கை ரப்பர் உற்பத்தியாகி வருகிறது. இயற்கை ரப்பரால் எந்தெந்தச் சாதனங்களைச் செய்ய முடியுமோ அதையெல்லாம் அமெரிக்கர்கள் செயற்கை ரப்பரால் செய்யும் வல்லமை பெற்று விளங்குகிறார்கள்.

எனினும் அமெரிக்காவில் உள்ள ராக்ஷத யந்திரங்களுக்கு வெளி நாடுகளிலிருந்தும் ஏராளமாக ரப்பர் இறக்குமதி செய்ய வேண்டியிருக்கிறது. மேற்படி யந்திரங்களுக்குத் தேவையான ரப்பரை சப்ளை செய்யும் சக்தி மலேயாவைத் தவிர வேறு எந்த நாட்டுக்கும் இல்லை. பிரிட்டிஷார் தங்களுடைய டாலர் செல்வத்தைப் பெருக்கிக் கொள்ள மலாய் நாட்டின் உதவியை எதிர்பார்க்கிறார்கள் எனில், பிரிட்டிஷாரின் பொருளாதார சுபிட்சத்துக்கு அந்த நாடு எவ்வளவு அத்தியாவசியமாக இருக்கிறது என்பதை யாவரும் ஊகித்துக் கொள்ளலாம்.

மலாய் நாட்டின் செல்வச் செழுமைக்கு முக்கிய காரணமாக இருக்கும் லட்சக் கணக்கான ஏக்கர் விஸ்தீரணமுள்ள ரப்பர் தோட்டங்களிலும் ஈயச் சுரங்கங்களிலும் பெரும்பாலானவை பிரிட்டிஷாருக்குச் சொந்தமாக இருக்கின்றன.

சிங்கப்பூரிலுள்ள நந்தவனத்தில் 1876-ம் வருஷம் முதன் முதலாக இங்கிலாந்திலிருந்து சில ரப்பர் செடிகளைக் காட்சிக்காகக் கொண்டு வந்து வைத்தார்கள். அதற்கு முன் மலேயாவில் ஒரு ரப்பர் மரம் கூட இல்லை. சென்ற எழுபத்து நாலு ஆண்டுகளுக்குள் மலேயாவில் ரப்பர் உற்பத்தி இவ்வளவு தூரம் முன்னேற்றம் அடைந்து விட்டது. அது மாத்திரமா? உலகத்திலே ரப்பர் உற்பத்தியில் மலேயாதான் முதல் ஸ்தானம் வகிக்கிறது. வருஷா வருஷம் அந்த நாட்டிலிருந்து ஐந்து லட்சம் டன் ரப்பர் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகிறது.

உலகம் முழுவதற்கும் தேவையான ரப்பரில் ஐந்தில் நாலு மடங்கு சிங்கப்பூரிலிருந்து கப்பல்களில் ஏற்றுமதியாகிறது.

மலாய் நாட்டில் ரப்பர் எழுபது வருஷ காலத்துக்குள் இவ்வளவு அபிவிருத்தியடைந்ததற்குக் காரணம் என்ன? ரப்பர் உற்பத்தியில் அந்த நாடு அக்ரஸ்தானம் வகிப்பதன் மர்மம் என்ன?

அநேகமாக வருஷம் முந்நூற்று அறுபது நாளும் மழை பெய்து பூமி எப்போதும் ஈரமாக இருக்க வேண்டும். பனி அதிகமாகப் பெய்யும் மிகக் குளிர்ந்த பூமியாகவும் இருக்கக் கூடாது. போதிய வெய்யிலும் இருக்க வேண்டும். சீதோஷ்ண நிலை எழுபது டிகிரிக்குக் குறையக் கூடாது; தொண்ணூறு டிகிரிக்கு மேலே போகக் கூடாது. காற்று அதிகமாக அடிக்கக் கூடாது. ரப்பர் மரங்கள் செழுமையாக வளருவதற்கு மேலே குறிப்பிட்ட அத்தனை லட்சணங்களும் இருக்க வேண்டும். மலாய்நாடு அத்தனை லட்சணங்களும் வாய்ந்ததாக இருப்பதால்தான் ரப்பர் உற்பத்தியில் அது உலகத்திலேயே முதல் ஸ்தானத்தை அடைந்திருக்கிறது!

மலாய் நாட்டுக்கு உயிர் நாடியாக ரப்பர் மரங்கள் இருப்பதால் அவைகளைப் பராமரிக்கவும் அபிவிருத்திசெய்யவும் பிரிட்டிஷார் ஏராளமான தொகை செலவு செய்கிறார்கள். அதற்காக மலேயாவில் ரப்பர் ஆராய்ச்சி நிலையம் ஒன்று இருக்கிறது.

ரப்பர் செடிகளுக்கு நோய் நொடிகள் வராமல் தடுப்பதற்காக மருந்துகள் தயாரிக்கப் படுகின்றன. குழந்தைகளை வளர்ப்பது போல மேற்படி செடிகளை வளர்த்து வருகிறார்கள்!


கொலம்பஸ்

ரப்பர் உற்பத்தியைப் போல ஈய உற்பத்தியிலும் மலேயாதான் உலகத்திலேயே முதல் ஸ்தானம் வகிக்கிறது. அங்குள்ள சுரங்கங்களில் வருஷா வருஷம் சுமார் எழுபதாயிரம் டன்களுக்கு மேல் ஈயம் உற்பத்தியாகிறது.

ரப்பர் தோட்டங்களில் வேலை செய்யும் பெரும்பாலான தொழிலாளர்களும் தமிழர்கள்தான். ஆனால், ஈயச் சுரங்கங்களில் வேலை செய்வோர் பெரும்பாலும் சீனத் தொழிலாளர்கள் ஆவர்.



மலாய் நாட்டிலுள்ள விசித்திர மிருகம்

மிகப் பெரிய ரப்பர் தொழிற்சாலை சிங்கப்பூரில் இருக்கிறது. சில தினங்களுக்கு முன் அந்தத் தொழிற் சாலைக்குக் கம்யூனிஸ்டுகள் தீ வைத்ததால் ஐந்து லட்சம் பவுன் நஷ்டம் ஏற்பட்டது என்றும் பத்தாயிரம் டன் ரப்பர் சாம்பலாயிற்று என்றும் பத்திரிகைச் செய்தி கூறியதை வாசகர்கள் கவனித்திருக்கலாம்.

சிங்கப்பூரிலுள்ள சயம் ;கூருக்கும் கம்பெனி உலகிலேயே பெரியதாகும்.

★

இந்தியாவில் மழை பெய்து தண்ணீருக்குப் பஞ்சமோ வேளாண்மைக்கு ஆபத்தோ ஏற்படாமல் தடுப்பதற்காகக் காடுகளை வளர்க்க வேண்டும் என்று பிரசாரம் செய்து வருகிறார்கள். அதற்காகச் சில தினங்களுக்கு முன் வன மகோற்சவமும் கொண்டாடினார்கள். கண்டபடி காடுகளை அழிப்பது ஆபத்தாக முடியும் என்றும் எச்சரிக்கை செய்து வருகிறார்கள்.

எந்த நாடாயினும் மழை பெய்து சுபிட்சமாக இருக்க வேண்டுமானால் அந்த நாட்டின் மொத்த விஸ்தீரணத்தில் கால் பாகமாவது காடுகளாக இருக்க வேண்டும் என்று கூறப்படுகிறது.

ஆனால் மலாய்நாடு சம்பந்தப்பட்ட வரையில் அத்தகைய கவலை எதுவும் ஏற்பட ஹேதுவில்லை. ஏனெனில் மலாய் நாட்டின் மொத்த விஸ்தீர்ணத்தில் முக்கால் பாகம் காடுகள்தான். ரப்பர் தோட்டங்களுக்காக ஆயிரக் கணக்கான சதுர மைல்கள் காடுகளை அழித்து விட்டார்கள். அப்படி யிருந்தும் அந்த நாட்டின் மொத்த விஸ்தீரணத்தில் எழுபத்தைந்து சதவிகிதம் காடுகளாக இருக்கின்றன. அதனாலேயே அந்த நாட்டில் வருஷாவருஷம் நூறிலிருந்து இருநூற்றைம்பது அங்குலம் வரையில் மழை பெய்யும் பிரதேசங்கள் இருக்கின்றன. அநேகமாக எப்போதும் மழை பெய்வதால் மலாய் நாட்டில் கோடை காலம், உஷ்ணக் காற்று என்ற பேச்சுக்கே இடமில்லை.

அங்கு மனிதர் யாரும் செல்ல முடியாத அடர்ந்த காடுகள் அதிகமாக இருப்பதால் வித விதமான காட்டு மிருகங்களுக்கும், கொடிய ஜந்துக்களுக்கும் குறைவில்லை. அவைகளில் புலி, முதலை, ஸர்ப்பம், மலைப் பாம்பு முதலியவற்றை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். மேற்படி ஜந்துக்கள் அந்த நாட்டில் மிகவும் அதிகம். தண்ணீர் தேங்கி நிற்கும் சிறிய கால்வாய்களில் கூட முதலைகள் கிடப்பது உண்டு. இருபது முப்பது அடி நீளம் வளர்ந்துள்ள ஸர்ப்பங்களையும் நாற்பது ஐம்பது அடி நீளம் உள்ள மலைப்பாம்புகளையும் அங்கு காணலாம். மலாய் நாட்டில் புலிகளைக் காட்டிலும் முதலைகளினால்தான் ஜனங்களிடையே அதிக உயிர்ச்சேதம் ஏற்படுகிறது என்று கணக்கெடுத்திருக்கிறார்கள். சிற்சில சமயங்களில் இரை தேடுவதற்காக முதலைகள் தண்ணீரை விட்டு விட்டுக் கரையேறிப் பல மைல்கள் தூரம் வருவது உண்டு! இருபது அடிக்கு மேல் நீளம் உள்ள பிரம்மாண்டமான உடும்புகளும் அங்கு வாழ்கின்றன.

படத்தில் காணும் டேபர் என்ற மிருகம் மலாய் நாட்டில் உள்ள விசித்திரமான மிருகம். உருவத்தில் பன்றிபோல் இருப்பினும் அது பன்றி அல்ல. இலை தழைகளையும் பழங்களையும் தவிர அது வேறு எதையும் தின்பதில்லை.

டூரியான், மங்குஸ்தீன், ரம்பூத்தான் முதலியவை மலாய் நாட்டில் பிரத்தியேகமாக உற்பத்தியாகும் அற்புதமான ருசியுள்ள பழவர்க்கங்கள் ஆகும்.




போட்டோ எடுப்பவர்: என்ன ஸார்! நீங்கள் தனியாகப்போய் உட்கார்ந்து விட்டீர்கள்? நெருங்கி உட்காருங்கள்!

போட்டோவுக்கு உட்கார்ந்திருப்பவர்: பரவாயில்லை! எடுங்கள் இப்படியே. இது பிரிவு உபசாரப் பார்ட்டிதானே!

# புதிய
# ரெக்ஸோனா சோப்!

★ புதிய குறைந்த விலை
★ புதிய சிறந்த வடிவம்
★ மலர்ச்சிதரும் பரிமளம்






ரெக்ஸோனாவிலுள்ள கேடில் சருமத்தை சுத்தம் செய்து மழமழப்பாக்குவதுடன் அழகுபடுத்துகிறது.

**கேடில் கலந்த சோப் ரெக்ஸோனா ஒன்றே**

R.P. 63-172 TM

# 1½ அணா

# நோய், ஜலதோஷம்

## ஆகியவற்றை குணமாக்குகிறது




பிரதி தினமும் தொல்லை கொடுக்கும் ஜுரம், குளிர், நோய், நொடி ஆகியவற்றிலிருந்து எல்லோருக்கும் விடுதலை. கோடிக் கணக்கான மக்களுக்கு 'ஆஸ்ப்ரோ' என்பதின் அர்த்தம் இதுதான்— 'ஆஸ்ப்ரோ' உங்களுக்கும் உதவட்டும். அது உங்களுக்கு ஆரோக்யம் அளிக்கட்டும். அது உங்களைப் பாதுகாக்கட்டும். உங்களுக்கு அருகாமையிலுள்ள மருந்து வியாபாரியிடம் நீங்கள் 'ஆஸ்ப்ரோ'வைப் பெறலாம். 3 மாத்திரைகள் 1½ அணாதான். அல்லது 30 மாத்திரைகள் கொண்ட பெரிய பாக்கெட் அணா 15. தலைவலி, நரம்பு வலி, ஜலதோஷம் ஏதாவது வந்தால் இரண்டு 'ஆஸ்ப்ரோ' மாத்திரைகள் சாப்பிடுங்கள். சிறிது நேரத்திற்குள் வலி குறைந்து போகும்; ஜலதோஷம் மறையும்; நீங்கள் மறுபடியும் சுகமாக இருப்பீர்கள். நீங்கள் கஷ்டப்பட வேண்டியதேயில்லை. ஏனெனில் 'ஆஸ்ப்ரோ' உங்களை கைவிடாது.

# 'ஆஸ்ப்ரோ'

## உங்களை கைவிடாது

'ஆஸ்ப்ரோ' அபாயமற்றது. குழந்தை கூட சாப்பிடலாம்.



கீழ்க்கண்ட நோய்களுக்கு உபயோகிக்கவும்:— தலைவலி, ஜலதோஷம், நரம்பு நோய், தொண்டைப்புண், வாதநோய், பல்வலி, தூக்கமின்மை, சூரிய வெப்பத்தால் ஏற்படும் கோளாறுகள்.

**குடும்ப சைஸ்**
**30 மாத்திரை அணா 15**




ஒவ்வொரு 'ஆஸ்ப்ரோ' மாத்திரையும் சுகாதார முறையில் காற்றுப் புகவிடாமல் அடைத்து சீல் வைக்கப்பட்டுள்ளது. இதனால் அது எப்போதும் சுத்தமாகவும் புத்தம் புதிதாகவும் வைக்கப்பட்டுள்ளது.

தயாரிப்பாளர்கள்: ஜே. எல். மாரிஸன் ஸன் & ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட், 9/10, ... போ. பெ. 1370 (போன்: 4460) ... & பிராஞ்சுகள்.

**விரைவில் குணம் • அபாயமின்மை • பலனளிக்கும் தன்மை.**

114TM

# உபாதை மிகுதியான நாட்கள்.....



தலைவலி, சோர்வு, நரம்புப் புடைப்பு ஆகியவை தொடர்ந்து வரும் நாட்களில் உடனே இவைகளினின்றும் விடுதலை யளிக்கும் இரண்டு "அனஸின்" மாத்திரைகளை மறந்து விடாதீர்கள். "அனஸின்" உட்கொண்ட வுடனேயே கரைந்து அதிலுள்ள மருந்து சத்துக்கள் உங்களது உடல் பூராவும் பரவி நரம்புப் பிடிப்பு, வேதனை, அருவருப்பு இவைகளை யகற்றி சுகமான உணர்ச்சியை அளிக்கின்றது. பெனஸிடின், காப்பெய்ன் கொய்னா, அஸிடைல் ஸலிஸிலிக் திராவகம் ஆகிய ரசாயனச் சேர்க்கைகளின் சாஸ்திரீயத் தயாரிப்பாலேயேதான் "அனஸின்" ஓர் அற்புத சஞ்சீவியாகத் திகழ்கின்றது. அவசியமேற்படும் சமயம் "அனஸின்" மாத்திரைகளை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். இந்த அபூர்வ மாத்திரைகளுக்கு முன் எவ்வித வலியும் நீடித்து நிற்காது.

**வலியினின்றும் விடுதலை யளிக்க "அனஸின்" ஒருபோதும் தவறியது இல்லை.**

**மாத்திரைகள் 14 கொண்ட குழாய்களிலும், 50 கொண்ட புட்டிகளிலும் முதல் சிகிச்சைக்கு வேண்டிய 2 கொண்ட பொட்டலங்களிலும் எங்கும் கிடைக்கும்**

## உறுதியுடன் பயமின்றி உட்கொள்ளுங்கள்

# ANACIN

TRADE MARK REGISTERED

**TABLETS**

## அனஸின்




**இந்தியாவில் தயாரிப்பவர்கள்: ஜியோப்ரே மானர்ஸ் & கோ., லிட்., பம்பாய், கல்கத்தா, சென்னை, டெல்லி**
**தயாரிக்க உரிமை அளித்தவர்கள்: ஒயிட்ஹால் பார்மகல் கம்பேனி, நியூ யார்க், யு. எஸ். ஏ.**



எக்ஸிமா

சரும வியாதிகளுக்கு, முக்கியமாக எக்ஸிமாவுக்கு ஸைமாக்ஸ் மிகவும் சிறந்தது. சருமத்தின்மேல் ஏற்படும் எரிச்சலை மாயமாய்ப் போக்குகிறது. சருமத்தை இயற்கை நிறத்துக்கும் தன்மைக்கும் கொண்டு வருகிறது. என்றும் ஒரு பாட்டில் உங்கள் வசம் இருக்கட்டும்




**ZIMAX**
AN ECZEMA CURE



தந்த சுகாதாரம்

சொத்தையான பற்கள் சீரான தேக ஆரோக்கியத்தைப் பாதிக்கின்றன. தைமோஸினால் பற்களையும் ஈறுகளையும் பாதுகாருங்கள். பயோரியா சிந்திவிடும் நோய்களையும் சுவாசத்தில் துர்நாற்றத்தையும் தவிர்க்கிறது. உங்கள் குடும்பத்துக்கு மிக அவசியமானது தைமோஸின்



**THYMOCIN**
FOR DENTAL HYGEINE

டி. எம். தாகூர், & கோ., 9, ஸ்டிரிங்கர்ஸ் தெரு, ஜீ. டி., மதராஸ்

---

# போனோமிண்ட்

## பேதியாகும் சூயிங்கம்




இவ்வியமான பப்ர்மிண்ட் மிட்டாய் போல் சுவையுள்ளது. அதிலுள்ள மருந்து சத்துக்கள் உமிழ்நீரோடு கலந்து உதர கோசங்களில் சேர்கின்றன. இது மலபோக்கை செம்மையாக எளிதில் சரிப்படுத்துகிறது.

**போனோமிண்ட் பேதியாகும் சூயிங்கம்**

ஏஜண்டுகள்: ஸ்ரீ ஓரியண்டல் மெர்க்கண்டைல் ஏஜன்ஸி, 99-ஏ, அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்-

# தினம் காலையில் எண்ணெய் தேய்த்துக் குளிப்பதைப் போன்ற

# சுகத்தை பூர்த்தியாக அனுபவியுங்கள்!




எண்ணெய் தேய்த்து குளித்தான பிறகு உங்களுக்கு சுகமாகவும் குளுமையாகவும் தெம்பாகவும் இருப்பதன் காரணம், அது சருமத்தினுள் புகுந்து வேலை செய்து ஓர் இன்புணர்ச்சியூட்டுகிறது. கேரளா டாய்லட் ஸோப்புகளும் அத்தகைய பயனளிக்கின்றன. அவைகள் சுத்தமானவை; கேவலம் எடை பருமன் நிரப்ப வேண்டி மாற்றுப்பொருள்கள் யாதொன்றும் அவைகளில் சேர்க்கப்படுகிறதில்லை. இந்த ஸோப்புகளின் செழிப்பான நுரையை தணுத்த ஜலத்திலும் கூட எளிதில் கழுவலாம்.

# கேரளா ஸோப்

சுத்தமான எண்ணெயே மூலப்பொருள்

## ஸான்டல்வுட்

இதில் கலந்துள்ள சந்தனம், கஸ்கஸ் தைலங்களின் திவ்விய பரிமளம் ஸ்நானத்திற்குப் பிறகு வெகுநேரம் நீடித்திருக்கிறது

தயாரிப்பாளர்கள் —

**கேரளா ஸோப் இன்ஸ்டிட்யூட்**
**கள்ளிக்கோட்டை**

டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் அண்டு காமெர்ஸ்

**கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்**

SISTA'S - KS-2

ஜுவல் பதித்த கைக் கடிகாரங்கள்

**FOR 2 WEEKS ONLY**

*AT LESS THAN HALF PRICES*

EACH GTD. 10 YEARS

ALARM TIME PIECE

| | | | |
|---|---|---|---|
| 605 | ப்ரைசம் | ~~36/-~~ | 12/- |
| 605 | கபிரியர் | ~~36/-~~ | 16/8 |



| | | | |
|---|---|---|---|
| 606 | 15 ஜுவல் க்ரோம் | ~~76/-~~ | 38/ |
| 606 | 15 .. ரோல்டுகோல்டு | ~~86/-~~ | 43/ |



| | | | |
|---|---|---|---|
| 607 | 5 ஜுவல் க்ரோம் | ~~60/-~~ | 29/8 |
| 607 | 5 .. ரோல்டுகோல்டு | ~~74/-~~ | 34/8 |



| | | | |
|---|---|---|---|
| 608 | க்ரோம் கேஸ் | ~~26/-~~ | 13/- |
| 608 | உயர் ரகம் | ~~30/-~~ | 15/- |

ooo

தபால் செலவு தனி. இரண்டாக ஆர்டர் செய்வோருக்கு இலவசம்

**PIONEER WATCH Co**

POST BOX NO 11428 CALCUTTA

FAS-534

## நவ நாகரீக பெண்கள் விரும்புவது





# டி.எஸ்.ஆர். கோகுல் ஹேர் ஆயில்



**டி.எஸ்.ஆர் & கோ.**

**கும்பகோணம்.**

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டு:

சுராஜ் ஏஜன்ஸீஸ்

10, ஜானிபாட்சா சாஹிப் தெரு, சென்னை-14

கோவை, பாலக்காடு அண்டு நீலகிரிக்கு சோல் ஏஜண்டுகள்:

B. பாலபட்டாபி செட்டியார்

346, வைசியாள் தெரு, கோயமுத்தூர்

வடஆர்க்காடு ஜில்லாவுக்கு:

சேகர்ஸ், திருப்பத்தூர் (வ. ஆ.)

REGD. No. M. 4392



நாராயணன் கிப்ஸ் உபயோகிக்கிறான்—அவன் பற்கள் வெண்மையாகவும் ஒழுங்காகவும் இருக்கின்றன










## நீங்களும் கிப்ஸ் உபயோகிக்கிறீர்களா?

சாம்பல், கரி, இவைபோன்ற இதர கரகரப்பான பல்துலக்கும் வஸ்துக்கள் பற்களுக்கும் ஈறுகளுக்கும் ஹானி விளைவிக்கக்கூடும். நுரைபோல் மிருதுவான கிப்ஸ் டென்டிபிரிஸ் பற்களுக்கோ அல்லது ஈறுகளின் மிருதுவான பாகங்களுக்கோ ஒருபொழுதும் கெடுதல் செய்வதில்லை. கிப்ஸ் நீங்கள் எப்பொழுதும் ஒழுங்கான பற்களைப்பெற உதவுகிறது. வாய்க்கும் சுவாசத்திற்கும் புதுமணத்தை அளிக்கின்றது. மேலும் அதன் 3 கவர்ச்சிகரமான வர்ணங்களிலுள்ள டப்பிகளில் எதை தேர்ந்தெடுத்தாலும் உபயோகிக்க மிகவும் சௌகரியமாயிருக்கும்.




# கிப்ஸ் டென்டிபிரிஸ்

ஒழுங்கான முறையில் பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது

விலையோ சொற்பம்—பலநாட்கள் நீடித்துவரும்

GD. 31-178 TM